

ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடாதீஸ்வரர்களின்

# ஞானோபதேசாம்ருதம்

50/-



ஸ்ரீ ஸ்ரீ அபிநவவித்யாதீர்த்த மஹாஸ்வாமிகள்



அனந்தஸ்ரீ பாரதீதீர்த்த மஹாஸ்வாமிகள்










॥ श्री शृङ्गेरी श्रीजगद्गुरुमहासंस्थानम् ॥




श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य पदवाक्यप्रमाणपारावारपारीण

यमनियमासनप्राणायामप्रत्याहारधारणाध्यानसमाध्यष्टाङ्ग

योगानुष्ठाननिष्ठ तपश्चक्रवर्त्यनाद्यविच्छिन्न श्रीशङ्कराचार्य

गुरुपरम्पराप्राप्त षड्दर्शनस्थापनाचार्य व्याख्यानसिंहासनाधीश्वर

सकलनिगमागमसारहृदय सांख्यत्रयप्रतिपादक वैदिकमार्गप्रवर्तक

सर्वतन्त्रस्वतन्त्रादिराजधानी विद्यानगरमहाराजधानी

कर्णाटकसिंहासन प्रतिष्ठापनाचार्य श्रीमद्राजाधि

राजगुरुभूमण्डलाचार्य ऋष्यशृङ्गपुरवराधीश्वर तुङ्गभद्रातीरवासि

श्रीमद्विद्याशङ्कर पादपद्माराधक श्रीजगद्गुरु

श्रीमदभिनवविद्यातीर्थस्वामि गुरुकरकमलसञ्जात

॥ श्री जगद्गुरु शृङ्गेरी श्रीमद्भारतीतीर्थस्वामिभिः ॥

आस्तिकमहाजनेषु नारायणस्मरणपुरस्सरं विरचिता आशिषस्समुल्लसन्तु ।

सनातनधर्मोद्धरणाय वेदान्ततत्त्वप्रचाराय च कृतावताराः श्रीमच्छंकरभगवत्पादाचार्याःलोकानां सुलभावबोधाय नैकानि प्रकरणानि व्यरचयन् । तेषां पठनेन मननेन च वेदान्ततत्त्वं सम्यगवगन्तुं प्रभवन्ति लोकाः । भगवत्पादैः शृंगगिरिक्षेत्रे प्रतिष्ठापिते श्रीशारदापीठे सुरेश्वराचार्यप्रभृतयो महापुरुषाः व्यराजन्त । ते सर्वे लोकानुग्रहधिया नैकान् निबन्धान् निबबन्धुः । तेषामपि अध्ययनं अत्यन्तं बोधप्रदं भवति । सुरसरस्वत्या निबद्धानां तेषां भाषानुवादेन सह प्रकाशनं अतितरां लोकानुपकरिष्यति ।

अनेनैवाशयेन अस्मदत्यन्तप्रियशिष्य गुरुभक्तमणि श्रीरामसुब्रह्मण्यराजस्य धर्मपत्नी पवित्रान्तःकरणा परोपकारपरायणा श्रीमती सुदर्शनाम्बा तादृशान् कतिपयान्निबन्धान् द्रविडभाषानुवादपुरस्सरं प्रकाशयतीति विदित्वा मोदामहे । वयमिमं ग्रन्थमवालोकयाम । अयं ग्रन्थः तत्त्वजिज्ञासून् लोकान् भृशमुपकरिष्यतीति मन्महे ।

श्रीशारदाचन्द्रमौलीश्वरयोः कृपया एतद्ग्रन्थप्रकाशकाः अन्ये च सज्जनाः श्रेयःपारम्परीभिः समभिवर्धन्तामिति आशास्महे ।

शृंगगिरिः

धातृ भाद्रपदकृष्णसप्तमी गुरुवासरः

3.10.1996

इति नारायणस्मरणम्



# ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸம்ஸ்தானம்

## ஸ்ரீ ஜகத்குரு சிருங்கேரி ஸ்ரீ பாரதீதீர்த்த ஸ்வாமிகள் அருளிய

## ஸ்ரீமுகம்

ஆஸ்திக மஹாஜனங்களுக்கு நாராயண ஸ்மரணத்துடன் செய்யப்பட்ட ஆசீர்வாதங்கள் நன்கு விளங்கட்டும்.

ஸநாதன தர்மத்தை உலகில் நிலைநிறுத்துவதற்காகவும், உபநிஷத்துக்களில் உள்ள தத்வத்தை பிரசாரம் செய்வதற்காகவும் அவதாரம் செய்த ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாள், ஜனங்கள் ஸுலபமாக அறிந்து கொள்வதற்காக அநேக வேதாந்த பிரகரணங்களை இயற்றியுள்ளார்கள். அவைகளை வாசிப்பதாலும் அதன் கருத்துக்களை சிந்தனம் செய்வதாலும் ஜனங்களால் உபநிஷத்தத்வத்தை நன்கு அறிந்து கொள்ள முடியும். பகவத்பாதர்களால் சிருங்ககிரி க்ஷேத்ரத்தில் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ சாரதா பீடத்தில் ஸ்ரீஸுரேஸ்வராசார்யர் முதலான மஹா புருஷர்கள் விளங்கியுள்ளார்கள். அவர்கள் எல்லோரும் உலகிற்கு அருள்புரியவேணும் என்ற எண்ணத்துடன் பலகிரந்தங்களை இயற்றியிருக்கிறார்கள். அவைகளை வாசிப்பதும்கூட அதிக அறிவைக் கொடுக்கும். ஸம்ஸ்கிருத பாஷையில் இயற்றப்பட்ட அந்த கிரந்தங்களை தமிழ்மொழி பெயர்ப்புடன் கூட வெளியிடுவது ஜனங்களுக்கு மிகவும் உபகாரத்தைக்கொடுக்கும். இந்த அபிப்பிராயத்துடன் எங்களுடைய மிகவும் பிரிய சிஷ்யரான “குருபக்தமணி” ஸ்ரீ ராமசுப்ரமண்ய ராஜாவின் தர்மபத்னியும், தூய்மையான மனமுள்ளவரும் பிறருக்கு உபகாரம் செய்வதில் ஈடுபட்டவருமான ஸ்ரீ சுதர்சனாம்பா அப்பேறப்பட்ட சிலகிரந்தங்களை தமிழ் பாஷையில் அனுவாதத்துடன் வெளியிடு கிறார் என்பதை அறிந்து ஆநந்தமடைகிறோம். நாம் இந்த

# ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸம்ஸ்தானம்

## ஸ்ரீ ஜகத்குரு சிருங்கேரி ஸ்ரீ பாரதீதீர்த்த ஸ்வாமிகள் அருளிய

## ஸ்ரீமுகம்

ஆஸ்திக மஹாஜனங்களுக்கு நாராயண ஸ்மரணத்துடன் செய்யப்பட்ட ஆசீர்வாதங்கள் நன்கு விளங்கட்டும்.

ஸநாதன தர்மத்தை உலகில் நிலைநிறுத்துவதற்காகவும், உபநிஷத்துக்களில் உள்ள தத்வத்தை பிரசாரம் செய்வதற்காகவும் அவதாரம் செய்த ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாள், ஜனங்கள் ஸுலபமாக அறிந்து கொள்வதற்காக அநேக வேதாந்த பிரகரணங்களை இயற்றியுள்ளார்கள். அவைகளை வாசிப்பதாலும் அதன் கருத்துக்களை சிந்தனம் செய்வதாலும் ஜனங்களால் உபநிஷத்தத்வத்தை நன்கு அறிந்து கொள்ள முடியும் பகவத்பாதர்களால் சிருங்ககிரி க்ஷேத்ரத்தில் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ சாரதா பீடத்தில் ஸ்ரீஸுரேஸ்வராசார்யர் முதலான மஹா புருஷர்கள் விளங்கியுள்ளார்கள். அவர்கள் எல்லோரும் உலகிற்கு அருள்புரியவேணும் என்ற எண்ணத்துடன் பலகிரந்தங்களை இயற்றியிருக்கிறார்கள். அவைகளை வாசிப்பதும்கூட அதிக அறிவைக் கொடுக்கும். ஸம்ஸ்கிருத பாஷையில் இயற்றப்பட்ட அந்த கிரந்தங்களை தமிழ்மொழி பெயர்ப்புடன் கூட வெளியிடுவது ஜனங்களுக்கு மிகவும் உபகாரத்தைக்கொடுக்கும். இந்த அபிப்பிராயத்துடன் எங்களுடைய மிகவும் பிரிய சிஷ்யரான "குருபக்தமணி" ஸ்ரீ ராமசுப்ரமண்ய ராஜாவின் தர்மபத்னியும், தூய்மையான மனமுள்ளவரும் பிறருக்கு உபகாரம் செய்வதில் ஈடுபட்டவருமான ஸ்ரீ சுதர்சனாம்பா அப்பேற்பட்ட சிலகிரந்தங்களை தமிழ் பாஷையில் அனுவாதத்துடன் வெளியிடு கிறார் என்பதை அறிந்து ஆநந்தமடைகிறோம். நாம் இந்த

# ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸம்ஸ்தானம்

## ஸ்ரீ ஜகத்குரு சிருங்கேரி ஸ்ரீ பாரதீதீர்த்த ஸ்வாமிகள் அருளிய

## ஸ்ரீமுகம்

ஆஸ்திக மஹாஜனங்களுக்கு நாராயண ஸ்மரணத்துடன் செய்யப்பட்ட ஆசீர்வாதங்கள் நன்கு விளங்கட்டும்.

ஸநாதன தர்மத்தை உலகில் நிலைநிறுத்துவதற்காகவும், உபநிஷத்துக்களில் உள்ள தத்வத்தை பிரசாரம் செய்வதற்காகவும் அவதாரம் செய்த ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாள், ஜனங்கள் ஸுலபமாக அறிந்து கொள்வதற்காக அநேக வேதாந்த பிரகரணங்களை இயற்றியுள்ளார்கள். அவைகளை வாசிப்பதாலும் அதன் கருத்துக்களை சிந்தனம் செய்வதாலும் ஜனங்களால் உபநிஷத்தத்வத்தை நன்கு அறிந்து கொள்ள முடியும் பகவத்பாதர்களால் சிருங்ககிரி க்ஷேத்ரத்தில் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ சாரதா பீடத்தில் ஸ்ரீஸுரேஸ்வராசார்யர் முதலான மஹா புருஷர்கள் விளங்கியுள்ளார்கள். அவர்கள் எல்லோரும் உலகிற்கு அருள்புரியவேணும் என்ற எண்ணத்துடன் பலகிரந்தங்களை இயற்றியிருக்கிறார்கள். அவைகளை வாசிப்பதும்கூட அதிக அறிவைக் கொடுக்கும். ஸம்ஸ்கிருத பாஷையில் இயற்றப்பட்ட அந்த கிரந்தங்களை தமிழ்மொழி பெயர்ப்புடன் கூட வெளியிடுவது ஜனங்களுக்கு மிகவும் உபகாரத்தைக்கொடுக்கும். இந்த அபிப்பிராயத்துடன் எங்களுடைய மிகவும் பிரிய சிஷ்யரான "குருபக்தமணி" ஸ்ரீ ராமசுப்ரமண்ய ராஜாவின் தர்மபத்னியும், தூய்மையான மனமுள்ளவரும் பிறருக்கு உபகாரம் செய்வதில் ஈடுபட்டவருமான ஸ்ரீ சுதர்சனாம்பா அப்பேற்பட்ட சிலகிரந்தங்களை தமிழ் பாஷையில் அனுவாதத்துடன் வெளியிடு கிறார் என்பதை அறிந்து ஆநந்தமடைகிறோம். நாம் இந்த

கிரந்தங்களை பார்த்தோம். இந்த கிரந்தங்கள் தத்வத்தை அறிய விருப்பமுள்ள ஜனங்களுக்கு மிகவும் உபகாரகமாக இருக்கு மென்று நினைக்கிறோம்.

ஸ்ரீ சாரதா சந்திரமௌளீசுவர கிருபையால் இந்த கிரந்தத்தை வெளியிட்டவர்களும் மற்றும் ஸாது ஜனங்களும் தொடர்ந்து சிரேயஸ்ஸைப்பெற்று மேன்மையுற வேண்டு மென்று ஆசீர்வதிக்கிறோம்.

சிருங்ககிரி
3.10.96

நாராயணஸ்மரணம்

# பதிப்புரை

பிரபல தொழிலதிபராகவும் தர்ம சிந்தனையுடனும் ஆத்ம சிந்தனையுடனும் பலவித நற்பணிகளில் ஈடுபட்டு வந்த என்பிதா ஸ்ரீராமஸ்வாமி ராஜா அவர்களின் மூத்த புத்திரியும் ஸ்ரீ N. K. ராமராஜு அவர்களின் பார்யையும் எனது மூத்த சகோதரியுமான ஸ்ரீமதி லிங்கம்மாள் அவர்களின் முதலாவது ஆண்டு நினைவு மலராக "*ஸ்ரீ சிருங்கேரி சாரதா* பீடாதீஸ்வரர்களின் ஞானோப தேசாம்ருதம்" என்னும் இச்சிறந்த நூல் வெளியிடப்படுகிறது. ஸ்ரீமதி லிங்கம்மாள் அவர்களும் தந்தையைப்போலவே ஈசுவர பக்தி, குருபக்தி, பரோபகாரசிந்தை, ஸத் காரியங்களில் ஈடுபாடு முதலான பண்பாடுகள் நிறைந்து விளங்கினார். எங்கள் குடும்பத்திற்கு சிருங்கேரி ஜகத்குரு ஆசார்யாளிடம் மிகுந்த பக்தி உண்டு. இந்த ரீதியில் ஸ்ரீமதி லிங்கம்மாள் அவர்களும் குரு தேவதாபக்தியுடன் ஆசார்யாள் கைங்கர்யத்திற்கும் மற்றும் பல இடங்களில் நடக்கும் தர்ம காரியங்களுக்கும் தாராளமாக பொருள் உதவி செய்து நடத்திவைப்பதும் இவர்களுக்கு இயற்கையாக அமைந்திருந்தது. சிருங்கேரி ஆசார்யாள் ராஜபாளையம் விஜயம் செய்யும் போதெல்லாம் தன் குடும்பத்தினருடன் சேர்ந்து தமது கிருஹத் திற்கும் ஆசார்யாளை வரவழைத்து பூஜித்து அவர்களுடைய திவ்யசரணாரவிந்தங்களால் தங்களையும் கிருஹத்தையும் பவித்ர மாக்கிக்கொண்டவர்கள்.

இவர்கள் தான் மட்டுமல்லாமல் தங்கள் குடும்பத்தினரையும தெய்வபக்தி, குருபக்தி முதலான நற்குணங்கள் நிறைந்தவர் களாகச் செய்துள்ளார்கள். ஒருவன் நற்குணங்களுடனும் நல்லறிவுடனும் விளங்கினால் அதற்கு தாய், தந்தை, குரு இம்மூவரின் உபதேசம் காரணம் என்று சொல்வார்கள். எங்கள் குடும்பத்தினருக்கு தாயாகவும் தந்தையாகவும் இருந்து நற்போதனைகள் செய்து ஒவ்வொருவரையும் நல்ல பண்பாடுள்ளவர்களாகச் செய்துள்ளார்கள். இவரது புத்திரியும் எனது பார்யையுமான ஸ்ரீமதி சுதர்சனா ஈசுவர கிருபையாலும் ஸத் குருவின் அருளாலும் தன் தாய் ஸ்ரீமதி லிங்கம்மாளின் நினைவு மலராக எல்லோருக்கும் உபகாரப்படும் படியாக வேதாந்த நூல்களை பிரசுரிக்க வேண்டுமென்று எண்ணி

சிருங்கேரி ஜகத்குரு பரம்பரையில் வந்துள்ள ஆசார்யர்களின் நூல்களையும் உபதேசங்களையும் வெளியிட வேண்டுமென்று தீர்மானித்து இப்புத்தகத்தில் சிருங்கேரி பீடாதிபதிகளால் அருளிச்செய்த ஆத்ம விசாரத்தை வரிசையாக தொகுத்து தயார் செய்து கொடுத்தார். அதன்படியே தமிழுரையுடன் வெளியிடப்படுகிறது.

இதில் முதலாவதாக உள்ள சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீபாரதிதீர்த்த ஸ்வாமிகளின் உபதேசத்தில் ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கு அடிப்படை ஸாதனமான கர்மயோகத்தைப் பற்றிக்கூறுகிறார்.

இரண்டாவதாக ஸ்ரீ அபிநவவித்யாதீர்த்த ஸ்வாமிகள் கர்மயோகத்தால் சித்த சுத்தி பெற்றவன் ஆத்மவிசாரம் செய்வதற்கு கைக்கொள்ள வேண்டிய நித்யாநித்யவஸ்து விவேகம், இஹாமுத்ரார்த்த பலபோக விராகம், சமாதிஷட்கம் முமுக்ஷுத்வம் என்னும் நான்கு ஸாதனங்களை விரிவாக விளக்கிக்காட்டுகிறார்.

மூன்றாவதில் ஸ்ரீ சந்திரசேகரபாரதி மனிதப்பிறவியின் உயர்வைக்காட்டி இப்பிறவியிலேயே பூர்ணவைராக்யத்துடன் ஆத்ம ஞானம் பெற்றால் தான் நித்யாநந்தம் கிடைக்கும் என்பதை காட்டி நான்கு தகுதிகள் பெற்றவன் உடனே செய்ய வேண்டிய சிரவணம், மனனம், நிதித்யாஸனம் இவைகளை விளக்கிக் காட்டுகிறார்.

நான்காவதில் ஸ்ரீ ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ஹ பாரதி சுவாமிகள் ஆத்மவிசாரம் செய்பவன் உறுதியான வைராக்யத்துடன் தர்மார்த்த காமங்கள் ஸாலோக்யம் ஸாமீப்யம் ஸாரூப்யம் ஸாயுஜ்யம் முதலான பலன்களில் ஆசை கொள்ளாமல் மோக்ஷம் என்னும் முக்ய புருஷார்த்தத்தையே லக்ஷ்யமாகக் கொண்டு தீவிர விசாரம் செய்ய வேண்டும் என்பதை காட்டுகிறார்.

ஐந்தாவதில் ஸ்ரீ ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகள் ஆத்ம விசாரத்தில் முக்ய பகுதியான பஞ்சகோச விவேகத்தை காட்டுகிறார். அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஜ்ஞானமயம், ஆநந்தமயம் என்னும் ஐந்து கோசங்களையும் ஒவ்வொன்றாக ஆத்மாவல்ல என்று விலக்கு மிஞ்சுகிற தன்னை ஆத்மாவென்று அறிய வேண்டும்.

ஆறாவதான ஸ்ரீ ஸ்ரீ சுரேஸ்வராச்சாரியாள் பஞ்சீகரண வார்த்தகத்தில் பிரஹ்மத்தைத் தவிறவேறாக பிரபஞ்சம் கிடையாது, அது பொய்த்தோற்றம் என்று கூறிபிரஹ்மம் ஒன்றே ஸத்யம் என்பதை தீர்மானிக்கிறார்.

ஏழாவதில் ஸ்ரீ ஆதிசங்கரபகவத்பாதாசார்யாள் இதுவரை காட்டிய விசாரங்களால் மிஞ்சி நிற்கிற ஆத்மாவும் பிரஹ்மமும் லக்ஷணங்கள் ஒன்றாக இருப்பதால் ஒன்றுதான் வேறல்ல என்பதை காட்டி ஜீவ பிரஹ்மைக்யத்தை உபதேசித்து அதை அனுஸந்தானம் செய்யும் முறையை காட்டுகிறார்.

இந்த நூலை அச்சிடும் சமயம் மிகுந்த பொறுப் புணர்ச்சியுடன் தவறுகளை திருத்தி பிழையில்லாமல் சுத்தமான பதிப்பு வெளிவருவதற்கு பேருதவி செய்துள்ள பிரஹ்ம ஸ்ரீ K. S. வெங்கட்ராம சாஸ்திரிகள் அவர்களுக்கு என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஸத் காரியம் நிறைவேறுவதற்கு அருள் புரிந்தும் எங்களை உத்ஸாஹப்படுத்தியும் ஸ்ரீமுகம் தந்தும் எங்களை அநுக்ரகித்த சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ ஸந்நிதானம் ஸ்ரீபாரதிதீர்த்த ஸ்வாமிகளின் திவ்ய சரணாரவிந்தங்களில் எங்கள் பக்தி விநயபூர்வகமான பிரணாமங்களை ஸமர்பிக்கிறோம். ஆஸ்திக பக்தர் எல்லோரும் இதை வாசித்துப் பயன்பெற வேண்டுமாய் கேட்டுக்கொள்கிறேன்.

வணக்கம்.

"ராமமந்திரம்"
இராஜபாளையம்.
08.12.96

**P. R. ராமசுப்பிரமணிய ராஜா**

# முன்னுரை

## K. S. வெங்கட்ராம சாஸ்திரிகள்

ஸ்ரீ ஆதிசங்கரபகவத்பாதாசார்யாளால் சிருங்கேரியில் முதன்முதலாக ஸ்தாபிக்கப்பட்ட தக்ஷிணாம்னாய ஸ்ரீ சாரதா வியாக்யானபீடத்தின் அதிபதிகளாக விளங்கிய, ஜகத்குரு பரம்பரையில் வந்துள்ள பல ஆசார்யர்களின் கிரந்தங்களும் உபதேசங்களும் அடங்கிய இந்நூல் ராஜபாளையம் குருபக்தமணி ஸ்ரீ P. R. ராமசுப்ரமண்ய ராஜா அவர்களால் தமது மூத்த ஸஹோதரியான ஸ்ரீமதி லிங்கம்மாள் அவர்களின் முதலாவது ஆண்டு நினைவு மலராக வெளியிடப்படுகிறது. இதில் கண்டுள்ள நூல்களையும் உபதேசங்களையும் பொருக்கி எடுத்து வரிசைப்படுத்தி தொகுத்துத்தந்தவர் ஸ்ரீராமஸ்வாமி ராஜா அவர்களின் மூத்த புத்திரியான ஸ்ரீமதி லிங்கம்மாள் அவர்களின் புத்திரியும் ஸ்ரீராமசுப்ரமண்ய ராஜா அவர்களின் பார்யையுமான ஸ்ரீமதி சுதர்சனா அவர்கள். இந்த குடும்பத்தில் யாவரும் சிருங்கேரி ஜகத்குருக்களிடம் மிகுந்த பக்தியும் நற்பணிகளில் ஈடுபாடும் ஔதார்யமும் ஈசுவரபக்தியும் கூடியிருப்பதுடன் வேதாந்த விஷயங்களைத்தெரிந்து கொள்வதில் மிகுந்த ஆவலும் கொண்டவர்கள்.

சிருங்கேரி ஜகத்குருக்கள் யாவரும் ஞானானந்தானுபவ முள்ளவர்களாயும் ஜீவன் முக்தர்களாயும் விளங்கிவருவதால் அவர்களிடம் நிரதிசயமான பக்தியும் அவர்களின் அருளாலும் உபதேசத்தாலும் வேதாந்த கிரந்த பரிசயமும் உள்ளதால் தான் சிருங்கேரி ஜகத்குருக்களின் கிரந்தங்களைப் பொருக்கி எடுத்து வரிசைப்படுத்தவும் முடிந்தது. வேதாந்த நூல்களையும், தர்மத்தையும், பக்தியையும் வளர்க்கக்கூடிய பல நூல்களையும் சேகரித்து கிரந்தகோசம் ஒன்று ஸ்ரீமதி லிங்கம்மாள் பெயரில் ராஜபாளையத்தில் நிறுவப்பட்டு சிருங்கேரி ஜகத்குரு பாரதிதீர்த்த ஸ்வாமிகளால் திறந்து வைக்கப்பட்டது.

இத்தொகுப்பில் எல்லா நூல்களுமே தமிழ் உரையுடன் கூடியது. ஸ்ரீசங்கரபகவத்பாதாசார்யார் அருளிய 'பிரஹ்மானு

சிந்தனம்' நாகரியிலும் தமிழிலும் மூலமும் பதவுரை கருத்துரைகளுடனும் கூடியது. உபநிஷத்ஸித்தாந்தமான ஜீவபிரஹ்மைக்யத்தை பலவிதமாக விளக்கி இதை அனுசிந்தனம் செய்யும் முறையையும் பிரஹ்மஞானிகளின் அனுபவத்தையும் கூறுவதுடன் இத்தகைய அனுபவமில்லாதவர்களும் 'பிரஹ்மைவாஹம் நஸம்ஸாரீ முக்தோஹமிதிபாவயேத்அசக்நுவன்பாவயிதும் வாக்ய மேதத்ஸதாதப்யஸேத்' (நான் பிரஹ்மம் தான் ஸம்ஸாரியான ஜீவனல்ல முக்தன்) என்ற வாக்யத்தை எப்பொழுதும் சொல்ல வேண்டும் என்று உபதேசிக்கிறார். இதனால்தான் பல பெரியோர்கள் "சிவோஹம் பிரம்ஹைவாஹம் ஸச்சிதாநந்தோஹம்" என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பார்கள். இந்த ரீதியில்தான் தினமும் மூன்று வேளைகளிலும் நாம் செய்யும் ஸந்த்யாவந்தனத்தில் பொருள் தெரிந்தோ தெரியாமலோ 'அஸாவாதித்யோ பிரஹ்ம, ப்ரஹ்மைவாஹமஸ்மி' என்று சொல்கிறோம். இதனால் ஞான பிரதிபந்தகமான பாபங்கள் விலகி சித்தசுத்தி மூலமாக ஞானம் பெறமுடியும் சிவனும் ஹரியும் குருவும் ஒன்று தான் என்ற தத்வத்தை கடைசியில் உபதேசிக்கிறார். இந்த பிரஹ்மானு சிந்தன கிரந்தத்தை சிருங்கேரி ஆசார்யர்கள் தினமும் அநுஸந்தானம் செய்வார்கள்.

ஜீவனும் பிரஹ்மமும் ஒன்றாக இருந்தாலும் நாம் நேரில் காணும் நாநாவிதமான பிரபஞ்சமிருக்கும் வரை அத்வைத ஸித்தாந்தம் எப்படி நிலைக்கும் என்ற ஐயத்தைப்போக்குகிறது ஸ்ரீசங்கராசார்யார் எழுதிய பஞ்சீகரணமும் ஸுரேஸ்வராசார்யார் எழுதிய பஞ்சீகரணவார்த்திகமும். நாம் நேரில் பார்ப்பதெல்லாம் உண்மை என்று சொல்ல முடியாது. பிரஹ்மத்திலிருந்து மாயையால் உண்டாகும் ஐந்து பூதங்களின் காரியமானதால் பிரபஞ்சம் முழுவதும் பொய்யான தோற்றமே தவிர உண்மைப்பொருளல்ல. பிரஹ்மம் ஒன்றே உண்மைப் பொருள் என்று உபதேசிப்பதால் அத்வைதம் ஸித்திக்கிறது.

ஸ்ரீவித்யாரண்யரின் பஞ்சகோச விவேகத்தில் நான் என்று எண்ணும் தேஹம் முதலான ஐந்து கோசங்களும் ஆத்மாவல்ல என்பதைத்தக்க யுக்திகளால் விளக்கி கடைசியில் மிஞ்சுகிறதும் இதை எல்லாம் அறிகிறதுமான ஸாக்ஷிஸ்வரூபமே ஆத்மா. இது தன் ஸ்வரூபமானதால் தன்னால் விலக்க முடியாது. அனுப

வரூபமானதால் இதை அறியமுடியாது தன் ஸ்வரூபமானதால் தெரியாது என்றும் சொல்ல முடியாது. இந்த ஆத்மா ஸத்யஞானானந்த ரூபமானதால் இது பிரஹ்மம் தான் இரண்டும் வெவ்வேறல்ல அக்ஞான நிலையில் ஜீவனாகத்தோன்றும் வஸ்து தான் ஞானநிலையில் பிரஹ்மமாகத் தெரிகிறது என்று தீர்மானிக்கிறார்.

புராணங்களில் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்று புருஷார்த்தங்களை நான்குவிதமாகக் கூறியிருந்தாலும் மோக்ஷம் ஒன்று தான் மிகச்சிறந்தது முக்யமானது. தர்மம் இம்மை மறுமைஸுகங்களுக்கும் சித்தசுத்தி மூலமாக மோக்ஷத்திற்கும் ஸாதனமாயிருப்பதால் கௌணமாக புருஷார்த்தம் என்று கூறப்படுகிறது. அர்த்தமும் காமமும் தர்மத்திற்கு ஸாதனமாக இருப்பதால் இவையும் முக்யமான புருஷார்த்தமல்ல மேலும் இவை உண்டாகி அழிவதால் நித்யமல்ல. புருஷன் விரும்புகிற ஸுகமாகவோ, துக்கமின்மையாகவோ இல்லாததாலும் இவை முக்ய புருஷார்த்தமல்ல இதே போல ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் என்பவையும் முக்யமல்ல. நாம் பிரஹ்மத்தை அறியாததால் தான் பந்தம். நானே பிரஹ்மம் என்று அறிந்தமாத்திரத்தில் பந்தம் விலகி முக்தனாக ஆகிறான் நாம் எப்பொழுதும் பிரஹ்மஸ்வரூபமாக இருப்பதால் இதை அறியத்தான் முயற்சிக்க வேண்டும் தானாகவே இருப்பது என்ற கைவல்யம் தான் முக்கியமான புருஷார்த்தம் என்பதை ஸ்ரீஸச்சிதாநந்த சிவாபிநவநரஸிம்ம பாரதீ ஸ்வாமிகள் தமது புருஷார்த்த நிர்ணயத்தில் உபதேசிக்கிறார்.

ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள் தமது உபதேசத்தில் வேதத்தில் விதிக்கப்பட்டுள்ள தர்மத்தைச் செய்வதிலும் ஞானத்தை அடைவதிலும் மனிதனுக்கே அதிகாரம் உள்ளதால் மனிதப்பிறவியே சிறந்தது. இது ஸுலபமாகக்கிடைக்காது மனிதன் மனிதனாக நடக்க வேண்டும் பசுவாதி மிருகங்களைப்போல் நடக்கக்கூடாது எல்லா விஷயங்களையும் நம்மனதால் அறியமுடியாது நம்புத்திக்கு எட்டாத விஷயத்தில் ஹிதத்தையே உபதேசிக்கிற வேதத்தில் சொல்லியபடியும் பெரியோர்களின் உபதேசப்படியும் நடக்க வேண்டும். விஷயங்களில் ஆசை கொள்ளக்கூடாது. அதனால் துக்கக்கலப் பில்லாத அழிவற்ற சுகம் கிடைக்காது. விசாரித்துப் பார்த்தோ

மானால் விஷயங்களால் கிடைக்கும் ஸுகம் ஸுகமே அல்ல துக்கம் விலகுவதையே பிராந்தியால் ஸுகமென்று எண்ணு கிறோம் நல்ல தூக்கத்தில் விஷயமில்லாததால் தான் துக்கக்கலப்பில்லாத ஆநந்தம் கிடைக்கிறது. விஷயம் என்ற சொல்லுக்கே கட்டுப்படுத்துவது என்று பொருள் நித்யானந்தம் ஆத்ம ஞானத்தால் தான்கிடைக்கும் இதை மனிதன் தான் அடைய முடியும் ஞானமடைய முயற்சித்தால் தான் மனிதப்பிறவி பயனுள்ளதாக ஆகும் என்றுகூறுகிறார்.

ஸ்ரீ அபிநவவித்யாதீர்த்த ஸ்வாமிகள் மோக்ஷத்திற்கு ஸாதனமானஆத்ம ஞானம் பெற ஸத்குரு மூலமாக ஆத்மவிசாரம் செய்ய வேண்டும். அதற்கு விவேகம், வைராக்யம், சமாதிஷட்கம், மோக்ஷமடைய தீவிரவிருப்பம் என்னும் நான்கு தகுதிகளை பெற்றிருக்க வேண்டும் இவைகளில்லாமல் விசாரம் செய்தால் ஞானம் கிடைக்காது என்று கூறி இந்த நான்கு ஸாதனங்களை விரிவாக விளக்கிக்கூறுகிறார் சரிரத்தில் நான் என்ற எண்ணமிருப்பதால் பந்த மேற்படுகிறது. இது அத்யாஸம் பொய்யான அறிவு இதை உண்மையான அறிவால் தான் போக்க முடியும் நான்கு தகுதிகளைப்பெற்று விசாரம் செய்து ஆத்மஞானம் பெற்றுவிட்டால் பொய்யான அத்யாஸம் விலகி எல்லாத்துன்பங்களும் நீங்கி ஆத்மானந்தத்தையடைகிறான். இதற்கு ஸத்குருவின் உபதேசமும் ஈசுவரகிருபையும் வேண்டும் என்று உபதேசம் செய்கிறார்.

ஸ்ரீ பாரதீதீர்த்த மஹாஸ்வாமிகள் தமது உபதேசத்தில் உலகில் தர்மத்தையும் ஞானத்தையும் நிலைநிறுத்துவதற்கு காலடியில் அவதரித்து சிருங்கேரியில் சாரதாம்பிகையையும் தக்ஷிணாம்னாய ஸ்ரீ சாரதாபீடத்தையும் ஜகத்குரு பரம்பரையை யும் ஸ்தாபித்த சங்கரபகவத்பாதரின் பெருமைகளைக்கூறி அவருடைய உபதேசத்தை பின்பற்ற வேண்டுமென்று கூறுகிறார். ஒவ்வொருவனும் முற்பிறவிகளில் தான் செய்துள்ள நல்வினை தீவினைப் பயன்களையனுபவிக்கிறான். இதற்கு ஈசன் காரணமல்ல நாம் நல்ல காரியங்களை செய்வதற்கு நல்ல புத்தியைக்கொடுக்கும்படி ஈசனையும் தேவர்களையும் பிரார்த்திக்க வேண்டும் நம் கடமைகளை தவறாமல் சரிவரச்செய்து அவர்களின் அருளைப்பெற முயற்சிக்க வேண்டும். இதில் ஸந்தேஹம் வந்தால் பெரியோர்களையண்டி

அவர்களின் உபதேசத்தால் ஸந்தேஹத்தைப் போக்கிக்கொண்டு அவர்கள் கடைப்பிடிக்கும் வழியில் நாம் செல்ல வேண்டும் சிருங்கேரி ஜகத்குரு பரம்பரையில் வந்துள்ள வித்யாரண்யர் முதலான ஆசார்யர்கள் எல்லோரும் பற்றற்றவர்களாக இருந்தும் குருவின் ஆகைஞைப்படியும் சிஷ்யர்களின் நலனுக்காகவும் ஸ்ரீ சாரதா சந்திர மௌளீசுவர பூஜை முதலான ஸம்பிரதாயங்களை யனுஷ்டித்து வருகிறார்கள். அவர்களிடம் பக்தியுடன் உபதேசங்களைப் பின்பற்றி நடந்தால் எல்லா நலன்களையும் பெறலாம்.

இவ்வாறு ஏழு கிரந்தங்களடங்கிய "சிருங்கேரி ஸ்ரீசாரதாபீடாதீஸ்வரர்களின் உபதேச ஞானாமிருதம்" என்னும் இந்நூலை வெளியிட்டு ஆஸ்திக பக்தர்களுக்கு பரமோபகாரம் செய்துள்ள குருபக்தமணி ஸ்ரீ P.R. ராமசுப்ரமண்யராஜா அவர்களுக்கு நாம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம். எல்லோரும் இதை வாசித்துப்பயன் பெற வேணுமாய்கேட்டுக் கொள்கிறேன்.

****

## பொருளடக்கம்

பட்டாபிஷேக வைபவத்தன்று (19.10.89) சிருங்கேரியில்

# அனந்தஸ்ரீ பாரதீதீர்த்த மஹாஸ்வாமிகள் அனுக்ரஹித்த அருளுரை

(தமிழாக்கம்)

வந்தே குரூணாம் சரணாரவிந்தே ஸந்தர்சிதஸ்வாத்மஸுகாவபோதே
ஜனஸ்யயே ஜாங்கலிகாயமானே ஸம்ஸார ஹாலாஹல மோஹசாந்த்யை

ஸ்ரீ பகவத்பாதருடையவும், லோகமாதா ஸ்ரீ சாரதா பரமேச்வரியினுடையவும் அருளினால் ஸ்ரீ சங்கரபகவத் பாதாளால் ச்ருங்கேரியில் ஸ்தாபிக்கப்பட்ட தக்ஷிணாம்னாய ஸ்ரீசாரதாபீடம் அவிச்சின்னமான குரு பரம்பரையுடன் கூடியதாக விளங்குகிறது. நாம் நினைவில் என்றும் போற்றும் நமது பெருமதிப்புக்குரிய ஸ்ரீ ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹாஸ்வாமிகள் இந்த ஆசார்ய பரம்பரையில் மகுடமணியாக விளங்குவதோடு தமது பெயரை நிலைநாட்டும் வகையில் சிறந்து விளங்கி வந்தார்கள். இந்தியாவில் பல்வேறு பாகங்களிலும் பரவியுள்ள பெருவாரியான பக்தர்களின் மதிப்பு, மரியாதை, பேரன்பு மற்றும் நம்பிக்கைக்கும் பாத்திரர்களாக விளங்கி யுள்ளார்கள். அப்பேற்பட்ட சிறந்த ஞானியின் சிஷ்யர்கள் என்று கூறிக்கொள்வதிலே நாம் மிகவும் பெருமையடைகின்றோம்.

நம் ஸநாதன தர்மத்தைப் பரப்புவதற்காக ஆதிசங்கரபகவத்பாதாளால் ஸ்ரீச்ருங்கேரி சாரதா பீடம் நிறுவப் பட்டுள்ளது. நம் நாட்டில் ஸநாதன தர்மம் தழைத் தோங்கியிருக்கும் காலம் வரை நாடு செழிப்புற்று விளங்கும். தர்மத்திற்குரிய இடம் இல்லாது போனால், நாடு தழைக்காது. எவ்வளவுதான் விஞ்ஞானரீதியிலே நாம் முன்னேறினாலும், எவ்வளவுதான் பொருளாதாரத்துறையிலே நாம் சிறந்து விளங்கினாலும், தர்மத்திலே நாம் அவநம்பிக்கை வைத்து, அதை வெறுப்போமானால் நாம் பெரியஅபாயத்தில் சிக்குவதோடு, நமக்கு பெரிய அழிவைத் தேடிக்கொள்வதாக அமையும். நம் நாட்டிலே நாம் விஞ்ஞான, பொருளாதார ரீதியில் முன்னேறிச்

செல்லும் போது நம் வாழ்க்கையில் தர்மத்திற்கு என்ன இடம் இருக்கப்போகிறது? என்று சிலர் கேட்கிறார்கள். தர்மத்தின் இயல்பையும், தர்மத்தின் சிறப்பையும், தர்மத்திற்கு உறைவிடமான வேதத்தின் தன்மையையும் அறியாத காரணத்தால் இம்மாதிரி கேள்விகள் கேட்கப்படுகின்றன. நம் இந்தியக் கலாசாரத்தைப் பற்றிய நம் அறியாமையை புலப்படுத்துவதாக இக்கேள்விகள் அமைந்துள்ளன. தாம் நினைப்பதுதான் சரியென்று எண்ணும், புத்தி பேதலித்த மனிதர்கள் இத்தகைய கேள்விக்கணைகளை தொடுக்கிறார்கள்.

பல்லாயிரக்கணக்கான வருடங்களுக்கு முன், வேதம் முழங்கியது. "தர்மோ விச்வஸ்ய ஜகத: பிரதிஷ்டா". (அகிலம் முழுவதற்கும் நிலையான தன்மைக்கும் உயிருடன் விளங்கும் தன்மைக்கும் ஆதாரமானது தர்மம்) என்று. ஸ்ரீகிருஷ்ண பகவான் பகவத் கீதையில் கூறியுள்ளதை நாம் என்றும் மறக்கலாகாது.

தேவான் பாவயதாநேந தே தேவா பாவயந்து வ: ।
பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரம் அவாப்ஸ்யத ॥

நாம் இவ்வாறு தேவர்களை போஷிக்க, தேவர்கள் நம்மை போஷிக்கிறார்கள். ஒருவருக்கொருவர் போஷிப்பதன் மூலம் பெரும் சிறப்பு எய்தப்படுகிறது.

வேத உருவில் பகவான் நமக்கு தர்மத்தை அருளியுள்ளார். தர்மம் என்னவென்று நமக்குக் கூறியுள்ள அறிவுரை தான் வேதம். சிலர் வினவலாம், "கடவுள் நம் முன் தோன்றுகிறாரா? நம் முன் வந்து அவர் ஏதாவது கூறுகிறாரா என்ன? கடவுளின் அருளுக்கு என்ன அர்த்தம்? பொது ஜனங்களை ஏமாற்று வதற்காகச் சிலர் கூறிய கூற்றாக இவை தென்படுகின்றன". இந்த நவீன காலங்களிலே சில புத்திசாலிகள் இம்மாதிரியாகக் கூறலாம். கடவுளின் அருள் என்பது என்னவென்று நம் முன்னோர்கள் நமக்குத் தெளிவு படக்கூறியுள்ளனர்.

ந தேவா தண்டமாதாய ரக்ஷந்தி பசுபாலவத்
யம் ஹி ரக்ஷிதுமிச்சந்தி புத்யா ஸம்யோஜயந்தி தம்

மாடுகளை மேய்ப்பவன் தன் கையில் கோலுடன் மாடுகளை விரட்டுவது போன்று கடவுள் தோன்றுவதில்லை. "யம் ஹி ரக்ஷிதுமிச்சந்தி புத்யா ஸம்யோஜயந்தி தம்" நாம் நற்செயல் ஆற்றுவதற்குரிய ப்ரேரணையை பகவான் அருளுகிறார். நாம் விரும்பும் எச்செயலுக்கும் ஓர் உள்ளுணர்வு நம்மை உந்துகிறது. அவ்வாறின்றி நாம் செயல்படுவதில்லை. இந்த உந்துதலை கடவுள் நமக்கு அருளுகிறார். அவன் அருளன்றி நற்செயல்கள் செய்வதிலே நாம் உந்தப்படுவது எங்ஙனம்? நாம் தீய செயல்கள் செய்யும் போது ஏற்படும் உந்தலுக்கு காரணம் என்ன? அதுவும் கடவுளால் தான் ஏற்படுகிறது. அவ்வாறானால். நாம் மிகவும் பெரிய நிலையில் வைத்துள்ள கடவுள், நம் பக்திக்கும் வழி பாட்டுக்கும் உரியவரான பகவான் நம்மை தீய செயல்கள் செய்ய ஏன் தூண்ட வேண்டும்? இதற்கு நம் சாஸ்திரங்கள் கூறுவது என்னவெனில், "புண்யோ வை புண்யேன கர்மணா பவதி பாப: பாபேன" நாம்முன் பிறவியில் செய்த கர்ம பலன்களை அனுபவித்தே தீரவேண்டும். அதற்காக உரிய ப்ரேரணைகளை (நல்லதோ, கெட்டதோ) நமக்கு பகவான் அளிக்கிறார். இதற்காக கடவுளை நாம் குற்றம் சாட்டவோ, நிந்திக்கவோ முடியாது.

இம்மாதிரியாக முன் பிறவியில் செய்த கர்மாக்களின் பயனை இப்பிறவியில் அனுபவிப்பது, இப்பிறவியில் செய்த கர்மங்களின் பயனை அடுத்த பிறவியில் அனுபவிப்பது என்ற இந்த தொடர்பு தொன்றுதொட்டே இருந்து வருகிறது. இந்த சம்சாரத்தின் தொன்மையை பகவான் வேதவியாசர் தன்னுடைய பிரம்ம சூத்ரங்களிலும், ஸ்ரீ சங்கர பகவத்பாதர் இந்த சூத்ரங் களுக்கான தன்னுடைய உரையிலும் விளக்கியுள்ளார்கள். ஆகவே, சம்சாரமாகிற இந்தத் தொடர்பு ஓட்டத்திலே ஒருவன் தனது செயல்களின் பயன்களை அனுபவிப்பது என்பது முறையற்றதாகவோ சாஸ்திர விரோதமாகவோ ஆகாது. ஆகவே கடவுளின்அருளைப்பெற ஆர்வமாக உள்ள நாம், கடவுளை திருப்தி செய்து சந்தோஷப்படுத்த விரும்பும் நாம், அந்த கடவுளால் நிர்ணயிக்கப்பட்டுள்ள தர்மத்தின் கொள்கைகளைத் தான் கடைப்பிடிக்க வேண்டும். கடவுள் நமக்கு பகுத்தறியும் சக்தியைக் கொடுத்திருக்கிறார். ஆகவே அதை சரியான முறையில் உபயோகிப்பது நம் பொறுப்பாகும். அதை சரியான முறையில் பயன்படுத்தாவிடில் தவறு நம்முடையதேயாகும்.

புராதன காலத்து முனிவர்கள் இதை ஓர் உதாரணம் மூலம் விளக்கியுள்ளார்கள். ஓர் தகப்பனார் தன் மகனுக்கு போரில் பயன்படுத்துவதற்காக ஓர் வாளை கொடுத்தார். ஆனால், அந்த வாலிபன் அதை கொடுக்கப்பட்ட நோக்கத்திற்காக அதாவது விரோதியை எதிர்ப்பதற்காக பயன்படுத்தவில்லை. ஆனால் அந்த வாளைக் கொண்டு தன் கழுத்தையே வெட்டிக்கொண்டு விட்டான். இது யாருடைய குற்றம்? இது அந்த தகப்பனாரின் குற்றமா? அல்லது உரிய பயனுக்காக அந்த வாளை உபயோகிக்காத அந்த மகனின் குற்றமா? அவன் அதை உகந்த காரணத்துக்காக பயன்படுத்தாமல் தவறான முறையில் உபயோகித்து தனக்கே அழிவை தேடிக்கொண்டு விட்டான். அது போன்று தர்ம நெறியை பின்பற்றுவதற்காகக் கொடுக்கப் பட்டுள்ள பகுத்தறிவைச் சரியான முறையில் உபயோகித்துப் புனித நூல்களிலே கூறப்பட்டுள்ள அறிவுரைகளைப் புரிந்து கொள்ளாமல் நமக்கே நாம் தீங்கு செய்து கொள்வோமேயானால் அது யாருடைய குற்றம்?.

"யாவஜ்ஜீவம் சுகம் ஜீவேத்
ருணம் க்ருத்வா க்ருதம் பிபேத்"

அதாவது, உயிருள்ளவரை வாழ்க்கையை நன்கு அனுபவி: கடன்பட்டாகினும் நெய்யைப் பருகு என்று வாழ்க்கை நடத்தி நம்முடைய செயல்களை யாரும் கவனிக்க மாட்டார்கள் என்று எண்ணி நம்மை நாமே ஏய்த்துக் கொள்வோமானால் அதற்கு யார் பொறுப்பாளியாவார்கள்? ஆகவே, மனிதன், கடவுளால் அருளப்பட்ட இந்தப் பகுத்தறிவின் சக்தியை உபயோகித்து நம் செயல்முறைகளைத் தீர்மானித்து நம் முன்னோர்கள் தர்ம நெறியை நம்முடைய நன்மைக்காகத்தான் வகுத்துள்ளார்கள் என்ற நம்பிக்கையுடன் அவர்களது அறிவுரைகளை பின்பற்றி நடக்க வேண்டும்.

சில சமயங்களில் நாம் எவ்வாறு செயல்பட வேண்டும் என்ற வகையில் நமக்கு சந்தேகம் ஏற்படலாம். ஒவ்வொரு வனுக்கும் சாஸ்திரங்களை ஆராய்ந்து தம் சந்தேகத்தைத் தவறில்லாமல் நிவர்த்தித்துக் கொள்ளும் திறமை இருந்துவிட முடியாது. இத்தகைய நிலையில் நாம் என்ன செய்ய வேண்டும் என்று உபநிஷத்துக்கள் கூறியுள்ளன. சாஸ்திரங்களைப் படித்து

உன் சந்தேகங்களைத்தெளிவுபடுத்திக் கொள்ளும் திறமை உனக்கு இல்லையானால், நீ பெரியோர்களின் வழியைப் பின்பற்றி நடக்க வேண்டும்.

பெரியோர்கள் என்றால் நல்ல அறிவாளிகளும், சாஸ்திரங்களை ஆராய யோக்யதையுள்ளவர்களுமே யாவார்கள். அவர்கள் வழி நீயும் செல்லலாம். அவ்வழியே சென்றால் நீ சிரேயஸை அடைவாய் என்று உபநிஷதங்கள் கோஷிக்கின்றன. இந்நாளில் அநேகம் பேர்களுக்கு சந்தேகங்கள் வருகின்றன. எல்லோருக்கும் சாஸ்திரங்களை ஆராய்ந்து சந்தேக நிவிருத்தி செய்துகொள்ளுதல் சாத்யமாகாது. அந்நிலையில் முன்னோர்கள் வழியையே சிறிதும் விசுவாசம் குறையாமல் பின்பற்ற வேண்டும் அதுவே நமக்கு சிரேயஸைக் கொடுக்கும் என்ற திட நம்பிக்கையுடன்

"யேநாஸ்ய பிதரோ யாதா: யேந யாதா: பிதாமஹா:
தேந யாயாத்ஸதாம் வர்த்ம தேந கச்சந் ந் துஷ்யதி"

உன் தகப்பன், பாட்டன் மற்றும் உன் முன்னோர்கள் பின்பற்றின வழியே உனக்கும் சிறந்ததாகும். முன்னோர்கள் யோசனையில்லாமல் சில காரியங்கள் செய்தார்கள் என்று நாம் சொன்னால், நாம் அவர்களைக் காட்டிலும் புத்திமான்கள் என்று எண்ணி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளுகிறோம். நம் முன்னோர்கள் அறிவற்றவர்கள் நாம் தான் அறிவாளிகள் என்று எண்ணிக்கொண்டிருந்தால் அதைவிட அறியாமை வேறொன்றுமில்லை. நம் முன்னோர்கள் தீர்க்கமாக யோசனை செய்யாமல் நாம் செல்லவேண்டிய வழியை வகுக்கவில்லை. தங்கள் அறிவு காட்டிய வழியில் தர்மத்தைப் பின்பற்றி அவர்கள் சிரேயஸை அடைந்தார்கள். ஆகையால் நாமும் அவர்களை பின்பற்றி அவ்வழியில் தான் செல்ல வேண்டும் என்ற தீர்மான புத்தியுடன் இருக்க வேண்டும்.

ஸ்ரீ சங்கர பகவத்பாதரின் குறிக்கோள் தர்ம பிரசாரம் எப்பொழுதும் நடந்து கொண்டேயிருக்க வேண்டும் என்பதே. நற்செய்கைகள் காலமுள்ளளவும் தொடர்ந்து நடக்க வேண்டும் என்பதே அன்னாரின் கனவு. நாம் அறிந்த தத்வஞானிகளுள் ஸ்ரீசங்கரரைப்போல் உயர்ந்தவர் யாருமில்லை என்றால்

மிகையாகாது. குறுகிய 32 வயதிற்குள் கன்யாகுமரியிலிருந்து காச்மீரம் வரை தர்ம பிரசாரம் செய்தது மட்டுமில்லாமல்,சதுராம்நாய பீடங்களையும் ஸ்தாபித்ததிலிருந்து, சங்கரரின் ஒப்பில்லா அறிவாற்றலும் தீர்க்கதரிசனமும் வெளிப்படவில்லையா?அந்த அறிவாற்றலின் விளைவுதான் புனித சிருங்கேரியில் ஸ்தாபிக்கப்பட்ட தக்ஷிணாம்நாய சாரதா பீடம். பிரம்மவித்யா ஸ்வரூபிணியும் எல்லா அறிவுக்கும் உறைவிடமுமான ஜகன்மாதா ஸ்ரீசாரதாம்பிகையை இங்கு (சிருங்கேரியில்) பிரதிஷ்டை செய்தார். எந்த சிரேஷ்டமான முகூர்த்தத்தில் இந்த பீடத்தை நிறுவினார் என்று அறிய நமக்கு ஆற்றல் இல்லை. அவிச்சின்ன பரம்பரையாக இப்பீடத்தின் ஆசார்யர்கள் வந்ததிலிருந்தே அந்த வேளையின் உயர்வு தெரிகிறது. இம்மடத்துக்கு எவ்வளவோ கஷ்ட நிலைமைகளும், இக்கட்டுகளும் வந்திருக்கின்றன. இந்த காலகட்டங்களிலும் அவிச்சின்னமான குரு பரம்பரை பாதிக்கப்படாமல் தடங்கலில்லாமல் நம் காலம் வரை வந்திருக்கிறது.

சிருங்கேரி மடத்தின் சரித்திரத்தில் கர்நாடக சாம்ராஜ்ய பிரதிஷ்டாபனாசார்யர் என்று புகழ்பெற்ற ஸ்ரீ வித்யாரண்யரின் காலம் ஒர் பொற்காலம் என்பதை யார் தான் அறியார்? பலர் என்னிடம், விரக்தியை மேற்கொண்ட ஒர் சந்யாசிக்கு இம்மாதிரி பட்டாபிஷேகம் நடப்பதெல்லாம் முரணாக இல்லையா? என்று கேட்டார்கள். இம்மாதிரி சடங்குகள் லோக விஷயங்களில் மூழ்கியுள்ளவர்களுக்கு பொருந்துமேயல்லாது அதற்கு நேர்மாறான முற்றும் துறந்த சந்யாசிக்குப் பொருந்துமா என்று கேட்டார்கள்.

உண்மையில், ஸ்ரீ சங்கர பகவத்பாதர் காலத்திலும், அதையடுத்த காலத்திலும் அரச சின்னங்களோ, பட்டாபிஷேகம் போன்ற வைபவங்களோ சிருங்கேரி ஆசார்யர்களுக்கு இருந்ததில்லை. ஸ்ரீசங்கர பகவத்பாதர் காலம் முதல் ஸ்ரீ வித்யாரண்யர் காலம் வரை நம் ஆசார்யர்கள் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்வதிலும் ஞானத்தை நாட வந்தவர்களுக்கு அதற்குரிய வழி காட்டுவதிலுமே ஈடுபட்டிருந்தார்கள். கர்நாடக சிம்மாஸன பிரதிஷ்டாபனாசார்யரான ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளும் கூட மஹா தபஸ்வியாகவே இருந்தார். இதை மனதில் கொள்ள வேண்டும். மற்ற ஆசார்யர்கள் ஏன் வித்யாரண்ய ஸ்வாமிகள்

போல வெளி ராஜ்ய விவகாரங்க்ளில் ஈடுபடவில்லை என்று பலர் கேட்கிறார்கள். ஸ்ரீவித்யாரண்ய சுவாமிகள் கூட வெளி விவகாரங்களில் முழுவதும் ஈடுபட்டார் என்பதற்கு ஆதார மில்லை.

ஹக்கனும் புக்கனுமே ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளைத் தேடிவந்தார்களேயன்றி சுவாமிகள் அவர்களை தேடிப் போகவில்லை. ஸ்ரீ வித்யாரண்யர் அவர்களை அனுக்ரஹித்தார். தன்அறிவாற்றலாலும் தபோ பலத்தாலும், அவர்களுக்கு கர்நாடக ஆதிபத்தியத்தை பெற்றுத் தந்தும் தான் தபஸில் ஈடுபட்டு சந்யாசியாகவே இருந்தார். குருவின் அனுக்கிர ஹத்துக்கு நன்றிகூறும் வகையிலும் ஹிந்து தர்மத்துக்கு வணக்கம் கூறும் வகையிலும், அவர்கள் (ஹக்கனும், புக்கனும்) தங்கள் ராஜ சின்னங்களை ஸ்ரீவித்யாரண்யர் சரணாரவிந்தங்களில் ஸமர்ப்பணம் செய்தனர். குருவானவர் தம் சிஷ்யர்களின் மனம் புண்படும்படி நடந்து கொள்ளக் கூடாது என்ற ரீதியில் ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளும் அவர்களை திருப்திப்படுத்த அவர்கள் ஸமர்ப்பணம் செய்த ராஜமரியாதை சின்னங்களை ஏற்றுக் கொண்டார். அவைகளை அவர் விரும்பினார் என்றோ அவைகளை தேடிச்சென்றார் என்றோ கருதினால் அது தவறு. ஸ்ரீ வித்யாரண்யர் அடிச்சுவட்டை பக்தியுடன் பின்பற்றிவரும் சிருங்கேரி ஆசார்யர்கள் ஒவ்வொருவரும் இந்த ராஜ மரியாதை சின்னங்களை ஸ்ரீ வித்யாரண்யரைப் போல ஏற்று வகித்துக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

ஆகையால் யாராவது இந்த பட்டாபிஷேக வைபவங்கள். ஆசார்யர்களால் விரும்பப்பட்டு செய்யப்படுகின்றன என்று நினைத்தால் அது தவறு. ஆசார்யர்களுக்கு இதில் ஒன்றும் மோஹம் கிடையாது. ஸ்ரீ சங்கர பகவத்பாதரின் அத்வைத உபதேசங்களில் ஸதா ஈடுபட்டிருக்கும் ஆசார்யர்களுக்கு இவ்வித ஆசைகளை கற்பிப்பது மூடத்தனமாகும். சிஷ்யர்களை சந்தோஷப்படுத்துவது குருவின் கடமை என்பதினாலும் பாரம் பரியத்தை அனுசரிக்கவேண்டியும் நாம் இந்த (பட்டாபிஷேக) வைபவத்துக்கு இசைந்தோம். இதற்கு வேறு ஒரு காரணமும் இல்லை, எதிர்பார்ப்பும் இல்லை.

நம் குருநாதர் ஒன்றிலும் பற்றுதலில்லாமல் உண்மையான துறவியாகத் திகழ்ந்தார். நம் குறிக்கோளும் அதுவே. அதுவே

விரும்பத்தக்கதாகவும் பின்பற்றத் தகுந்ததாகவும் இருக்க வேண்டும். அதே சமயம், குருவின் கட்டளைக்கு கீழ்ப்படிய வேண்டும் என்பதும், சிஷ்யர்களின் மனதை புண்படுத்தாமல் அவர்கள் அபீஷ்டத்தை பூர்த்தி செய்ய வேண்டும் என்ற காரணமுமே நாம் இந்த இன்றைய வைபவங்களுக்கு இசைந்தது. குருவின் வழி நடந்து அவர் விதித்த வழிகளைப் பின்பற்றி ஸ்ரீசாரதா பரமேசுவரியை வழிபட்டு அத்தேவியின் அருளைப் பெற வேண்டும் என்பதே நம் தீர்மானமான குறிக்கோள்.

சிருங்கேரி ஜகத்குரு மஹாஸம்ஸ்தானத்தின் தீவிர சிஷ்யர்கள் அநேகம் பேர்கள் இந்த வைபவத்துக்காக இங்கு வந்து குழுமி இருக்கின்றனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் தனித் தனியாக நான் ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. பரம்பரை வழிவந்த இந்த சிருங்கேரி ஆசார்யர்கள் மேலுள்ள உங்கள் பக்தியும், ஸ்ரீசாரதா பரமேசுவரியிடம் கொண்டுள்ள பக்தியும் உங்களுடன் மேன்மேலும் வளர்ந்து உங்கள் சந்ததியினரிடமும் பரவி நிற்கட்டும்.

இந்த சுபவேளையில் சிருங்கேரி வாழ் ஜனங்களின் அன்பும், பக்தியும் எம்மை திக்குமுக்காடச் செய்துவிட்டன. வெளியூர்களிலிருந்து வருகை தந்த சீடர்கள், சிருங்கேரி ஜகத்குரு பீடத்தின் பால், சிருங்கேரி வாழ் ஜனங்கள் கொண்டுள்ள பக்தியையும், ஈடுபாட்டையும் கண்டு வியப்புறுகிறார்கள்.

"அதி பரிசயாத் அவஜ்ஞா ஸந்ததகமனாத் அனாதர:" என்பது ஒரு ஸம்ஸ்கிருத பழமொழி. அதாவது கூடவே இருந்தால் கசப்பு வளரும் என்பதே. ஆனால் சிருங்கேரி வாழ் மக்கள் இதற்கு விலக்கு. குருவை மிகுந்த பக்தி பாசத்தோடு வரவேற்கிறார்கள். குருசேவை செய்யத் திகட்டாத ஆர்வம் கொண்டும் இருக்கிறார்கள். நம் பரிபூர்ண அனுக்ரஹ ஆசிகளை அவர்களுக்கு வழங்குகிறோம். ஹரிஹரபுரம், சிவகங்கை, நெலமாவு மடாதிபதிகளும், அபிமானத்துடன் இங்கு வருகை தந்திருக்கிறார்கள். அவர்களுக்கும் வாழ்த்துக்களை வழங்குகிறோம்.

பாரதத்தின் பல பாகத்திலிருந்து வருகை தந்திருக்கும் நம் சிஷ்யர்கள் தான் இந்த உத்ஸவத்தின் மேன்மைக்கு காரணமாதலால் அவர்களுக்கும் எமது ஆசிகள். இந்த வைபத்தின் உயர்வுக்கு ஒரு தனி மனிதன் முயற்சி காரணமல்ல.

டில்லி, கல்கத்தா, பம்பாய், பூனா, மதராஸ், ப்ங்களூர், ஹைதராபாத், ராஜபாளையம் முதலிய இடங்களிலிருந்து பக்தர்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் அவ்வளவு தூரங்களிலிருந்து ஏன் வரவேண்டும் என வியப்புறலாம். ஓர் புதிய தேசத்தையோ, இடத்தையோ, ஜனங்களையோ காண்பதற்காக அவர்கள் வரவில்லை. தங்கள் குருவையும் மடத்தையும் தரிசிக்கவே அவர்கள் வந்திருக்கிறார்கள். ஆகவே நாம் அவர்களுக்கு இந்த குருபக்தியும் மடத்தின்மேலுள்ள அபிமானமும் என்றென்றும் நிலைத்து நீடித்திருக்க அனுக்ர ஹிக்கிறோம். நம் குருநாதரின் சரணாரவிந்தங்கள் நம் ஹிருதயத்தில் நிலைத்திருந்து நம்மை நல்வழியில் நடத்திச் செல்லுமாறு பக்திபூர்வமாக ப்ராத்திக்கிறோம். நம் ஆசார்ய பரம்பரை, நம் குருநாதர், நம் ஆராத்ய தெய்வங்களான ஸ்ரீசந்திர மௌலீசுவரர் ஜகன்மாதா ஸ்ரீ சாரதா பரமேசுவரி இந்த சக்திகள் சரியான பாதையில் செல்வதற்கான மனோதிடத்தையும், நம் பொறுப்புகளை திறமையுடன் வகிக்க சக்தியையும் அருளுமாறு திரும்பத்திரும்பப் பிரார்த்திக்கிறோம். உங்கள் எல்லோருக்கும் எம் அனுக்கிரஹ ஆசிகளை மறுபடியும் வழங்கி எம் பாஷணத்தை முடித்துக் கொள்ளுகிறோம்.

ஹர நம: பார்வதீ பதயே!

ஹர ஹர மஹாதேவ

ஜானகீ காந்த ஸ்மரணம்!

ஜய ஜய ராம ராம



# நான்கு தகுதிகள்

சிருங்கேரி ஜகத்குரு அபிநவவித்யாதீர்த்த ஸ்வாமிகள்

யா திர்யங்நரதேவதாபிரஹமித்யந்த : ஸ்புடா க்ருஹ்யதே

யத்பாஸா ஹ்ருதயாக்ஷதேஹவிஷயா பாந்தி ஸ்வதோசேதனா :

தாம் பாஸ்யை : பிஹிதார்கமண்டலநிபாம் ஸ்பூர்திம் ஸதா பாவயன்

யோகீ நிர்வ்ருதமானஸோ ஹி குருரித்யேஷா மனீஷா மம ॥

சாஸ்திரம் என்ற பதத்திற்கு நம்மைப் பொருத்த வரை "சாரீரக மீமாம்ஸா சாஸ்திரம்" என்று பொருள். நாம் எல்லோரும் துக்கக்கடலில் மூழ்கி அதிலிருந்து எப்படியாவது கடைத்தேற வேண்டும் என்ற ஆசை உள்ளவர்களாய் இருக்கிறோம். மேலும் ஏதாவது தற்காலிகமாக இருக்கப்பட்ட துக்க நிவிருத்தி வந்தால் அது நமக்குப் போதாது. நிலையான துக்க நிவிருத்தி தான் நமக்கு வேண்டும் என்ற ஆசை எல்லோருக்கும் உண்டு. அதை அடைய என்ன ஸாதனம் என்று யோசனை செய்யும் போது, சாஸ்திரம் தவிரவேறு ஸாதனம் கிடையாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. (ஆகவே யுக்திகளெல்லாம் சொல்லப்பட்டாலும் அவையும் சாஸ்திரத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளன). எந்த சாஸ்திரத்தை அத்யயனம் செய்தால் பவபந்தம் (பிறப்பு, இறப்பென்னும் தளை) நிவிருத்தி ஆகுமோ அதைத்தான் சாஸ்திரம் என்று ஒப்புக்கொள்கிறோம். இங்கு ஒரு கேள்வி எழுகிறது. பவபந்த நிவிருத்தி எதனால் ஏற்படும்? ஏதாவது கர்மா செய்வதால் ஏற்படுமா அல்லது ஞானத்தினால் ஏற்படுமா? இக்கேள்விக்கு சங்கரபகவத்பாதர் "அதாதோ ப்ரஹ்மஜிக்ஞாஸா" ஸூத்ரத்திற்குப் பொருள் எழுதும் ஸமயத்தில் விளக்கம் கொடுத்துள்ளார். முதலில் அவர் ஸூத்ரத்தின் பொருளை விளக்கவில்லை. ஒரு கேள்வியோடு தம் விளக்கத்தை ஆரம்பிக்கிறார். நாம் பார்த்துக் கொண்டிருக்கும் துக்கம் என்பது வாஸ்தவமா அல்லது நாமே கல்பித்துக் கொண்டதா என்று ஒரு கேள்வி கேட்டார். துக்கத்தைக் கல்பித்துக் கொள்வது எப்படி என்று சிலர் கேட்கலாம். நாம் ஒருவர் விஷயத்தில் அன்போடு இருந்தால், அப்படிப்பட்டவருக்கு ஏதாவது துக்கம் வந்தால் நம் மனதிலும் சிரமம் ஏற்படுகிறது.

முதலிலேயே அப்படிப்பட்ட பாசம் வைத்துக் கொள்ளாதிருந்தால் யாருக்கு எந்த துக்கம் வந்தாலும் நம் மனதில் வருத்தமே ஏற்படாது. அதனால் பந்தம் என்பது நாமாக உண்டாக்கிக் கொண்டதா அல்லது தானாக வந்ததா என்பதை இந்த ஸாதாரண உதாரணத்தைக் கொண்டு நாம் புரிந்து கொள்ளலாம்.

"புத்ரபார்யாதிஷு விகலேஷு ஸகலேஷு வா அஹமேவ விகல: ஸகலோ வேதி பாஹ்யதர்மாநாத்மன்யத்யஸ்யதி"

(புத்திரன் மனைவி முதலியவர்கள் குறைப்பட்டபோதோ நிறைந்துள்ள போதோ, நானே குறைப்பட்டவன் என்றோ நிறைந்தவன் என்றோ வெளியிலுள்ளவர்களின் தர்மங்களைத் தன்னிடத்தில் ஏற்றிக் கொள்கிறான்) என்று கூறப்பட்டது போல் இந்த பந்தம் என்பது நாமாக ஏற்படுத்திக் கொண்டது தான். அது மட்டுமா என்றால், சரீரத்தில் ஏதாவது அடி பட்டால் நாம் அழுவோம். இது ஏன்? 'சரீரம் வேறு, நாம் வேறு' என்று சாஸ்திரம் சொல்லிக் கொண்டிருக்கிறது. ஆனால் நமக்கு அந்த விதமான 'பாவம்' இல்லை. அந்த எண்ணமே கிடையாது. அவ்வாறில்லாமல் இந்த 'சரீரமே நான்' என்ற பிரமை இருக்குமானால் பிறகு சரீரத்திற்கு வரும் சுகமோ துக்கமோ தனக்கே வருகிறது என்று தான் ஒருவன் எண்ணுவான். அப்படி நினைக்க வேண்டியது கூட ஸஹஜம் தான். இந்த சரீரம் போன்றவைகள் தான் 'அஹம்' (நான்) என்ற ஞானம் (அறிவு) உண்மையான ஞானமா அல்லது தவறான ஞானமா என்று தீர்மானம் செய்ய வேண்டும். அது உண்மை யான ஞானம் தான் என்றால் அப்பொழுது இந்த சரீரத்திற்கு வந்த சுகதுக்கங்களெல்லாம் இந்த ஆத்மாவிற்குத்தான் வந்தது, அதனால் இதற்கு நாம் பரிகாரம் செய்வதற்கு வேறு மார்க்கம் தேட வேண்டியிருக்கிறது. இந்த ஞானம் உண்மையான ஞானமில்லை, வெறும் பிரமை தான் என்றால் சரீரத்திற்கு எந்த விதமான வியாதியோ, குணமோ, தோஷமோ வந்தாலும் வராவிட்டாலும் பாதகமில்லை. நாம் நம்முடைய ஸ்வரூபத்தில் இருந்து விடுவோம் என்பது தீர்மானமான விஷயம்.

"யுஷ்மதஸ்மத்ப்ரத்யயகோசரயோர் விஷய விஷயிணோஸ்தம: ப்ரகாசவத் விருத்தஸ்வபாவயோ:"

('நீ', 'நான்' என்கிற எண்ணங்களுக்கு விஷயமாய் உள்ளதும் இருட்டு வெளிச்சம் இவைகளைப்போல நேர்மாறான ஸ்வபாவங்களை உடையதுமான விஷயம்...)

என்று சொல்லப்பட்டதிலிருந்து, இந்த ஆத்மா 'ஸச்சித் ஸ்வரூப:" அதாவது ஆத்மா என்பது நித்ய ஞான ஸ்வரூபம்: சுகஸ்வரூபம் என்பதை சாஸ்திரத்தின் மூலமாக் மிகத்தெளிவாக தெரிந்து கொள்ளலாம். ஸ்ரீ வித்யாரண்யர் பஞ்சதசியில் "ஞானம் என்றொரு பொருள் உண்டு. அது ஜாக்ரத், ஸ்வப்ன ஸுஷுப்தி என்ற மூன்று காலத்திலும் ஒன்றாக இருக்கும், ஆனால் அதனுடைய விஷயங்கள் மட்டும் வேறுவேறாக இருக்கும், அப்படிப்பட்ட ஞானம் தான் ஆத்மா. அதுதான் ஒருவனுடைய பரமப்ரீதிக்கு இருப்பிடமாக இருக்கப்பட்டது" என்று கூறுகிறார். ஆனால் "நாம் இந்த ஆத்மா வேறு என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். அப்படி இல்லை. அந்தப்பரம்பொருளாக நாமே இருக்கிறோம் என்ற விஷயத்தை வேதாந்தம் உபதேசிக்கிறது என்று வித்யாரண்யர் கூறிவிட்டார். ஆகவே இந்த ஆத்மாவைப் பற்றி விசாரம் செய்யும் அவசியம் நமக்கு ஏற்பட்டிருக்கிறது. ஆத்மாவைப் பற்றி எப்பொழுது விசாரம் செய்வது? இந்தக் கேள்விக்குப் பதிலளிக்கும் விதமாக 'அதாதோ ப்ரஹ்ம ஜிக்ஞாஸா' என்ற ஸூத்ரத்தில் 'அத' என்று கூறியுள்ளார். 'அத' என்றால் 'பிறகு' என்று அர்த்தம். பிறகு என்றால் 'எதன்பிறகு' என்ற கேள்வி எழும்.

'கர்மாவபோதானந்தர்யம்.......'

(கர்மாவை அறிந்து அதன் பிறகு......)

கர்மாவைப் பற்றி அறிய வேண்டும் என்ற இச்சையோடு அதைத்தெரிந்து கொண்ட மாத்திரத்தில் அதற்கு பலன் இல்லை. அதை அனுஷ்டானம் செய்ய வேண்டியுள்ளது.

அனதீத்ய த்விஜோ வேதானனுத்பாத்ய ததா ஸுதான் ।

((த்விஜன் வேதத்தை அத்யயனம் செய்யாமல், புதல்வர்களை உண்டாக்காமல் (யக்ஞங்களைச் செய்யாமல்) மோக்ஷத்தை விரும்பினால் நரகத்திற்குத்தான் செல்கிறான்))

பிறகு,

'மனோ மோக்ஷே நிவேசயேத்'

(மனதை மோக்ஷத்தில் சேர்க்க வேண்டும்)

என்பது போல் முதலில் நன்கு கர்மானுஷ்டானம் செய்து வைராக்யத்தால் பிரபஞ்சம் ஸாரமில்லை என்ற கருத்துடன் மோக்ஷ வழியில் செல்ல பரமஹம்ஸ பாரிவ்ராஜ்யம் (ஸந்யாஸம்) வாங்க வேண்டியது என்று ஓர் இடத்தில் சாஸ்திரம் சொல்லியிருக்கிறது. அதனால் கர்மானந்தர்யம், கர்மா சம்பந்தப் பட்ட பூர்வ மீமாம்ஸா சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட கர்மாக்களையெல்லாம் அனுஷ்டானம் செய்தல் என்பதெல்லாம் முதலில் செய்துவிட்டு பிறகு தான் நாம் வேதாந்த விசாரம் செய்ய வேண்டியது என்ற ஒரே வழிதானா என்றால் அப்படி அல்ல. ஒரிடத்தில், "முதலில் பிரஹ்மசாரி ஆக வேண்டும், பிறகு கிருஹஸ்தன் ஆக வேண்டும், அதன் பிறகு வானப்பிரஸ்தன் ஆக வேண்டும், அதற்கும் பிறகு ஸன்யாஸி ஆக வேண்டும்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் சாஸ்திரங்களிலேயே

"ப்ரஹ்மசர்யாதேவ ப்ரவ்ரஜேத்க்ருஹாத்வா வனாத்வா"

(பிரஹ்மசர்யத்திலிருந்தே ஒருவன் ஸன்யாசம் வாங்கி விடலாம்)

என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. பிரஹ்மசர்யத்திலிருந்தே ஸன்யாஸம் பெற்றுக்கொண்டு விடுவது சரியா 'க்ருஹாத்வா, வனாத்வா' என்று கூறப்பட்டது போல் உலகமெல்லாம் பார்த்துவிட்டு பிறகு ஸன்யாஸம் பெற்றுக்கொள்வது சரியா என்ற பிரச்சினை நமக்கு எழுகிறது. சாஸ்திரத்தில் கூறப் பட்டுள்ள இரு வாக்கியங்களுக்கும் நாம் ஸமன்வயம் கூற வேண்டும். யார் கிருஹஸ்தனாகி ஸன்யாஸம் பெற்றுக் கொள்வாரோ அவர் நன்றாக கர்மானுஷ்டானம் செய்து பிறகு ஸன்யாஸம் பெற்றுக்கொள்ளலாம். அவனுக்கு அந்த வாக்கியம் சரிப்பட்டு வரும். பிரஹ்மசர்யத்திலிருந்தே ஸன்யாஸம் வாங்கு பவனுக்கு அந்தவாக்கியம் தவறாகிவிடும். ஆனால் அடுத்த வாக்கியம் அவனுக்கு சரியாகும். அவ்வாறு செய்வதற்கு அவனுக்கு 'ஸாதன ஸம்பத்தி' வேண்டியிருக்கிறது. அப்பேற் பட்டவன் கர்மாவினால் போகம்பெற வேண்டியதில்லை.

ஸாதன ஸம்பத்திகள் விவேகம்,வைராக்யம், சமாதிஷட்க ஸம்பத்தி, முமுக்ஷுத்வம் என்பவையாகும். இவை நான்கும் மனிதனுக்கு இருக்க வேண்டிய தகுதிகள் என்று கூறப்படும். இத்தகைய தகுதிகள் யாருக்கு உண்டோ அவர்கள் வேதாந்த விசாரம் செய்யலாம்.

முதலில் விவேகம் என்றால் என்ன என்று பார்ப்போம். நாம் சுகம், துக்கம் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கிறோம். சாச்வதமான வஸ்து எது, அசாச்வதமான வஸ்து எது என்ற விசாரம் செய்யும் போது தர்க்க சாஸ்திரத்தில் சொல்லப் படுவது போல் 'ஆகாசம் நித்யம், பிருத்வீ (பூமி) போன்றவை அநித்யம்' என்ற விசாரம் நாம் செய்ய வேண்டியதில்லை. "என்னுடைய ஸ்வரூபத்தைப் பற்றி ஆராய முனைந்தேனா?" என்று விசாரத்தை நாம் செய்ய வேண்டும். ஆத்மா என்பது தான் நித்யமான வஸ்து. ஆத்மா நிலையானது என்பது சாஸ்திரங்களில் சிறந்த யுக்திகளினால் நிரூபிக்கப்பட்டுள்ளது. ஆனால் பிரபஞ்சம் நிலையற்ற ஒன்று. பிரபஞ்சத்தில் தற்போது நாம் பார்க்கும் ஓர் உருவம் இன்னும் சிறிது நேரத்தில் மறைந்து விடலாம். மேகம் எப்படி அடிக்கடி தன்னுடைய ரூபத்தை மாற்றிக்கொண்டிருக்குமோ அதே மாதிரி பிரபஞ்சமும் மாறிக்கொண்டிருக்கும். என்றாவது ஒரு நாள் பிரபஞ்சம் முழுவதும் இல்லாமற் போய் விடலாம். மற்றவர்கள் பிரபஞ்சம் இருக்கிறது என்று தெரிந்து கொண்டாலும் கூட ஒரு ஞானியின் பார்வையில் பிரபஞ்சம் இல்லை என்று தான் தீர்மானம். அதனால் நித்யமாயிருக்கப்பட்ட பொருள் ஒன்று உண்டு என்று நமக்குத் தெரிந்ததேயானால் அப்பொழுது நாம் உலகத்தில் "அது வேண்டும், இது வேண்டாம்" என்ற விருப்பு வெறுப்புகளை விட்டுவிட்டு அந்த நித்யமான பொருளை அடைவதற்காக முயற்சி செய்ய முடியும். அவ்வாறில்லாமல் இருந்தால் நாம் இந்த அநித்யமான பொருட்களிலேயே மூழ்கி நித்யமான பொருளை மறந்து விடுவோம். அதனால் தான் "நித்யா நித்யவஸ்து விவேகம்" தேவை என்று முதல் தகுதியாகச் சொல்லியிருக்கிறார்.

வந்துள்ள விவேகத்தின் பலன் வைராக்யம் ஆகும். இது குறித்து இப்போது பார்ப்போம். மனிதர்கள் பொருட்களை சேர்த்துக் கொண்டே போக ஆசைப்படுவர். உதாரணத்திற்கு,

யாராவது பாடகர் வந்தால் அவருடைய பாட்டைக் கேட்க வேண்டும் என்ற ஆசை ஏற்படும். அடுத்து கிராமபோன் வந்ததும் நம் வீட்டிலும் கிராமபோன் இருக்கட்டும் என்று ஆசை. பிறகு டேப்ரிகார்டர் வந்தபின் அதுவும் நம்மிடம் இருக்கட்டும் என்று ஆசை இரண்டும் சேர்ந்து வந்தால் (டூ இன் ஒன்) அதுவும் நமக்கு வேண்டும் என்று ஆசை. இப்படியாக ஆசை ஒன்று, இரண்டு, மூன்று என்று கணக்கில்லாமல் போய்க்கொண்டிருக்கிறது. ஆசைக்கு ஏதாவது முடிவு உண்டா?

"ஏகஸ்யாபி ந பர்யாப்தம் ததித்யதித்ருஷ்ணாம் த்யஜேத்"

(பூமி, நெல், பொன், பசு, பெண்கள் இவை ஒன்றினாலும் முழு திருப்தி இல்லை. அதனால் அதிக ஆசையை விட்டுவிடு) என்று ஓரிடத்தில் கூறப்பட்டுள்ளது.

உலகத்திலிருக்கப்பட்ட எல்லாப் பொருட்களும் ஒருவனுக்குக் கிடைத்தாலும் அப்போது கூட ஒருவனுக்கு திருப்தி வருவது சந்தேகம் தான். பார்க்கப் போனால் வரவே வராது என்பது நிச்சயம். அதனால் இம்மை சம்பந்தப்பட்ட சுகமானாலும் மறுமை சம்பந்தப்பட்ட சுகமானாலும் அவை எல்லாம் சரீர சுகங்கள் ஆகும். இப்படிப்பட்ட சுகத்தினால் ஆசை அதிகமாகும். அந்த ஆசையை நாம் திருப்திபடுத்துவதற்காக இன்னும் முயற்சி செய்வோம். அந்த முயற்சியினாலே இன்னும் கொஞ்சம் சுகத்தைப் பெறுவோம். இவ்வாறு அது ஒரு சக்கரம் மாதிரி சுற்றிக்கொண்டேயிருக்கும்.

'உபேக்ஷைவோபாய: தவ ஹ்ருதய தேஷாமுபசமே:

(ஏ மனமே! உன்னை அலட்சியப்படுத்துவதே
இந்திரியங்களை அடக்குதல் ஆகும்.)

என்று கூறப்பட்டது போல, நமது இந்திரியங்கள் சாந்தமாக இருக்க வேண்டுமென்றால், நாம் பிரபஞ்சத்தில் உபேக்ஷாபாவம் வைத்துக் கொள்ள வேண்டும். அந்த உபேக்ஷை தான் வைராக்யம் என்று சொல்லப்படுகிறது. உலகத்தில் நாம் எதைப் பார்த்தாலும் கூட ஆச்சர்யப்படுகிறோம்.

ஸவிதர்யபி சீதருசௌ சந்த்ரே தீக்ஷ்ணேஃப்யதோ
வஹ்ந்யக்னௌ!

மாயிகமிதமிதி ஜானன் ஜீவன்முக்தோ ந விஸ்மயீ பவதி ॥

(ஸூர்யனுடைய கிரணங்கள் குளிர்ச்சியைத் தந்தாலும், சந்திரன் உஷ்ணமானாலும், அக்னி கீழ்நோக்கி வந்தாலும் அதெல்லாம் மாயையினால் வந்தவை என்று ஜீவன்முக்தன் கருதி, அவை பற்றி ஆச்சரியப்படமாட்டான்)

அது எதுவும் நித்யமில்லை. ஒரு காலத்தில் உலகமே இல்லாமல் 'ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத்' என்று கூறப்பட்டது போல் ஆத்மா மட்டும் இருந்தது. சிறிய பீஜத்தி லிருந்து பெரிய ஆலமரம் உருவாவதைப் போல அந்த ஒரு பரம சைதன்யத்தினால் இவ்வளவு பெரிய உலகத்தைப் நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். ஆகவே இந்த உலகம் என்பது சாச்வதமா? சாச்வதமே இல்லை.

"ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு : த்ருவம் ஜன்ம ம்ருதஸ்ய ச"

பிறந்தது எல்லாம் என்றைக்காவது ஒரு நாள் அழியத்தான் வேண்டும். அதே போல் எந்த வஸ்து அழிவடைகிறதோ அது இன்னொரு ரூபத்தில் மறுபடியும் பிறக்க வேண்டியதுதான். ஆகவே இந்த வஸ்துக்களில் நாம் ஆசையில்லாமல் உதாசீனமாய் (அலட்சியமாக) இந்த உலகத்தை சாட்சியாகப் (பார்வையாளனாகப்) பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். அதுதான் வைராக்யம். இந்த வைராக்யம் இருந்தால் தான் 'சமாதி ஷட்க ஸம்பத்தி' என்ற மூன்றாவது தகுதி வர ஏதுவாகும். 'சமாதி ஷட்க ஸம்பத்தி' என்பது சமம், தமம், உபரதி, திதிக்ஷா, ச்ரத்தா, சமாதானம் என்ற ஆறு பிரிவுகளைக் கொண்டது. அவற்றை ஒவ்வொன்றாக இப்போது நோக்குவோம். சமம் என்பது உள்ளே உள்ள இந்திரியத்தை தனது கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ளல். தமம் என்றால் வெளியில் உள்ள இந்திரியங்களை தனது கட்டுப்பாட்டில் வைத்துக்கொள்ளல். ஆகவே அந்தரிந் திரியம், பஹிரிந்திரியம் இரண்டையும் ஒருவன் தன்னுடைய வசத்தில் வைத்திருக்க வேண்டும். அந்தரிந்திரியம் என்றால் மனது. கண் முதலியவை பஹிரிந்திரியங்கள். சிலர், "எனக்கு

அந்தரிந்திரியம் கட்டுப்பாட்டில் இருக்கிறது. பஹிரிந்திரியம் எப்படி இருந்தால் என்ன?" என்று கூறினால் அதுசரியல்ல.

ஒரு மனிதன் பெரிய ஸன்யாஸியைப் போல் வேஷம் போட்டுக்கொண்டிருந்தான். ஆனால் அவனுடைய செயல்கள் மிகவும் மோசமாக இருந்தன. ஒருவர் அவனிடம், "என்ன, நீங்கள் கண்ட இடத்தில் சாப்பிடுகிறீர்களே, கண்ட இடத்தில் சுற்றுகிறீர் களே, நீங்கள் ஸன்யாஸி ஆன பின் இப்படி இருக்கலாமா?" என்றார். அதற்கு அந்த 'ஸன்யாஸி' 'அகண்டசித்ரூபியாக இருக்கும் ஆத்மாவிற்கு எங்கே சாப்பிட்டால் என்ன? எங்கே சுற்றினால் என்ன? அவனுக்குப் பற்றுதலே இல்லை அல்லவா? அதனால் நான் எப்படியிருந்தாலும் அதனால் தவறில்லை' என்றார். கேள்வி கேட்ட மனிதர் இதற்குப் பதிலேதும் சொல்ல வில்லை. பின்னர் ஸன்யாஸியை வீட்டில் பிக்ஷைக்குக்கூப் பிட்டார். அவரை உட்கார்த்தி வைத்தார். ஆனால் ஸன்யாஸிக்கு இலையில் ஒன்றும் பரிமாறவில்லை. எவ்வளவு நேரம் அவர் காத்துக்கொண்டிருக்க முடியும்? "சரி, தண்ணீர் கொண்டுவா ஐயா, மிகவும் தாகமாக இருக்கிறது" என்றார் ஸன்யாஸி. அதற்கு இவர்,

"ப்ரஹ்மானன்தேன த்ருப்தஸ்ய"

என்பது போல் பிரஹ்மானந்தத்தினாலேயே திருப்திப்பட்டிருப் பவருக்கு தாகம் எங்கிருந்து வந்தது? அதனால்,

"யத்ஸௌக்யாம்புதிலேசலேசத இமே சக்ராதயோ நிர்வ்ருதா:..."

(பரம்பொருளின் ஒரு துளி ஆனந்தத்தில் இந்திரன் முதலானோர் திருப்தியுற்றனர்...)

என்று கூறப்பட்டது போல் அந்த ஸௌக்கியத்திலேயே நீங்கள் அமிழ்ந்து போயிருக்கிறீர்கள். உங்களுக்கு நான் தண்ணீர் மேலிருந்து விடுவதா அல்லது வாய்க்குள்ளே விடுவதா? ஒன்றும் புரியவில்லை என்றார். உடனே ஸன்யாஸி "ஏய்! அப்படி யெல்லாம் கேட்டால் பசி தாங்க முடியாது. நான் என்ன செய்யட்டும்?" என்றார்.

உதாரணத்தில் வந்த ஸன்யாஸியைப் போல் அந்தரிந்திரியத்தை வசப்படுத்தி விட்டோம் என்று வாயால் மட்டும் சொல்லி விட்டு அதற்குத் தகுந்தாற் போல் நடந்து கொள்ளாமல் இந்திரியங்களை கட்டுப்பாடில்லாமல் விட்டிருந்தால் "மித்யாசார:ஸ உச்யதே" - அப்படிப்பட்டவன் ஒரு மித்யாசாரி - என்று பகவான் ஒரு விருது கொடுத்தார். அந்த விருது நமக்கு இருக்கக்கூடாது. அதனால் சமம் இருந்தால் தமம், தமம் இருந்தால் சமம் ஆகிய இரண்டும் இருக்க வேண்டியது அவசியம்.

அடுத்ததாகக் கூறப்பட்டது 'உபரதி' என்பது.

ததஸ்ததஸ்சோபரதி : க்ரியாப்ய :

(பிறகு க்ரியைகளிலிருந்து விடுபடவேண்டும்....)

என்று கூறப்பட்டது போல், பிரபஞ்சத்திலே பலர், "நாளைக்கு நாம் நல்ல செயல்களைச் செய்வோம், இப்பொழுது நாம் பிரபஞ்சத்திலே அனுபவிக்க வேண்டியது எவ்வளவோ உண்டு. இதையெல்லாம் விட்டால் வாழ்க்கை நடத்த முடியாது" என்று கூறுவர். வயது அதிகமான பின் விட்டு விடலாம் என்று நினைத்துக் கொண்டே இருப்பர். கடைசியில் வயதாக ஆக, இந்த கர்மஸங்கம் என்பது அதிகமாகிக் கொண்டே வரும். முதலில் இவனுடைய சிந்தை, அதன் பிறகு இவன், மற்றும் இவனுடைய ஸம்ஸாரத்தினுடைய சிந்தை, அதன்பிறகு இவன், மற்றும் ஸம்ஸாரம், இவனுடைய குழந்தைகள், பேரன்கள், பேத்திகளுடைய சிந்தை என்று இவ்வாறு சிந்தனைகள் அதிகமாகிக் கொண்டு போகுமே தவிர, குறைவது என்பது கிடையவே கிடையாது. அதனால் தான்

"ததஸ்ததஸ்சோபரதி : க்ரியாப்ய :"

என்று கூறப்பட்டுள்ளது. செய்ய வேண்டிய கடமையாயிருந்தாலும செய்ய வேண்டிய காலம் எப்போதானாலும் கூட அதில் பற்றுதல் இருக்கக்கூடாது. கடமையேயில்லாதிருக்கப் பட்டவன் கடமையைத் தானாகவே உண்டாக்கிக் கொள்வதும் தவறு. யாருக்கு உலகம் ஸத்தியம் என்ற பாவனை உண்டோ அப்படிப்பட்டவர் சாட்சியாக இருந்து கர்மங்களைச் செய்து வர வேண்டும்.

அதிகாரிகளில் உத்தமர், மத்யமர், மந்தர் என்று மூன்று வகைகள் உண்டு.

"த்யக்த்வா ஜாதிகுலாச்ரமேஷ்வபிமதிம் முச்யாத் ஸுதூராத் க்ரியா :"

(ஜாதி, குலம், ஆச்ரமம் என்பவைகளில் பற்றுதலை விட்டுவிட்டு எல்லாக் கிரியைகளையும் தூரத்திலிருந்து விட்டு விட வேண்டும்)

என்பது போல் உத்தம அதிகாரிக்கு ஜாதி, மதம், குலம் போன்றவற்றிலெல்லாம் அபிமானம் இருக்க வேண்டிய தேவையில்லை. 'ஜாதி, மதம் போன்றவற்றை விட நான் தயாராக இருக்கிறேன்' என்று யாராவது சொன்னால், தயாராக இருந்தால் மட்டும் போதாது.

"தேஹாதௌ அஸதி த்யஜாத்மதிஷணாம்"

(மெய்யல்லாத உடல் போன்றவைகளில் இதுதான் ஆத்மா என்ற எண்ணத்தை விடு)

என்று கூறப்பட்டது போல் இருந்து விட்டால் அத்தகைய அபிமானத்தை விட்டுவிடலாம். 'தேஹாதௌ' - தேஹம் இந்திரியம் இவையெல்லாம். 'அஸதி' - இவையெல்லாம் கல்பித மானவை என்று எண்ணி இவற்றில் அபிமானத்தை விட்டு விட்டால் அப்பொழுது நாம் ஜாதி, மதம் போன்றவற்றை விட்டு விடலாம். ஒருவன் தான் எந்த அதிகாரத்தைச் சேர்ந்தவன் என்று தானே பார்த்துக் கொள்ள வேண்டும். இன்னொருவர் சொல்லி அதைக்கண்டுபிடிக்க முடியாது. தேஹத்தில் அபிமானம் இல்லையென்றால் ஒருவன் எங்கு சாப்பிட்டாலும் தவறில்லை. தேஹத்தில் யாராவது இரண்டு அடி அடித்தால் திருப்பி நான் அடிக்க வேண்டும் என்று யாருக்குத் தோன்றுகிறதோ அப்படிப் பட்டவன் கண்ட இடத்தில் சாப்பிட முடியாது. வீட்டில் தான் சாப்பிட வேண்டும். தேஹத்தில் பற்றுதல் இல்லையென்றால் ஒருவனுக்கு விஷம் போட்டாலும் ஒன்றுதான், சாதம் போட்டாலும் ஒன்றுதான். அவனுக்கு விஷம் விஷமாவதே இல்லை. அதனால் தான் உத்தமமான அதிகாரியாக இருக்கப் பட்டவனுக்கு "ததஸ்ததஸ்சோபரதி : க்ரியாப்ய :"

அடுத்ததாக 'திதிக்ஷா' என்பது சொல்லப்பட்டுள்ளது திதிக்ஷா என்றால் என்ன?

"ஸஹனம் ஸர்வதுக்கானாம் அப்ரதீகாரபூர்வகம் ।
சிந்தாவிலாபரஹிதம் ஸா திதிக்ஷா நிகத்யதே ॥"

(பரிகாரம் செய்ய வேண்டும் என்ற முயற்சி முன்னர் இல்லாமலும், கவலையும் புலம்பலும் இல்லாமலும், எல்லா விதமான துக்கங்களையும் பொறுத்துக் கொள்வது 'திதிக்ஷை' என்று கூறப்பட்டிருக்கிறது.)

என்று திதிக்ஷை விளக்கப்பட்டிருக்கிறது. பிராரப்த கர்மாவினால் ஒருவனுக்கு ஏதாவது துன்பங்கள் வரலாம். அந்த துன்பங்களை வைத்துக்கொண்டு, "ஐயோ, இந்த துன்பம் வந்து விட்டதே" என்று கதறினால், அப்பொழுது ஒருவன் சாஸ்திரம் வாசிப்பதற்கு அதிகாரம் உள்ளவன் ஆகமாட்டான். எது வந்தாலும் கூட, இந்த ஸச்சிதானந்த ஸ்வரூபியாக இருக்கப்பட்ட ஆத்மாவிற்கு சம்பந்தம் இல்லை என்று கருத வேண்டும். சரீரத்திற்கு ஏதாவது துன்பமோ இன்பமோ வந்து போகட்டும் என்று இருக்க வேண்டும். அந்த திதிக்ஷைதான் 'சிந்தாவிலாபரஹிதம்' என்று கூறப்பட்டுள்ளது. துன்பம் வந்தால் சிந்திப்பதோ கதறுவதோ கூடாது. இவ்வாறு பொறுத்துக் கொள்ளும் சக்தி இருந்தால் அதற்கு 'திதிக்ஷா' என்று பெயர்.

அடுத்ததாக ச்ரத்தா, ஸமாதானம் ஆகியவை கூறப் பட்டுள்ளன.

சாஸ்த்ரஸ்ய குருவாக்யஸ்ய ஸத்யபுத்த்யாவதாரணா ।
ஸா ச்ரத்தா கதிதா ஸத்பிர்யயா வஸ்தூபலப்யதே ॥

(எதனால் உண்மையான பொருள் அறியப்படுகிறதோ, அந்த சாஸ்திரமும் குருவின் உபதேசமும் ஸத்யம் தான் என்ற எண்ணத்தினால் ஏற்படும் உறுதியான நம்பிக்கை 'சிரத்தை' என்று நல்லோர்களால் கூறப்பட்டிருக்கிறது.)

நன்றாக வேதாந்தத்தைப் படித்தாலும் என்னவோ பிரஹ்மம் என்று ஒன்று உண்டாம். சுகர் முக்தராம், வாமதேவரும் முக்தராம் என்று இவ்வாறு பாடம் சொல்வதாக இருந்தால் அந்தப் பாடம் கேட்காமலிருப்பதே மேல். ஏனென்றால் தான் இருக்கிறானா இல்லையா என்பதிலேயே அப்படிப்பட்ட வனுக்கு சந்தேகம். தான் இருந்தால் கண்டிப்பாக பிரஹ்மமும் உண்டு. அப்படியிருக்கும் போது தான் உண்டு என்று நினைத்து விட்டு பிரஹ்மம் உண்டோ இல்லையோ என்று சந்தேகப்பட்டுக் கொண்டு, 'பிரஹ்மம் உண்டு என்று சாஸ்திரம் சொல்கிறது' என்றால் அப்பொழுது சாஸ்திரத்தில் சிரத்தை இல்லை என்று தான் பொருள். யார் யாருக்குத் தான் உண்டு என்ற அறிவு உள்ளதோ அவர்கள் எல்லோரும் பிரஹ்மத்தை ஒரு ரூபத்தில் தெரிந்து கொண்டிருப்பார்கள் என்பது தான் பொருள். அதனால்

"சாஸ்த்ரஸ்ய குருவாக்யஸ்ய ஸத்யபுத்த்யாவதாரணா"

என்று கூறப்பட்டதனால் வேதம் எதைச் சொல்கிறதோ, ஆசார்யாள் எதை உபதேசிக்கிறாரோ அவ்விஷயத்தில் 'ஸத்யபுத்த்யா' இது ஸத்தியமான வார்த்தை என்ற நிச்சயம் இருக்க வேண்டும். 'யயா வஸ்தூபலப்யதே' அந்த சிரத்தை இருந்தால் தான் ஆத்மஸாக்ஷாத்காரம் உண்டாகும். சிரத்தையே இல்லை யென்றால் ஆத்மஸாக்ஷாத்காரம் உண்டாகாது. உதாரணம் ஒன்றை இப்போது பார்ப்போம். ஒரு வைரத்தைப்பரீட்சை செய்யும் நகைக்கடைக்காரர் வைரத்தை கையில் வைத்துக் கொண்டு. 'இப்படிப்பார், அப்படிப்பார் இதில் தோஷம் தெரியும், குணம் தெரியும்' என்று சொல்லிக் கொண்டிருப்பான். அவன் சொல்வதெல்லாம் பொய் என்று தீர்மானம் வைத்துக் கொண்டிருந்தால் பார்ப்பவனுக்கு எப்படி அறிவு உண்டாகும்? அறிவு உண்டாகாது. அவன் சொல்வதில் நம்பிக்கை வைக்க வேண்டும். பிறகு நாம் பார்த்தால் அவன் சொல்வதெல்லாம் அங்கே இருக்கும் என்பதை நாம் பார்க்கலாம். ஆகவே சிரத்தை என்பது வேண்டும். ஸமாதானம் என்பது மனதை ஒரு நிலைப்படுத்துதல் ஆகும். இந்த ஆறு சமாதி ஸம்பத்திகள் இருந்தால் தான் அதிகாரம் வரும்.

அடுத்ததாக 'முமுக்ஷுத்வம்' என்பது கூறப்பட்டுள்ளது. முமுக்ஷுத்வம் (மோக்ஷத்தில் விருப்பம்) எல்லோருக்கும் உண்டு. ஏதாவது கஷ்டம்வந்தால் இந்த பிரபஞ்சம் வேண்டாம் என்று தோன்றும். அந்தக்கஷ்டம் நீங்கிப்போயிற்று என்றால் இந்த பிரபஞ்சத்தை விட்டுநாம் போகக்கூடாது என்று தோன்றும்.

விறகு விற்கும் ஒரு கிழவி இருந்தாள். வெயில் காலத்தில் விறகை விற்றுக்கொண்டுவருவதற்கு மிகவும் கஷ்டப்பட்ட அவள், "எவ்வளவு நாள் கூப்பிட்டாலும் எமன் வர மறுக்கிறானே, இந்த கஷ்டத்திலிருந்து நான் எப்படி விடுபடுவது?" என்று சொல்லிக் கொண்டிருந்தாள். ஒரு நாள் எமன் எதிரிலேயே வந்து 'ஏனம்மா என்னை அழைத்தாய்?' என்றான், கிழவி பார்த்தாள், "இது என்னடா இவன் வந்துவிட்டான்!" என்று நினைத்துக்கொண்டே, 'ஒன்றுமில்லை, இந்த விறகை தூக்கித்தூக்கி மிகவும் கஷ்டமாயிருக்கிறது. விறகை என் தலையில் தூக்கி வைத்து விட்டால் போதும்' என்றாள். முதலில் எமனை அழைத்த போது, என்னை அழைத்துக்கொண்டு போ என்று கூப்பிட்டாள். அவன் எதிரில் வந்தவுடனேயே வேண்டாம் என்று கூறிவிட்டாள். நமக்கு அது போன்ற முமுக்ஷுத்வம் தான் உண்டு. 'ப்ரஸூதி வைராக்யம், ஸ்மசான (மயான) வைராக்யம்' என்றெல்லாம் கூறப்பட்டிருக்கிறது. மயானத்தில் போய்ப் பார்க்கும் பொழுது 'இதைப்போல் நானும் சுடுகாட்டிற்குத் தான் வரவேண்டியிருக்கும், எவ்வளவு ஸம்பாதித்தால் என்ன? உலகத்தில் எவ்வளவு சுகம் அனுபவித்தால் என்ன? துக்கம் அனுபவித்தால் என்ன? ஏதோ வந்திருக்கப்பட்ட வாழ்க்கையை நல்ல தாக்கிக் கொண்டு,பிறகு பிரஹ்ம ஸாக்ஷாத்காரம் பெற்றுக் கொள்ளக்கூடாதா?" என்று தோன்றும். சிறிது நேரம் கழிந்தபின் கடைத்தெருவிற்கு வந்தவுடனே அச்சிந்தனையெல்லாம் மாயாமாகிவிடும். கீதையில் கண்ணன்,

"மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே"

(என்னை மட்டும் நாடியவர்கள் இந்த மாயையைக் கடக்கிறார்கள்)

என்று. கூறியுள்ளார். ஆகவே இறைவனைச் சரணடைந்தால் தான் இந்த மாயை போகும் என்று கூறப்பட்டிருக்கிறது.

அரைகுறை வைராக்யத்தினால் வரும் முமுக்ஷுத்வம் முமுக்ஷுத்வமே அல்ல. அது இருந்தாலும் பிரயோஜனமில்லை முமுக்ஷுத்வம் எப்படியிருக்க் வேண்டும் என்று கேட்டால், தலைமுடியில் நெருப்புப் பிடித்துவிட்டால் அப்பொழுது என்ன செய்வோம்? ஒரு குழாயைக் கண்டால் அந்தக் குழாயின் கீழே உட்கார்ந்து விடுவோம். அல்லது ஒரு குளத்தைப் பார்த்தால் உடனே அதில் போய் குதித்து விடுவோம். நீச்சல் வந்தாலும் சரி, வராதிருந்தாலும் சரி முதலில் குதித்துவிடுவோம். இதனால் தான்

"ப்ரதீப்தசிரா: ஜலம் ப்ரவிவிக்ஷுரிவ"

(தலையில் நெருப்புப் பிடித்தவன் ஜலத்தில் பிரவேசிப்பது போல்)

என்று ஒரிடத்தில் கூறப்பட்டுள்ளது. அதுபோல் உத்தமாதி காரியின் முமுக்ஷுத்வம் இருக்க வேண்டும். விவேகம், வைராக்யம், சமாதிஷட்க ஸம்பத்தி. முமுக்ஷுத்வம் முதலியவை ஒரு கிருஹஸ்தனுக்கோ அல்லது வானப்பிரஸ்தனுக்கோ கூட வரலாம்.

'அதவா யோகினாம் ஏவ குலே பவதி தீமதாம்'

என்று பகவான் கூறியதுபோல் ஜன்மாந்தரத்தில் அனுஷ்டானம் செய்ததற்கேற்ப தற்போது இவைகளை ஒருவன் பெறலாம். அதனால் தான் ஸூத்ரத்தில் 'அத அத:' என்றார், பகவத்பாதர் 'விவேகம், வைராக்யம், சமாதி ஷட்க ஸம்பத்தி முமுக்ஷுத்வம்' என்பவை இருக்கும் போது என்று பொருள் கூறுகிறார். ஆனால் நாம் உலகத்தில் பார்க்கிறோம். யாருக்கும் வைராக்யம் வருவதாகத் தெரியவில்லை. எல்லோரும் ஒன்று-இரண்டு-மூன்று என்று மாளிகைகள் கட்டிக் கொண்டிருப்பதில் தான் ஆசை வைக்கிறார்கள். யாகம் செய்பவர்களுக்கும் ஜோதிஷ்டோமம், அக்னிஷ்டோமம், வாஜபேயம் இவ்வாறு ஒன்றன்பின் ஒன்றாக யாகம் செய்யத் தோன்றும் ஸ்வர்கத்திற்குப் போக வேண்டும் என்று மட்டும் எல்லோருக்கும் தீவிரமாக விருப்பம் இருக்கிறதே தவிர யாருக்கும் வைராக்யம் வருவதில்லை. "இந்த யாகங்களையே நாம் செய்து கொண்டிருந்தால் ஏதோ ஒரு சுகம் கிடைத்துவிடும்.

அந்த சுகம் ஸ்திரமானதாக இருக்கும்" என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் எந்த வேதம் இவ்வளவு யாகங்களைச் சொல்கிறதோ அதே வேதம் "பிரபஞ்சத்திலிருக்கப்பட்ட ஒவ்வொரு பொருளும் அநித்யம்" என்று கூறுகிறது.

"நாஸ்த்யக்ருத: க்ருதேன"

என்று கூறப்பட்டுள்ளபடி தர்மத்தினால் அழியாத சுகம் என்பது கிடைக்காது. தற்காலிக சுகமே கிடைக்கும். யாகம் போன்றவைகளினால் என்ன சுகத்தை நாம் ஸம்பாதிக்கிறோமோ அதே போல் லௌகிகமான செயல்களினால் எவ்வளவு சுகங்களை நாம் பெறுகிறோமோ அவையெல்லாம் புதிதாக உண்டான சுகங்கள் தான். உண்டான எந்த சுகமுமுண்மையான சுகம் இல்லை. உண்மையாக நிலைபெற்றுள்ள எந்த பொருளுக்கும் 'உண்டாதல்' என்பது கிடையாது. எந்த பொருள் உண்டானதோ அது

"ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு:"

என்ற வகையில் ஒரு நாள் அழிந்து போய்விடும்.

"க்ருதேன கர்மணா அக்ருத: மோக்ஷ :"

என்பதிலிருந்து நித்ய சுகம் இதனால் கிடைக்காது என்று கூறப்பட்டிருக்கிறது. நாம் எல்லோரும், இன்றைக்கு சுகம் இருக்கட்டும் நாளைக்குப் போய்விட்டாலும் பரவாயில்லை' என்று எதிர்பார்க்கமாட்டோம். 'நிலையான சுகம் இருக்க வேண்டும்' என்றே நாம் நினைக்கிறோம். உலகத்திலேயே நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். நாம் எந்தப்பொருளை ஸம்பாதித்து வைத்தாலும் கூட ஒரு நாள் அது போய்விடுகிறது என்பது தீர்மானம். ஆனால் ஆத்மா நித்யமானது என்பதை நாம் சிறிது யோசனை செய்தால் கூட தீர்மானமாகத் தெரிந்து கொள்ளலாம் உலகத்தில் எல்லோரும் எல்லாவற்றையும் கூட விட்டுவிட தயாராக இருப்பார்கள், ஆனால் தன்னை மட்டும் யாரும் விட்டுவிடுவது என்பது கிடையாது. இந்த சரீரத்தைக் கூட விட்டுவிட ஒருவன் துணியலாம். தான் சுகமாக இருக்க

வேண்டும் என்பதற்காகவும் கஷ்டம் தாங்க முடியவில்லை என்பதற்காகவும் தன் சரீரத்தையும் ஒருவன் விட்டுவிடலாம். தான் சுகமாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் ஒருவன் உயிரை விடுவானே தவிர தான் துக்கம் அனுபவிப்பதற்காக யாரும் தற்கொலை செய்து கொள்ள மாட்டார்கள்.

பலருக்கு அநேகமாக விஷயங்களில் பிடிவாதம் உண்டு. ஆனால் அது வைராக்யம் ஆகாது. எப்போது விவேகம் நன்றாக வருகிறதோ அப்போது தான் அவனுக்கு வைராக்யம் வரும். "அநித்யமாக இருக்கப்பட்ட இந்த உலகத்தில் நான் எதற்காக ருசி வைத்துக்கொள்ள வேண்டும்? நித்யமான ஆத்மஸாக்ஷாத் காரத்தை நான் பெற்றுக்கொள்வேன்" என்ற வைராக்யம் தானாக வந்துவிடும். விவேகம், வைராக்யம் ஆகிய இந்த இரண்டும் வந்தபின் சமாதி ஷட்க ஸம்பத்தி தானே வரும் முமுக்ஷுத்வமும் ஸுலபமாகிவிடும் (கிடைத்துவிடும்).

ஒருவனுக்கு விவேக வைராக்யம் வருவதற்கே அவகாசம் இல்லையென்றால் அப்பொழுது பரப்ரஹ்ம விசாரத்தை யார் தான் செய்ய முடியும்? ஆனால் சிலருக்கு இயற்கையாகவே வந்துவிடும் சில பேருக்கு நன்றாக பாடுபட்ட பின்னர் வரும். எத்தனை பேர் ஸன்யாஸம் வாங்கத்தயாராக இருக்கிறார்கள்? நம்மைக்கேட்டால் நாம் பயந்து 'ஸந்யாஸம் வேண்டாம்' என்று சொல்வோம்.

நம் பரமாசார்யாள் காலத்தில் ஒருவர் வேதாந்தம் படித்துக்கொண்டிருந்தார். மிகவும் விரக்தராக இருந்தார்அவர். ஆனால் 'நான் ஸன்யாஸம் வாங்கமாட்டேன்' என்று சொன்னாராம் 'ஏன்?' என்று கேட்டதற்கு, "ஸன்யாஸம் வாங்க மாட்டேன், வாங்கினால் வைராக்யம் போய்விடும்,ஸன்யாஸம் வாங்காதிருந்தால் வைராக்யம் இருக்கும்" என்றார். இது உண்மைதான்.

ஸன்யாஸம் வாங்குவதற்கு முன் இருக்கும் அபிமானம் வேறு, அதற்குப் பின்வரும் அபிமானம் வேறு. மேலும் அந்த ஸன்யாஸியின் அபிப்ராயத்தில், "ஸன்யாஸம் வாங்குவதற்கு முன்பு மற்றவர்கள் போல் நானும் இருந்தேன். இப்பொழுது அப்படியில்லை 'நான் பெரியவன்' என்ற அபிமானம் சற்று

அதிகமாகிவிட்டது. 'அவன் நமஸ்காரம் செய்யவில்லையே' 'இவன் பிக்ஷைக்குக் கூப்பிடவில்லையே' என்றும் இருந்தது. ஆகவே எனக்கு ஸன்யா்ஸம் வேண்டாம். நான் இப்படியே இருந்து மற்றவர்களைப் போலவே இருக்கிறேன். அப்படியிருந்தால் எனக்கு ஞானமே இல்லையே என்ற ஒரு தாபமாவது இருக்கும் என்று சொன்னார். உதாரணத்தில் உள்ளவருக்கு இருந்தது போல் அந்த ஸ்திரமான விவேகம் இருந்தால் அப்பொழுது வைராக்யம், சமாதி ஷட்க ஸம்பத்தி எல்லாம் தானாகவே வரும். யாருக்கு ஸாதன ஸம்பத்து உண்டாகவில்லையோ அவர்கள்

'ஹரிபதபஜனம் தந்நிவ்ருத்யை ப்ரகுர்ம: ।'

என்று கூறப்பட்ட வகையில் ஈச்வர ஆராதனை செய்ய வேண்டும். பகவத் கீதையில்,

"ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ:"

(தன்னுடைய சரியான கர்மாவினால் அவனை வழிபட்டு, மனிதன் ஸித்தியை அடைகிறான்.)

'உன்னுடைய வர்ணாச்ரமத்திற்குச் சொல்லப்பட்ட கர்மாக்கள் எவை இருக்கின்றனவோ அவற்றை நன்றாக அனுஷ்டித்துக் கொண்டு வா' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு செய்தால்

"ஞானப்ரஸாதேன விசுத்த ஸத்த்வ...."

(ஞான ப்ரஸாதத்தால் பரிசுத்த மனமுள்ளவனாவதால்.... என்பது போல் அந்தக் கரணம் என்பது தூய்மை யாகிவிடும். அவ்வாறு அது தூய்மையானால் விவேகம் தானே வரும். அப்படி தூய்மையாகாவிட்டால் நாம் எவ்வளவு தடவை வேதாந்தம் வாசித்தாலும் கூட அது கல்லைக் கொண்டு போய் ஸமுத்திரத்திலேயே அமிழ்த்தினாலும் கல் நனையாதது போல் நம்முடைய படிப்பும் பயனற்றதாகிவிடும். ஆனால் அதுவே ஒரு துணியானால் நனையும். கல் அப்படியல்ல.

"நிஷ்ணாதோபி ச வேதாந்தே வைராக்யம் நைதி துர்மதி:।"
சிரம் ஜலநிதௌ மக்னோ மைனாக இவ மார்தவம் ॥"

(வேதாந்தத்தில் பண்டிதனாயிருந்தாலும் கெட்டமனதுடையவன், வைராக்ய மடைவதில்லை. (எப்படியென்றால்) மைனாக பர்வதம் எவ்வளவு நாட்கள் ஸமுத்திர ஜலத்திலேயே மூழ்கியிருந்தாலும் அது மென்மையாவதில்லை)

என்று கூறப்பட்டது போல் மைனாகப் பர்வதம் எவ்வளவு நாள் கடலில் இருந்தாலும் மிருதுவாகிவிடுமா? அதே போல் மனத் தூய்மை இல்லாதவன் எவ்வளவு நாள் வேதாந்தம் படித்தாலும் அதுஅவ்வளவு பலனைத்தராது. பகவானுடைய அருள் இருந்தால் மனம் சஞ்சலத்தை விட்டுவிடும். ஸத்வ குணம் அதிகமாகிவிடும்.

அதனால் விவேக வைராக்யம் வருவதற்கு அவகாசம் இருப்பதனால் நாம் விசாரம் செய்ய வேண்டும். என்ன விசாரம் என்றால் 'ஆத்ம விசாரம் செய்ய வேண்டும்'. ஆத்ம விசாரமும் பிரஹ்ம விசாரமும் இரண்டும் ஒன்றுதான்.

சிலருக்கு ஒரு கேள்வி! "பிரஹ்ம விசாரம் செய்ய வேண்டும் என்று சொல்கிறீர்களே, அந்த பிரஹ்மத்திற்கு லக்ஷணம் என்ன?" 'ஸத்யஞான சுகஸ்வரூபம்'. இப்படிப்பட்ட ஆத்மாவுடைய அறிவுஇருந்தால் பிறகு நாம் விசாரம் செய்ய வேண்டியதே இல்லை. அந்த அறிவே இல்லை என்றால் நாம் எப்படி விசாரம் செய்வது? ஏதோ ஒரு பொருள் உண்டு என்று தெரிந்தால் அந்தப்பொருளை பற்றி விசாரம் செய்யலாம் 'பிரஹ்மம் என்று ஒரு பொருள் உண்டு என்பதே நமக்குத் தெரியாதே. எப்படி விசாரம் செய்வது? அந்தப்பொருள் பற்றித் தெரிந்தால் பிறகு விசாரம் செய்ய வேண்டிய தேவையே இல்லையே!

"தத்புனர்ப்ரஹ்ம ப்ரஸித்தமப்ரஸித்தம் வா ஸ்யாத் ।
யதி ப்ரஸித்தம் ந ஜிக்ஞாஸிதவ்யம்"

(அந்த பரம்பொருள் ப்ரஸித்தமாகவோ அல்லது ப்ரஸித்த மில்லாததாகவோ இருக்கட்டும், ப்ரஸித்தமாக இருந்தால் அதை அறிவதற்கு, விருப்பப்படத் தேவையில்லை)

அதனால் நாம் ஏன் சாஸ்திர அத்யயனம் செய்ய வேண்டும்? யதி அப்ரஸித்தம் - ஆகவே நாம் விசாரம் செய்யவே முடியாது என்று சிலருடைய ஆட்சேபம். இதற்குப் பதிலை இவ்வாறு கூறலாம்.

'எல்லோருக்கும் கூட பரப்ரஹ்மத்தினுடைய அறிவு உண்டு' என்பது நிச்சயம். ஏனென்றால்.

"ஸர்வோ ஹ்யாத்மாஸ்தித்வம் ப்ரத்யேதி ந நாஹமஸ்மீதி!"

(எல்லோருமே 'தான்' இருப்பதை உணர்கிறார்களல்லவா? 'நான் இல்லை என்று உணர்வது கிடையாது)

'நீ உள்ளாயா?' என்று யாராவது கேட்டால் ஆமாம், நான் உள்ளேன் என்று ஒருவன் சொல்வானே தவிர 'நான் இல்லை' என்று யாராவது சொல்வதுண்டா? எல்லோரும் 'நான் இருக்கிறேன் என்றே சொல்வர்.

"ஆத்மா ச ப்ரஹ்ம"

(ஆத்மா தான் பிரஹ்மம்) என்று கூறப்பட்டுள்ளது. அப்படியானால் 'பிரஹ்ம ஞானம் எனக்கு இருக்கிறது' என்று ஒருவன் கூறினால் அவனுக்கு பிரஹ்மம் உண்டு. ஆனால் அது எப்படிப்பட்ட ஞானம் என்று இப்போது பார்ப்போம்.

ஒரு ராஜா தன்னுடைய புத்திரனிடம், நான்கு வேதங்களை அறிந்த ஒருவனுக்கு இந்த தானத்தைக் கொடுக்க வேண்டியது என்று கூறினான். இதைக்கேட்ட பையன், உடனே கையை நீட்டினான். தந்தை அவனிடம், "என்னடா நீ கையை நீட்டுகிறாய்? என்றைக்கு நீ வேதம் கற்றுக்கொண்டாய்?" என்று கேட்டான். அதற்குப்பையன் 'நீங்கள் கூறியபடியே நான் தெரிந்து கொண்டாகிவிட்டது' என்றான். தந்தை 'என்ன தெரிந்து கொண்டாய்?' என்று கேட்டதற்கு பையன், 'நான்கு வேதங்கள்' என்று சொன்னீர்களே, வேதங்கள் நான்கு என்று நான் தெரிந்து கொண்டாகிவிட்டது" என்றான். அதேபோல் தான் நாமும் கூட பரப்ரஹ்மத்தைத் தெரிந்து கொண்டிருக்கிறோம்.

'மமைவாம்சோ ஜீவலோகே ஜீவபூத : ஸநாதன:"

(என்னுடைய ஒரு அம்சம் தான், ஜீவர்களின் உலகத்தில் நிலையான ஜீவன்.)

என்று கூறப்பட்டதுபோல் பகவானுடைய ஒரு அம்சம் தான் ஜீவன். ஸமுத்திரத்திலிருந்து ஒரு குடம் தண்ணீரை எடுத்து

தனியாக வைத்துவிட்டால் அது ஸமுத்திரமாகுமா? ஸமுத்திர மாகாது. ஆனால் ஸமுத்திரமில்லாமல் நாம் அந்தத்தண்ணீரைத் தனியாக வைக்கமுடியுமா? முடியாது. ஆனால் ஸமுத்திரத் தண்ணீரானாலும் குடத்தண்ணீரை ஸமுத்திரம் என்று சொல்ல மாட்டோம். அதேபோல் நாம் பரப்ரஹ்மத்தைத் தவிர வேறில்லை. ஆனாலும் அவித்யா ஆவரணத்திற்கு (மறைப்புக்கு) உட்பட்டதால் ஜீவன் என்று பெயர் வைத்துக் கொண்டாகி விட்டது. ஜீவன் என்று ஆனவுடன் எந்தெந்த அறிவுகள் வரும் தெரியுமோ? சரீரம் ஆத்மா என்று சிலபேருக்குத் தவறான அறிவு. சிலருக்கோ மனதுதான் ஆத்மா என்ற தவறான அறிவு. வேறு சிலருக்கு, இந்திரியங்கள் தான் ஆத்மா என்ற தவறான அறிவு. இன்னும் சிலருக்கு, சரீரத்திற்கு அப்பால் ஆத்மா ஒன்று உண்டு ஆனால் அதற்கு சுகமுண்டு துக்க முண்டு, எத்தனையோ பிரபஞ்சங்கள் உண்டு என்ற தவறான அறிவு உண்டு. ஆனால் உண்மையில் நாம் தெரிந்து கொண்டிருக்கும் ஜீவனுடைய ஸ்வரூபம்தான் பிரஹ்மம், குடத்துத்தண்ணீரை நாம் ஸமுத் திரத்தில் கொட்டினால் அப்பொழுது இந்தக்குடத்திலிருந்த தண்ணீர் என்னஆகும்? ஸமுத்திரமாகுமே தவிர வேறு ஒன்றும் ஆகாது. அதே மாதிரி

"மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே ।"

(என்னை மட்டும் நாடியவர்கள் இந்த மாயையைக் கடக்கிறார்கள்)

என்று கூறப்பட்டது போல் பகவானை சரணடைந்து,

"பக்த்யா மாமபிஜானாதி யாவான் யஸ்சாஸ்மி தத்த்வத: ।"

(பக்தியினால் என்னை உண்மையில், 'நான் யார், என்ன' என்று அவன் அறிகிறான்.)

முதலில் பக்தி மார்க்கத்தில் இருந்து, சித்தத்தை நிர்மூல மாக்கிக் கொண்டு, சிரவண, மனன, நிதித்யாஸனங்களைச் செய்தால் அப்பொழுது,

"ஸமுத்ர இத்யேவம் ப்ரோச்யதே நாமரூபே விஹாய"

என்பது போலாகி விடும். ஆத்மா எங்கும் இருப்பவன். எங்கும் இருக்கப்பட்ட வஸ்துவான ஆத்மாவைத் தவிர வேறு வஸ்துவே கிடையாது. அதை எப்போது தெரிந்து கொள்ள முடியும்? யார் ப்ரஹ்மவித்தோ அவர்தான் தெரிந்து கொள்ள முடியும்?

"நாவேதவிந்மனுதே தம் ப்ருஹந்தம்"

(அந்தப் பரம்பொருளை வேதமறியாதவன் சிந்திப்பதில்லை)

தெரிந்து கொண்ட பிறகு, அவர் வேறு, ப்ரஹ்மம் வேறா? என்றால்

"ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவ பவதி"

(ப்ரஹ்மத்தை அறிந்தவன் ப்ரஹ்மமாகவே ஆகிவிடுகிறான்)

என்று கூறப்பட்டிருக்கிறது. எப்படி ஸமுத்திரத்தினுடைய தண்ணீர் குடத்தில் வைத்திருக்கும் போது தனியாக இருந்தாலும், ஸமுத்திரத்தில் விட்ட பிறகு அது மீண்டும் ஸமுத்திரமாகி விடுகிறதோ அதேபோல் ப்ரஹ்மத்தை அறிந்தவன் ப்ரஹ்மமாகி விடுகிறான்.

அதனால் மனிதன் தன்னுடைய ஸ்வரூபத்தைத்தெரிந்து கொண்டு கடைத்தேற வேண்டியது கடமை என்பது வேதாந்த சாஸ்திரத்தின் கருத்து. ஆனால் நாமெல்லாம் இந்த அதிகார ஸம்பத்து உள்ளவர்களா, நாமெல்லாம் வேதாந்த சாஸ்திரம் படிக்கலாமா என்ற கேள்விகள் நமக்கு எழும்.

எல்லோரும் கூட I.A.S. தேர்வில் தேர்ச்சியடைய மாட்டார்கள். ஆனாலும் துவக்கப்பாடம், நடுநிலை பாடம், மேல் நிலை பாடம் என்று அதிலும் பல பிரிவுகள் உண்டு.

நம் தகுதிக்குத் தகுந்த பட்டத்தை நாம் பெறலாம். இதே போல் நாமும் இந்த வேதாந்த சாஸ்திரம் வாசித்து பிரஹ்மஸாக்ஷாத்காரம் பெற்றுக் கொள்ள முடியும். வேதாந்த சாஸ்திரத்தை ஒருவன், உத்தமமான அதிகாரியானாலும் மத்தியமமான அதிகாரியாக ஆனாலும்,

"தினே தினே ச வேதாந்தச்ரவணாத் பக்திஸம்யுதாத்"

(தினந்தோறும் பக்தியோடு கூடிய வேதாந்த ச்ரவணம் செய்தால் ஒருவன் மேன்மை அடைவான்)

என்று கூறப்பட்டது போல் தினமும் வேதாந்த விசாரம் பண்ணிக்கொண்டிருந்தால் அதுவே ஒரு தபஸ். தபஸுக்கு பலன் பாபநிவிருத்தியாகும். பாப நிவிருத்தியினால் சித்த சுத்தி, பிறகு சித்த சுத்தியினால் தியானம் தானே வரும். ஆகவே வேதாந்த சாஸ்திரம் சாதனமாக இருப்பதினால், சிறிதளவிற்காவது ஆத்மவிசாரம் பண்ண வேண்டும்.

"ஞாத்வா தேவம் ஸர்வபாசாபஹானி:

நான்ய : பந்தாச்சேதி பூயோ வசோபி : ।

ஞப்தே: ஸாக்ஷான்முக்தி ஹேதுத்வஸித்தெள:

அத்யாஸத்வம் பந்தனஸ்யார்த்தஸித்தம் ॥

(அந்தப் பரம்பொருளை அறிந்தால் எல்லாவிதமான கட்டுப்பாடுகளும் நாசமாகின்றன. வேறு வழியில்லை. இதைப்போன்ற பல வேதாந்த வார்த்தைகளினால் ஞானம் மோக்ஷத்திற்கு நேரடி காரணம் என்று தெரிவதால் அர்த்தாபத்தி பிரமாணம் மூலமாக பந்தத்தின் தோற்றமான தன்மை தெரியும்)

(குண்டாயுள்ள தேவதத்தன் பகலில் சாப்பிடுவதில்லை என்பதிலிருந்து இரவில் சாப்பிடுகிறான் என்று அறிவது அர்த்தாபத்திப் பிரமாணம் எனப்படும்.)

என்று கூறப்பட்டது போல் நாம் எவ்வளவு கர்மாக்களைச் செய்தாலும் கூட எவ்வளவு பகவத் பக்தி கொண்டாலும் கூட ஆத்மஸ்வரூபம் தெரிந்து கொள்ளாமல் இந்த ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை கிடையாது. ஏன் கிடையாதென்றால், பவபந்தம் என்பது உண்மையானால் அதற்கு எதாவது கர்மா செய்தால் அதிலிருந்து விடுதலை வரலாம். ஆனால் பவபந்தம் என்பது உண்மையே அல்ல.

"ஆவித்யோ ஹ்யேஷ பந்தோ விரமதி ந விநா வேதனம் கர்மஜாலை :"

(இந்த பந்தம் அவித்யையினால் ஏற்பட்டது தான். அது ஞானமில்லாமல் கர்மாவினால் விலகுவதில்லை).

இது அவித்யையினால் ஏற்பட்டது. அவித்யையினால் ஏற்பட்டது பொய்யே ஆகும். இது பொய் என்பதை நமக்குத் தெரியப்படுத்த சாஸ்திரமும் அனுபவமும் உண்டு.

அதனால் தான் சாஸ்திரம்,

"ஞாத்வா தேவம் ஸர்வபாசாபஹானி!" என்று கூறுகிறது.

"யதா சர்மவதாகாசம் வேஷ்டயிஷ்யந்தி மானவா:
ததா சிவமவிக்ஞாய துக்கஸ்யாந்தோ பவிஷ்யதி"

(சிவனை) ஆத்ம ஸ்வரூபத்தைப் புரிந்து கொள்ளாமல் இருந்தாலும் கூட ஒருவனுக்கு மோக்ஷம் கிடைக்க வேண்டுமானால் அவன் ஆகாசத்தைப் பாயைச் சுற்றி வைப்பது போல் சுற்றி வைக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. கைக்கு கிடைக்காத ஆகாசத்தைச் சுற்றி வைக்க முடியுமா? அதனால்

"ஞாத்வா தேவம் ஸர்வபாசாபஹானி: ।
நான்ய : பந்தாச்சேதி பூயோ வசோபி:
ஞப்தே: ஸாக்ஷான்முக்தி ஹேதுத்வஸித்தௌ"

என்பதிலிருந்து முக்திக்கு ஸாதனமாக ஆத்ம ஸ்வரூபத்தின் அறிவு (ஞானம்) ஒன்று தான் இருக்கிறது என்று தெரிகிறது. அதனால், நமக்கு ஏற்பட்ட பந்தம் கல்பிக்கப்பட்டது. இதைப் போக்க ஞானம் தான் வழி. இந்த ஞானத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டியது நமது கடமை. சங்கரர்,

"துர்லபம் த்ரயமேவைதத் தைவானுக்ரஹஹேதுகம்
மனுஷ்யத்வம் முமுக்ஷுத்வம் மஹாபுருஷஸம்ச்ரய : ॥"

(மிகுந்த சிரமப்பட்டுக் கிடைக்கக்கூடிய மனிதத் தன்மை, மோக்ஷத்தில் தீவிர விருப்பம், பெரியோர்களை ஆசிரயித்தல் ஆகிய மூன்றும் தைவத்தின் (கடவுள் அல்லது முன் செய்த புண்ணியத்தின்) கிருபை என்ற காரணம் இருந்தால் தான் கிடைக்கும்)

என்று கூறியுள்ளார்.

'இத : கோன்வஸ்தி மூடாத்மா யஸ்து ஸ்வார்த்தே ப்ரமாத்யதி,
துர்லபம் மானுஷம் தேஹம் ப்ராப்ய தத்ராபி பௌருஷம்"

உத்தமமாயிருககப்பட்ட மனித ஜன்மா வந்து, அதிலும் புருஷன் என்று சொல்லிக் கொள்கிற பாக்யம் நமக்குக் கிடைத்திருக்கிறது. நாம் ஞானத்திற்கு ஸாதனை செய்யாமல், ஸாமான்யமான விஷயங்களில் பற்று வைத்துக்கொண்டு, அவையே ஸத்யம் என்று பிரமித்துக் கொண்டிருந்தால், இதைக்காட்டிலும் மூடத்தனம் என்ன உண்டு? அந்த மூடத் தனத்தை விட்டு, விவேகியாக இருக்க வேண்டும் என்று சங்கரர் உபதேசம் செய்துள்ளார். அம்மாதிரி நடப்பதற்கு பகவான் எல்லோருக்கும் சக்தி கொடுத்து ஆத்ம ஞானத்தை அடைவதற்கு பகவான் அனுக்ரஹம் செய்யட்டும் என்று பிரார்த்தனை செய்து இந்த பாஷணத்தை முடிக்கிறேன்.

ஹர நம: பார்வதீ பதயே !
ஹர ஹர மஹாதேவ !!
ஜானகீகாந்த ஸ்மரணம்
ஜய ஜய ராம ராம !!



# மனிதப்பிறவியின் சிறப்பும் அதன் கடமையும்

சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள்

பிரபஞ்சமானது சரம் என்றும் அசரம் என்றும் இரண்டு விதமாக இருக்கிறது. எங்கும் சஞ்சரிக்காமல் ஒரே இடத்தில் இருக்கும் மரம் முதலியவை அசரமாகும். சரம் என்பது செல்லக்கூடிய பொருள். அதில் குறுக்காக வளரும் பசு, பக்ஷி முதலியவைகள், மனிதர்கள், தேவர்கள் என்று மூன்று வகையாகும். அதில் பசு முதலிய குறுக்காக வளரும் ஜந்துக்கள் அதிக துக்கத்துடன் கூடியவை. தேவர்கள் அதி ஸுகத்தை உடையவர்கள். மனிதர்களுக்கு ஸுகம், துக்கம் இரண்டும் கலந்து இருப்பது பிரத்யக்ஷமாகவும்,சாஸ்த்ர பூர்வமாகவும் அறியப்படுகிறது. அதிலும் மனிதர்களுக்குள்ளேயே ஸுகம், துக்கம், ஞானம் முதலிய விஷயங்களில் ஏற்றத்தாழ்வானது பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்களினாலே அறியப்படுகிறது. அங்கு காரணத்திற்கு ஏற்றத்தாழ்வு இல்லாமல் பலனில் ஏற்றத்தாழ்வானது பொருந்தாது. ஆகையினால் காரணத்திற்கு ஏற்றத்தாழ்வானது அவசியம் இருக்க வேண்டும். எல்லா உலகங்களையும் சிருஷ்டிக்கும் ஈஸ்வரனே வேறு காரணம் ஒன்றையும் எதிர்பாராமல் சுதந்திரமாகவே சில ஜீவர்களை ஸுகத்தோடு கூடியவர்களாகவும், சில ஜீவர்களை துக்கத்துடன் கூடியவர்களாகவும், அறிவுள்ளவர்களாகவும், அறிவு அற்றவர்களாகவும் சிருஷ்டி செய்திருந்தால், ஈஸ்வரனும் நம்மைப்போல் பாரபட்சம், கருணை இல்லாமை என்ற இருதோஷங்களுடன் கூடியவராவர். "நான் எல்லா பூதங்களிடத்திலும் ஸமமாகவே இருக்கிறேன். எனக்கு துவேஷமோ பிரியமோ கிடையாது" என்ற ஈஸ்வரனுடைய பிரதிக்ஞைக்கு ஹானி வரும். அது இஷ்டப்படத்தக்கது அல்ல. ஒரே தாய் தந்தையர்களுக்கு பிறந்த புத்திரர்களுக்கும் கூட ஞானாதி விஷயங்களில் பேதம் காணப்படுகின்றது.

"ஹிரண்யகசிபுவின் பிள்ளைகளான ஹ்லாதன், அநுஹ்லாதன், பிரஹ்லாதன் முதலானவர்கள் ஒரே விதமாக

இல்லை" என்றும் "தந்தை விஷ்ணுவிடம் த்வேஷம் உள்ளவன், பிள்ளையான ப்ரஹ்லாதன் விஷ்ணு பக்தன்" என்றும் ஸ்மிருதிகள் கூறுவதால் ரக்த சம்பந்தம் முதலியவற்றால் இவ்விதம் ஏற்படுகின்றது என்று தீர்மானிக்க முடியாது. பிறந்த காலத்தின் பேதத்தினால் உண்டாகும் என்று கூறினால் அதுவும் பொருந்தாது. ஏனெனில் ஒரே ஸமயத்தில் இரட்டையர்கள் பிறந்தாலும் அவர்களுள் ஞானாதி விஷயங்களில் பேதம் காணப்படுகிறது. இது உலகப்பிரசித்தம்.

அதீந்த்ரியமான (அதாவது) இந்த்ரியங்களுக்குப் புலப் படாத காலத்தினுடைய தன்மையானது அற்ப ஆயுள் உடையவனால் இந்திரியங்களால் எப்படி அறிய முடியும்? பிரத்யக்ஷத்தினாலா? அல்லது அநுமானத்தினாலா? அல்லது சப்தத்தினாலா? முதலில் சொன்ன பிரத்யக்ஷத்தினால் அறிய முடியும் என்பது பொருந்தாது. ஏனெனில் புலன்களுக்கு புலப்படாத விஷயத்தில் பிரத்யக்ஷம் பொருந்தாததினால். அதனாலேயே இரண்டாவதான அநுமானமும் பொருந்தாது. ஏனெனில் பிரத்யக்ஷ பூர்வமாகத்தான் அனுமானத்தினுடைய பிரவிருத்தியானது ஏற்படுகிறது. மூன்றாவதான சப்தத் தினாலும் அறிய முடியாது. அந்த சப்தம் லௌகிக சப்தமா? அல்லது சாஸ்திரீய சப்தமா? லௌகிக சப்தத்தினால் அறிய முடியாது. ஏனெனில் பிரத்யக்ஷ பிரமாணத்தினாலே அறிந்த விஷயத்தைத்தான் லௌகிக சப்தத்தினால் அறிய முடியும். இது பொருந்தாது என்பது முதலிலேயே விளக்கப்பட்டுள்ளது. இரண்டாவதான சாஸ்திரீய சப்தத்தினாலும் அறிய முடியாது. இந்த விஷயத்திலே காலம் தான் காரணம் என்பதை சாஸ்திரங்கள் சொல்லாததினால் ஒரே ஸமயத்தில், ஒரே காலத்தில் பிறந்தவர்களிடமும் ஞானாதி விஷயங்களில் பேதமானது காணப்படுவதினால் இந்த பேதத்திற்கு காலம் காரணம் என்பது பாதிக்கப்படுகிறது.

ஆகையினாலே இந்த மாதிரி நம் புத்திக்கு எட்டாத விஷயத்தில், "இந்திரியங்களுக்குப் புலப்படாத விஷயத்தில் சாஸ்திரம் பிரமாணம்" என்றும் "புண்ணிய கர்மத்தினால் புண்ணியசாலியாகவும், பாப கர்மத்தினால் பாபியாகவும் இருக்கிறான்". "தேகம் உள்ளவர்கள் முன் செய்த கர்மா, ஞானம்

இவற்றிக்குத்தக்கபடி சரீரம் எடுப்பதற்காக பிறவியை அடைகிறார்கள்'' "வேறு சிலர் ஸ்தாவர பாவத்தை அடைகிறார்கள்" "ஞானம், கர்மம், பூர்வவாசனை இவை பின் தொடர்ந்து வருகின்றன'' "நல்லவழியில் செல்பவர்கள் நல்லவரிடத்தில் பிறக்கிறார்கள். அதம நடத்தை (கீழான நடத்தை) உடையவர்கள் கீழான பிறப்பை எடுக்கிறார்கள். முற்பிறவியில் செய்த அந்த அப்யாஸத்தினாலேயே ஸ்வாதீனமில்லாமல் இழுத்துச் செல்லப்படுகிறான்'' என்பது முதலிய சுருதி. ஸ்மிருதிகளும் சரணமடையத்தக்கவை. இவ்வாறு தன் முன் பிறவியில் செய்த கர்மாவை அநுசரித்து ஸ்தாவர, திர்யக்ஜாதி, மனிதன், தேவன் ஆகிய பிறவிகளை அடையும் பிராணிகளில் "சுபகர்மங்களினால் தேவப்பிறவியையும், நிஷித்த கர்மத்தினால் திர்யக்ஜாதி, நரக சரீரத்தையும், புண்ணியம் பாபம் கலந்த கர்மாக்களினால் மனித ஜன்மத்தையும் ஸ்வாதீனம் இல்லாமலேயே அடைகிறார்கள்" என்று சுரேஸ்வராச்சார்யரால் சொல்லப்பட்ட பிரகாரமாக கேவல சுபகர்மத்தினால், தேவ சரீரமும், கேவல அசுப கர்மத்தினால் திரியக் சரீரங்களும், மிஸ்ர கர்ம பலமாக மனுஷ்ய சரீரமும் ஏற்படுகிறது. இங்கு அதிக பாபத்தினால் மூடமாக உள்ள பசுவாதிகளுக்கு, சரீரத்தைக் காட்டிலும் வேறாக ஆத்மா ஒன்று உள்ளது என்ற ஞானம் இல்லாததினாலே சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட கர்மாக்களில் அதிகாரம் இல்லை. தேவர்களுக்கு அத்தகைய ஞானம் இருந்த போதிலும் "வேறு தேவர்கள் இல்லாததினாலே கர்மத்தில் தேவர்களுக்கு அதிகாரம் கிடையாது" என்று சபர ஸ்வாமியின் பாஷ்யத்தில் கூறியபடி சாஸ்திரீய கர்மமான இந்திரன், அக்னி முதலிய தேவர்களைக் குறித்து அந்த அந்த தேவதையின் பொருட்டு திரவியாதிகளை அர்ப்பணம் செய்யப்படுகிற யாகத்தைச் செய்வது பொருந்தாது. ஏனெனில் அந்த தேவதைகளுக்கு வேறு தேவதைகள் இல்லாததினால் கர்மத்தில் அவர்களுக்கு அதிகாரம் இல்லை. இவ்வாறு கர்மாவை விதிக்கிற சாஸ்திரத்தில் மனிதனுக்குத் தான் அதிகாரம் உள்ளது. அதனாலேயே மனித ஜன்மத்திற்குத் தான் தர்ம சாதனத்துவமும், அதன் பலத்துவமும் மற்ற இருவருக்கும் கர்ம பலன் மட்டும் தான் உள்ளது.

இவ்விதம் முதலில் மனிதப்பிறவியைப் பெற்று புண்ணிய கர்மாவையோ, பாப கர்மாவையோ, இரண்டும் கலந்த (மிச்ர)

கர்மாவையோ செய்து அதன் பலனாக அந்த அந்த ஜன்மாக்களை ஜீவர்கள் அடையும் பொழுது "கர்மாவினால் கட்டுப்பட்ட ஜீவன் மனிதன், பசு, பக்ஷி, திர்யக் ஜந்துக்கள் ஆகிய 84 (எண்பத்திநான்கு) லக்ஷம் பிறவிகளில் சுற்றிக்கொண்டு துக்கத்தை அநுபவிக்கிறான். அந்த அநுபவத்தின் முடிவில் மனித தேஹம்" என்ற வார்த்தையானது பிராரப்தத்தால் ஏற்பட்ட பாப கர்ம பலனை அநுபவித்து முடிந்த பிறகு அக்ஞானிக்கு மனுஷ்ய சரீரம் ஏற்படுகிறது என்பதை அறிவுறுத்துகிறது. "நாய், பன்றி, கழுதை, ஒட்டகம், பசு,வெள்ளாடு, செம்மறியாடு, மான், பக்ஷி, சண்டாளன், புல்கஸன் இவர்களின் பிறவியை ப்ராஹ்மணனைக் கொன்றவன். அடைகிறான் என்ற சுலோகத்தினால் பிரம்மஹத்தி முதலிய மஹா பாபங்களை செய்தவர்களுக்கு (அந்த பாப கர்ம பலனின் அனுபவத்தின்) முடிவில் மனுஷ்யப்பிறவி கிடைக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு "புண்ணியம் நீங்கியதும் மனுஷ்ய லோகம் வருகிறார்கள்" "சிறந்த புண்ணியம் செய்தவன் புண்ணிய சேஷம் இருக்கும் வரை (புண்ணிய லோக) வாஸம் செய்து விட்டு கர்மாவை செய்வதற்காக அந்த லோகத்திலிருந்து மறுபடியும் இந்த லோகத்திற்கு வருகிறான்" என்ற சுருதி (புண்ணிய பலன் அனுபவத்தின்) முடிவில் மனிதப்பிறவி அடைவதைத் தெரிவிக்கிறது.

ஆகையினாலே இப்பொழுது தான் நம்மால் மனித ஜன்மமானது அடையப்பட்டது என்று மயங்க வேண்டியதில்லை. முன் சொன்ன யுக்தியினாலேயே ஜீவர்களிடத்தில் பார்க்கப் படுகிற ஸுக, துக்கங்கள் பலவிதமாக இருப்பது பொருந்துவதற்காக முற்பிறவிகளில் செய்த கர்மாக்களும் பலவிதம் என்று ஒப்புக்கொள்வதினாலே, முன் முன் ஜன்மங்களில் செய்த கர்மாநுசாரமாக மேல், மேல் ஜன்ம பலாநுபவம் என்று, ஜன்ம, மரணபிரவாஹ லக்ஷணத்துடன் கூடிய சம்சாரத்தினுடைய அநாதித்வமானது சித்தித்த பொழுது இதுவரை நம்மால் அடையப்பட்ட எண்ணற்ற மனித ஜன்மங்களால் என்ன சாதித்து விட்டோம்? நம்மால் ஸுகமானது ஸ்திரமாக்கப்பட்டதா? அல்லது துக்கமானது நிர்மூலமாக்கப்பட்டதா? இப்பொழுது இந்தக்கலியானது நம் மனதை மலினம் அடையச் செய்கிறதென்றால் கிருதாதி புண்ணிய யுகங்களில் சரீரம் நம்மால் அடையப்படவில்லையா என்ன? நாம் ஈஸ்வர அம்சமாக

அவதரித்த மஹாபுருஷர்களை பார்க்கவில்லையா? எதற்காக நாம் கிருதாதியுகங்கள் வரை செல்ல வேண்டும்? இந்தக் கலியுகத்தில் நாம் ஈஸ்வர அம்சங்களுடன் கூடியவர்களை பார்க்க வில்லையா? அவர்களுடைய வதனாரவிந்தங்களில் இருந்து (முகத்தாமரைகளிலிருந்து) வெளிப்பட்ட தேவாம்ருதத்திற்கு ஒப்பான மதுரமானதும், மிகுந்த கஷ்டங்கள் என்ற முதலைகளால் சூழப்பெற்ற சம்சார சமுத்திரத்தில் மூழ்கிய ஜனங்களை அதிலிருந்து மீட்பதற்கு உதவிடக்கூடிய மிதக்கும் கட்டைகளுக்கு ஒப்பான வசனங்களை நாம் கேட்கவில்லையா? இருப்பினும் நாம் க்ருதார்த்ததையை (பிறவிப்பயனை) அடைந்தோமா? மனதின் வேகத்தைக்கட்டுப்படுத்தினோமா? இயன்றவரை அல்லது முடிந்த அளவு அவர்களால் கூறப்பட்ட வழியைப் பின் பற்றினோமா?

எப்பொழுதும் பிறப்பை எடுத்தவர்களாகவே இருந்து கொண்டு, தங்கத்தில் உள்ள ஆசைகளினால் எல்லாப் பக்கங்களிலும் ஓடிக்கொண்டும் ஜாதி, நீதி, குலம், ஆச்ரமம் முதலானவைகளைக்கூட எண்ணிப்பார்க்காமல் இஷ்டப்படி அதிலேயே இரமித்துக்கொண்டு, கோபம் கொண்ட சர்ப்ப ராஜனுடைய படத்தின் காந்தி போல், காந்தி உள்ள விஷயங் களை இன்பத்தை தருபவைகளாக எண்ணிக்கொண்டு, ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய வாக்யங்களைக் கேட்டும், விபரீத மாக நடந்த துரியோதனனுடைய கட்சியில் சேர்ந்து விட்டோமா? இது மாதிரி விலங்கினால் கட்டப்பட்டவர்களாகிய நமக்கு எப்படி பந்த நிவிருத்தியானது ஏற்படும்? எப்படித்தான் நம்மால் நித்யானந்த ஸுகமானது அடையப்படும்? எதற்காக மனித ஜன்மமானது உண்டாயிற்று? "மனிதப்பிறவி கிடைத்தும் எவர்கள் ஞானிகளாகவில்லையோஅவர்களுக்கு பசுத்தன்மை தான் சிறந்தது. (ஏனெனில் பசுக்களுக்கு 'செய்ய வேண்டியதைச் செய்யாததினாலோ செய்யக் கூடாததை செய்வதினாலோ ஏற்படும்) பிரத்யவாயம் என்ற பாபம் அவைகளுக்கு இல்லாததினால்", "மேலான புண்யம் என்ற மூல்யத்தால் (விலையால்) சரீரம் என்ற ஓடம் உன்னால் விலைக்கு வாங்கப் பட்டிருக்கிறது. அது உடைந்து போவதற்கு முன்னால் துன்பமாகிய கடலின் அக்கரையை அடைவதற்கு தாண்டிச் செல்ல வேண்டும்." "அடைய முடியாத மனிதப்பிறவியை அடைந்து, அதிலும் புருஷனாகப் பிறந்தும், எவன் தான் அடைய

வேண்டிய பலனில் கவனக்குறைவாக இருக்கிறானோ, அவனைக்காட்டிலும் மூடன் வேறு எவன் இருக்கிறான்?" இது முதலான வசனங்களால் துன்பக்கடலின் அக்கரையானது பிரஹ்மம் என்று அறியப்படுகிறது. இப்பொழுது அடைய விரும்பும் ஸுகமும் தற்காலிக துக்க நிவிருத்தியும் பசுவாதிகளுக்கு ஒப்பானது.

அந்த தாற்காலிக ஸுகங்கள் தான் பிரயோஜனம் என்றால் நாம் பசுவாதிகளை விட சிறப்பானவர்கள் அல்ல. பிரம்ம சூத்ர அத்யாஸபாஷ்யத்தில் ஸ்ரீசங்கரபகவத்பாதரால் இவ்வாறு கூறப்பட்டு இருக்கிறது.

"எப்படி பசு முதலானவைகளுக்கு சப்தம் முதலான விஷயங்களுடன் காது முதலான இந்திரியங்களுக்கு தொடர்பு ஏற்படும் பொழுது சப்தம் முதலியவைகளின் அறிவு ப்ரதி கூலமாக ஏற்பட்டால் அதிலிருந்து நிவர்த்தி ஆகின்றன. அநுகூலமாக இருந்தால் அவைகளை நோக்கிப் பிரவிர்த்திக் கின்றன. எவ்வாறு எனில், கம்பை உயர்த்திய கையை உடைய புருஷனைப்பார்த்து "என்னை இம்சிப்பதற்கு இச்சிக்கிறான்" என்று அறிந்து திரும்பி ஒடுவதற்கு ஆரம்பிக்கின்றன. கைகளில் பசும் புல்லை பார்த்த உடன் திரும்பி அவனிடம் வருகின்றன. அதே போல் மனிதர்களும் கோபத்தினால் க்ரூரமான பார்வை யுடன் கூடியவனாயும், பலவானாயும் உடையவனைப் பார்த்து அவனிடமிருந்து விலகிச்செல்கின்றனர். அவர்களை விட மாறு பட்டவர்களை பார்த்தவுடன் அவர்களைக்குறித்து வருகிறார்கள் என்று ஆத்ம ஸாக்ஷாத்காரமில்லாதவர்கள் பசுக்களுக்கு ஸமமான கட்சியில் வைக்கப்பட்டுள்ளனர். பிராணிகளில் மனிதர்கள் உயர்ந்தவர்களாக கருதப்படுகிறார்கள். "பூதங்களில் பிராணிகள் உயர்ந்தவர்கள், பிராணிகளில் புத்தியுடன் கூடியவர்கள் மேலானவர்கள். புத்தியுடையவர்களில் மனிதர்கள் மேலானவர்கள்".

மனிதர்களுள் ப்ராஹ்மணர்கள் உயர்ந்தவர்கள். ப்ராஹ்மணர்களுள் வித்வான்களும். வித்வான்களில் நிச்சய புத்தி உள்ளவர்கள் (ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை அடைந்தவர்கள்) சிறந்தவர்கள்" என்று. பசுவாதிகளுக்கு ஸுகத்தை அடைவதிலும் துக்கத்தை நீக்குவதிலும் உள்ள முயற்சி போல் மனிதர்களுக்கும்

இருக்குமானால் முன் சொன்ன சிறப்பு எப்படி பொருந்தும்? புத்தியைக் கொண்டு வாழ்க்கை நடத்துவது என்பது (பசுக்களிடமும், மனிதனிடமும்) பொதுவாக இருப்பதால் மிகுந்த பலம் உள்ள யானை முதலான பிராணிகளையும் கூட தம் புத்தியால் (மனிதர்கள்) வசப்படுத்துகிறார்கள் என்பது அவர்களுக்கு சிறப்பு என்றால் தன் மனதை கட்டுப்படுத்தாமல் மற்றவைகளை தன் வசப்படுத்துவது சாம்பலில் ஆஹுதி செய்வது போன்றது (பயனற்றது).

அதில் (அதாவது மனதை வசப்படுத்தாவிடில்) ப்ராஹ்மணர்களுக்கும் சிரேஷ்டத்வம் ஏற்படாது. ஏனெனில் இப்படிப்பட்ட ஸாமர்த்தியமானது அநேகமாக மற்றவர் களிடத்திலும் காணப்படுகிறது. ஆகையினாலே சாஸ்திர அர்த்தத்தை நன்றாக அறிந்து, சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டதை கடைப்பிடித்து, நிஷித்தத்தைத் தள்ளி, நமக்கு உள்ள விருப்பப்படி ஸுகத்தை சம்பாதிப்பதற்கும் துக்கங்களை நீக்குவதற்கும் உள்ள சாமர்த்தியம் மனிதர்களுக்குத் தான் இருக்கின்றது என்ற இந்த அபிப்பிராயத்தினால் தான் முன்பு சொல்லப்பட்ட பிரமாணம் பிரவர்த்திக்கிறது.

அப்பொழுது சாஸ்திரமானது ப்ராஹ்மணர்களுக்கு அதீனமாக இருப்பதால் அவனுக்கு மற்றவர்களைக் காட்டிலும் சிறப்பு மிகவும் பொருந்துகிறது. எப்பொழுது மனிதர்கள் மனித ஜென்மத்தை அடைந்து சாஸ்திர விஹித கர்மாக்கள் செய்யாமல், நிஷித்தகர்மாக்களை செய்கிறார்களோ, அப்பொழுது கர்ம அதிகாரம் இல்லாததினால் அவனுக்கு பசுத்தன்மை தான் மேலானது என்று கூறப்படுகிறது.

"ப்ரத்யவாயம் ஏற்படாததினாலே அவர்களுக்கு பசுத்தன்மை தான் மேலானது" என்று. உலக விவகாரத்திலும் கூட விதி, நிஷேதங்கள் மனிதர்களுக்குத் தானே தவிர பசுவாதிகளுக்கு அல்ல. அரசாங்கமும் துஷ்ட மனிதர்களை தண்டிப்பது போல், துஷ்ட பசுவாதிகளை தண்டிப்பதில்லை. தண்டனையானது இப்பொழுது ஏற்பட்ட தோஷத்தை நீக்குவதற்குத்தான் (மறுபடியும் அந்த தோஷத்தை செய்யாமல் இருப்பதன் பொருட்டுத்தான்) தண்டிக்கப்பட்டாலும் கூட பசுவானது தன்னுடைய தோஷத்தை விடுவதற்கு சாமர்த்யம்

உடையது ஆகாது. பசு, ப்ராஹ்மணர்களை அழித்த (கொன்ற) புலி முதலியவைகளுக்கு பிராயஸ்சித்தமானது சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டவில்லை. ஆகையினால் விதி நிஷேத சாஸ்திரத்தில் மனிதர்களுக்குத் தான் அதிகாரம் உள்ளது.

சாஸ்திரம் என்றால் ஹிதத்தையும் அஹிதத்தையும் எது உபதேசிக்கிறதோ அது சாஸ்திரம். ஹிதத்தை ஏற்பதிலும் அஹிதத்தை நீக்குவதிலும் எல்லோருக்கும் ஆசையானது சுபாவமாகவே இருப்பதனால் எல்லோரும் தாமாகவே ஹிதத்தை சம்பாதிக்கிறார்கள். அஹிதத்தை நீக்குவதற்கு முயற்சி செய்கிறார்கள். இப்படி இருக்கும் பொழுது இங்கு சாஸ்திரம் எதன் பொருட்டு என்று கேட்டால், எல்லா ஜனங்களும் சாஸ்திரத்தை அபேக்ஷிக்காமல் விரும்பியதை சம்பாதித்துக் கொண்டு சாஸ்திரத்தில் பிரவிர்த்திக்க மாட்டார்கள். ஆனால் இவ்வுலகில் பொதுவாக எந்த எந்த வஸ்துவை விரும்புகிறானோ, அதை கூட தனது புத்தியால் தனக்கு வசமாக செய்வதற்கு திறமை உள்ளவனாக இல்லை என்ற இவ்விஷயம் தீர்மானமாக உள்ளது. இப்படி இருக்க பரலோக ஸுகத்தின் காரணத்தைப் பற்றி சொல்லவும் வேண்டுமா? "மூவுலகிலும் எந்த ஒருவனும் ஸுகத்தின் காரணமாகத்தான் முயற்சிக்கிறானே தவிர துக்கத்தின் காரணமாக முயற்சிக்கிறதில்லை".

தேஹத்தில் நான் என்ற எண்ணம் அதிலிருந்து உண்டான தன்னைச் சேர்ந்த விஷயங்களில் என்னுடையது என்ற எண்ணம் இவ்விரண்டும் தான் துக்கத்திற்கு காரணமானவை. அழியக் கூடிய சரீரத்தில் நான் என்கிற எண்ணம் உள்ளவன் வியாதியினால் ஏற்படும் துன்பம் முதலியவற்றை தனக்கு வந்ததாக அறிந்து அநுபவிக்கிறான். மனைவி, புத்திரன், பொருள் இவர்கள் அழிந்து போனால் பெரிய ஆபத்தை அடைகிறான். எதிரியின் அழிவில் அடைவதில்லை" என்று ஆசார்யாள் சொல்லியிருப்பதாலும், அவ்வாறே உலகில் பிரசித்தமாக இருப்பதாலும், எப்பொழுதும் ஸுகத்தை அடைவதற்கும் துன்பம் விலகுவதற்கும் முயற்சிக்கிறவன் ஏன் ஸுகத்தை அடைகிறதில்லை. துன்பம் விலகினவனாக ஆகிறதில்லை என்ற இந்த விஷயத்தில் காரணம் சொல்ல வேண்டும். நன்றாக சாதனத்தை செய்கிறவன் பலனை அடைவதில்லை என்பது பொருந்தாது.

ஏதோ ஒரு சமயத்தில் ஸுகத்தை அடைகிறான், துக்கமும் நீங்குகிறதே என்றால், எப்பொழுதும் ஸுகத்தை அநுபவிக்க ஆசை உள்ளவனுக்கு ஏதோ ஒரு சமயத்தில் மட்டும் சுகம் கிடைப்பதால் மனோரதமானது நிறைவேறுமா? எப்பொழுதும் அதற்காக முயற்சிக்கிறவனால் ஏன் ஒரு சமயத்தில் மட்டும் அது அடையப்படுகிறது? இவனுடைய கடினமான முயற்சிக்கு (பிரயத்தனத்திற்கு) ஏதோ ஒரு சமயத்தில் மட்டும் அடையப் படுகிற அப்பேறப்பட்ட க்ஷணிக ஸுகத்திற்கு காரணமாக இருக்கும் தன்மை பொருந்துமா? அதுவும் இவனுடைய முயற்சி யின் பலனா? மற்றொரு சமயத்தில் எவ்வளவு பிரயத்தனம் செய்தாலும் அதற்கு தகுந்த ஸுகமானது அடையப்படவில்லை. நேர்மாறாக துக்கம் அடைவது உலக விவகாரங்களில் காணப்படுவதால், உலகில் ஒருவன் வியாபாரம் செய்து கொண்டு ஆரம்பத்தில் லாபம் அடைந்து பிரதி தினம் வியாபாரத்தை பற்றிய அநுபவத்தை வளர்த்துக் கொண்டபோதிலும் பின்னால் நஷ்டம் அடைகிறான். இவனுடைய வியாபாரம் முழுவதும் இலாபத்திற்கு காரணமாகும்.

ஆனால் ஆரம்பத்தில் வளர்ச்சியும் முடிவில் குறைவும் ஏற்பட என்ன காரணம்? "ஸமமாக பூமியை உழுபவர்கள் உள்ளும், ஸமமாக சாஸ்திரத்தை அத்யயனம் செய்பவர்கள் உள்ளும் சிலர் மேன்மை அடைகிறார்கள். சிலர் தாழ்மை அடைகிறார்கள். ஒரே தேவனுடைய சேஷ்டையினாலே" (செயலினாலே) என்று சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது. ஆகையால் ஸுகப்பிராப்திக்கும் துக்க நிவர்த்திக்கும் சாதனத்தை சாஸ்திரம் இல்லாமல் நம்மால் அறிந்து கொள்ளவே முடியாது. உலகில் ஒருவனாலும் சாஸ்திரத்தை சரணடையாமல் (சாஸ்திரத்தின் உதவி இல்லாமல்) இது ஸுகத்திற்கு சாதனம், இது துக்கத்திற்கு சாதனம் என்பது தீர்மானிக்கப்பட்டதில்லை. தீர்மானிக்கப் பட்டிருக்குமேயானால் எல்லோருமே அந்த ஸாதனத்தை கடைப்பிடித்து ஸுகத்தை அடைந்திருப்பார்கள், துக்கத்தைப் போக்கியிருப்பார்கள்.

பிரத்யக்ஷ, அநுமான லௌகிக சப்தம் இவை எல்லா ஜனங்களுக்கும் ஒரே மாதிரியாக இருப்பதால், அவர்களால் இந்த பிரமாணங்களினாலேயே (பிரத்யக்ஷம் முதலிய) அதை அறிவதற்கு முடியுமானால் அப்பொழுது அந்த அந்த

பிரமாணங்களில் ஸாமர்த்தியம் உடையவர்களால் அந்த, அந்த ஸாதனங்கள் அவசியம் சொல்லப்பட வேண்டும். சப்த, ஸ்பரிச, ரூப, ரஸகந்தாதிகள் தான் ஸுகத்திற்கு ஸாதனம் என்று நிச்சயம் செய்யப்பட்டால் இவைகள் எல்லாம் சேர்ந்து ஸுகத்தை கொடுக்கின்றனவா? அல்லது தனித்தனியாகவா? என்றால் முதலில் கூறப்பட்டது பொருந்தாது. ஏனெனில் ஒவ்வொன்றும் தனித்தனியாக அடையப்பட்ட ஸமயத்திலும் கூட ஸுகமானது அடையப்படுவதினால் அதுவும் கூட அறிபவர்களுக்குத்தான் ஸுகப்ரயோஜகமாகும். ஒரே ஸமயத்தில் அனைத்தையும் அறிவது என்பதும் இயலாது. இரண்டாவதும் பொருந்தாது. ஏனெனில் துக்கஸமயத்தில் ஸுகமானது உண்டாவதில்லை. அப்பொழுது துவேஷம் உண்டாகிறது. மனதானது துக்கத்தால் வியாபிக்கப் பட்ட பொழுது வீணா கானம் முதலியவைகள் அறியப்படுகிற தில்லை.

ஸுகத்தை உண்டாக்கக்கூடிய வஸ்துவானது ஒரு போதும் துவேஷ விஷயமாகாது. நல்ல தூக்கத்தில் விஷயங்கள் இல்லாமலேயே துக்க நிவர்த்தியும், ஸுகத்தின் அடைவும் ஏற்படுகிறது. சப்தாதி விஷயங்கள் எல்லாம் சேர்ந்தாவது தனித்தனியாகவாவது காரணத்தன்மை (ஸுகப்பிராப்திக்கும் துக்க நிவிர்த்திக்கும்) உடையதாக இருப்பது பாதிக்கப்படுகிறது. எது இருக்கும் பொழுது காரியம் உண்டாகிறதோ, எது இல்லாத போது உண்டாவதில்லையோ அதுதான் காரணம். சப்தாதி விஷயங்கள் இருக்கும் போது தான் ஸுகம் என்றால் அவைகள் இருக்கும் பொழுதே பிரிய வஸ்துவானது நஷ்டமடைந்த ஸமயத்தில் ஸுகமானது ஏற்படாது.

சப்தாதிகள் இல்லாத நல்ல தூக்கத்திலும், சமாதியிலும் நிரதிசயஸுகமானது ஏற்படுகிறது என்றால் எப்படி சப்தாதி களுக்கு ஸுக காரணத்துவம் ஏற்படும்? "அந்த அக்ஞானிக்கு நல்ல தூக்கத்தில் பிரகாசிக்கிற மேலான நிரதிசய ஆனந்தமானது துக்கம் கலவாத ஆனந்தம். இப்படிப்பட்ட ஆனந்தம் இல்லா விடில் எவன் தான் சேஷ்டிப்பான்? எவன் தான் ஜீவிப்பான் என்ற சுருதியினால் விஷயங்களிலிருந்து கிடைக்கும் ஆனந்தத்தை விட நல்ல தூக்கத்தில் உள்ள ஆனந்தம் சிறந்தது என்று தெரிகிறது.

ஸுகத்திற்குக் காரணமாக அறியப்பட்ட எல்லா விஷயங்களையும் விட்டு விட்டு ஜனங்கள் தூக்கத்தை விரும்புகிறார்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்தது தான். அந்தச் ஸமயத்தில் அதிகமான அன்பிற்குரியவர்கள் எழுப்பினாலும் கோபப்படுகிறார்கள். அதனாலும் அந்தச் ஸமயத்தில் தோன்றுகிற விஷயங்களால் வெளிப்படாத ஸுகம் சிறந்தது என்பதை நன்றாக அறியலாம்.

அந்த (நல்ல தூக்கமாகிய) ஸுஷுப்தியாகிய அக்ஞான அவஸ்தையில் அக்ஞானத்தால் மறைக்கப்பட்டிருந்தாலும் விஷயங்கள் அற்று இருப்பதினாலே அந்த அவஸ்தையில் உள்ள ஸுகமானது லௌகிகஸுகத்தைக் காட்டிலும் மேலானது என்றால், அக்ஞானத்தால் மறைக்கப்படாத நிர்விகல்ப சாக்ஷாத்காரத்தினால் ஸ்வஸ்வரூபமாகவே உள்ள சமாதி காலத்தில் அடைந்த ஸுகத்தின் மேன்மையைச் சொல்லவும் வேண்டுமா? எப்படி சந்திரனைக் காட்டிலும் மேகத்தினால் மறைக்கப்பட்ட சூரியனுடைய பிரகாசமானது அதிகமாக இருக்கிறது என்றால் மேகத்தினால் மறைக்கப்படாத சூரிய பிரகாசத்தைப் பற்றி சொல்லவும்வேண்டுமா? ஆகையினால் ஆத்மஸ்வரூபம் தான் ஸுகம் என்பது நித்ய ஸித்தமாக இருந்தாலும், அது அக்ஞானத்தினால் அறியப்படாததாக இருக்கிறது.

எப்படி எனில் வீட்டின் உள்ளேயே புதையலை வைத்துக் கொண்டு வெளியில் இருப்பதாக எண்ணுவது போல், விஷயங்களில்தான் ஸுகம் இருக்கிறது என்று நாம் மோகம் அடைகிறோம். இதில் எந்த ஒரு சந்தேகமும் இல்லை. விசேஷமாக பந்தப்படுத்துவதினால் "விஷயம்" என்ற சப்தமானது ஏற்படுகிறது. ஆகையினாலே சப்தாதிகள் விஷயங்களாக இருப்பதினாலே அதற்கு பந்தகத்வமானது கூறப்படுகிறது. பகவானால் இவ்வாறு கூறப்பட்டுள்ளது. "மான், யானை, விட்டில் பூச்சி, மீன், வண்டு இந்த ஐந்து பிராணிகளும் தன், தன் குணங்களால் கட்டுப்பட்டவைகளாக சப்தாதி விஷயங்களில் கிரமமாக ஒவ்வொரு விஷயத்திலும் ஒவ்வொன்றும் ஸுகம் இருக்கிறது என்று அதனால் கவரப்பட்டு அந்த பந்தத்தினால் நாசத்தை அடைகிறது. இவ்வாறு இருக்கும்பொழுது இந்த பஞ்ச விஷயங்களிலும் ஸுகம் இருப்பதாக நினைத்து அவைகளில்

மூழ்கிய மனிதனைப் பற்றி கேட்கவேண்டுமா?" என்பது இதனால் அறியப்படுகிறது.

ஆகையால் வேதத்தில் காட்டப்பட்ட திருஷ்டாந்தத்தை அநுசரித்துஆத்ம ஸ்வரூபம் தான் ஸுக ஸ்வரூபம் என்பதை கட்டாயம் ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறபடியால் அதை மறைக்கிற அக்ஞானத்தை அழிக்காமல் ஆத்ம ஸுகம் கிடைக்காததால் அப்பேற்பட்ட அக்ஞானத்தை நாசம் செய்வதற்காக மனிதன் பிரயத்தனம் செய்ய வேண்டும். அதில் ஞானத்தைத் தவிர வேறு ஒன்றுக்கும் அக்ஞானத்தை போக்கும் சக்தி இல்லாததால் இப்படி இருக்கும் போது அந்த ஆத்ம ஞானமானது எல்லோருக்கும் இருந்தாலும் அக்ஞானம் நிவர்த்தி ஆகாது. சாஸ்திரம் கற்பதால் உண்டான பரோட்ச ஞானம் உள்ளவர்களாக இருந்தாலும் பசுவாதிகளுக்கு ஒப்பானவர்களே. ஆகையால் இங்கு நித்ய, சுத்த,புத்த, முக்த, பிரத்யக் அபின்ன, அத்விதீய பிரம்ம தத்வசாக்ஷாத்காரம் தான் அக்ஞான நிவிர்த்திக்கு காரணமாகிறது. "அதை (பிரம்ம சொரூபத்தை) அறிந்து தான் மிருத்யுவைத் தாண்டுகிறான்".

மோட்சத்திற்கு வேறு வழி இல்லை. "எந்த பிரம்மத்தில் பிருதிவி, அந்தரிக்ஷம், தேவ லோகம் என்னும் எல்லா லோகங் களும் எல்லா இந்திரியங்களும் மனதும் கற்பிதமாக உள்ளனவோ அந்த ஒரே ஆத்மாவையே அறிந்து கொள்ளுங்கள். இதைத்தவிர வேறு வஸ்துக்களைப் பற்றிய சொற்களை விட்டுவிடுங்கள். இது தான் மோட்சத்திற்கு ஹேது. "ஞானத்தால் தான் கைவல்யம் என்னும் மோக்ஷத்தை அடைகிறான்" "ஹே ஸௌம்ய! அந்த ஆத்ம ஞானிஅவித்யை என்னும் முடிச்சை அறுத்தெறிகிறான்". "ஆத்மாஅறியத்தக்கது" என்பது முதலான நூற்றுக்கணக்கான சுருதிவாக்யங்கள் கோஷிக்கின்றன. இந்த ஞானத்தை எப்படிசம்பாதிக்க வேண்டுமெனில் "சிரவணம் செய்ய வேண்டும், மனனம் செய்ய வேண்டும் நிதித்யாசனம் செய்ய வேண்டும்" என்று சாக்ஷாத்காரத்திற்கு காரணமாக சுருதியானது மாதாவைப் போல் நமக்கு தெரிவிக்கிறது. அந்த சிரவணம் "சந்யாசத்திற்குப் பின் சிரவணம் செய்ய வேண்டும்" என்று இதனால் சந்யாசத்திற்கு பின் சிரவணம் என்று அறியப்படுகிறது.

அதனால் விசாரம் இல்லாததினால் துக்கத்திற்கு காரணமான வஸ்துக்களையே ஸுகத்திற்கு காரணம் என்ற விபரீத ஞானத்தால், அந்த அந்த வஸ்துக்களை சம்பாதிப்பதில் ஆசை ஜனங்களுக்கு ஏற்படுகிறது என்பது பொருத்தமானது தான். அதிலும் ஸுகமென்பது இதுதான் என்று அறிந்து கொள்ளப்படவில்லை. விஷயங்களில் ஆசையை வைத்து அந்த ஆசை நிறைவேறிய சமயத்தில் ஆசை அடங்குவதையே ஸுகம் என்ற விபரீத நினைப்பு ஜனங்களுக்கு நிச்சயமாக இருக்கிறது. "தாகத்தால் வாய் உலர்ந்து போகும் போது குளிர்ந்த இனிப்பு ஜலத்தைக் குடிக்கிறான். பசியால் துன்பம் அடைந்தவன் பருப்பு முதலியவை கலந்த அன்னத்தைச் சாப்பிடுகிறான். காமமாகிற நெருப்பு எரியும் பொழுது பெண்ணை ஆலிங்கனம் செய்கிறான். இவ்வாறு மனிதன் வியாதி அடங்குவதையே ஸுகம் என்று விபரீதமாக நினைக்கிறான்'' என்று பர்த்ருஹரியால் சொல்லப்பட்டிருக்கிறது.

உண்மையில் குளிர்ச்சியான இனிமையான நீர் முதலியவைகளினால் ஸுகமானது உண்டாகுமே என்றால் அதனாலே எப்பொழுதும் ஸுகத்தினுடைய ஆசையின் பொருட்டு அதற்கு காரணமான அந்த அந்த சாதனங்களில் உண்டான ஸுகத்தில் 'போதும்' என்ற புத்தி (திருப்தி) ஏற்படாததினால். மேலும் விஷயங்களில் ரமிப்பதினால் வியாதி முதலிய துக்கங்களை அடைவதைப் பார்க்கின்றோம். மேலும் மேலும் அதிகமாக செய்யப்படுகிற பகவத் த்யானம் முதலியவை மேலும் மேலும் அதிகமான ஸுகத்திற்கு காரணம் ஆவது போல விஷயங்களை அதிகமாக அநுபவித்தால் நிச்சயமாக அதிகமானஸுகம் ஏற்பட வேண்டியிருக்க அவை துக்கத்திற்கு காரணமாவது எப்படி என்று கேட்டால், பதில் சொல்ல வேண்டியவன் மௌனமாக இருப்பதும், முன் சொன்ன விஷயத்தை உறுதிப்படுத்துகிறது. எப்பொழுதும் ஆன்ம ஸ்வரூபத்திலேயே மனதை செலுத்துவதில்லை என்பது தெரிந்த விஷயமே.

அந்த சந்யாஸமானது "எந்த நாளில் வைராக்யம் ஏற்பட்டதோ அன்றே சந்நியாசி ஆக வேண்டும்" என்று திட வைராக்யத்திற்கு பிறகு தான் சிரவணம். அந்த சிரவணத்தின் பொருட்டு ஏற்பட்ட சந்நியாசமே விவிதிஷா சந்யாசம் என்று

கூறப்படுவதால் ப்ராஹ்மணர்கள் வேதபாராயணத்தாலும், யஜ்ஞத்தினாலும், தானத்தினாலும் (நினைத்ததைச்) சாப்பிடாமலிருக்கிற தபஸினாலும் என்ற சுருதியினால் விதிக்கப்பட்ட கர்மாக்களின் பலனை விரும்பாமல் ஈஸ்வர அர்ப்பண புத்தியுடன் அனுஷ்டிப்பவர்களுக்கு இந்த விவிதிஷா சந்நியாசமானது சிரவணத்திற்கு சாதனமாக ஆகிறது என்று அறியப்படுகிறது.

எப்படி கடுமையான பசியோடு கூடிய மனிதன் போஜனம் தவிர வேறொன்றையும் விரும்பமாட்டானோ, போஜனத்திலும் காலதாமதத்தை பொறுத்துக் கொள்ள மாட்டானோ, அது போல் பிறவிக்குக் காரணமான கர்மாக்களில் மிகவும் வெறுப்புற்றவனாய் ஞானத்திற்கு சாதனங்களான சிரவணாதிகளில் எவனுக்கு மிகுந்த வேகம் உள்ளதோ, அவனுக்குத்தான் விவிதிஷா நன்றாக ஏற்படும் என்று சொல்லப்படுகிறது, அப்படிப்பட்ட விவிதிஷையுடன் கூடியவனுக்குத் தான் ஞானத்திற்கு சாதனமான விசாரத்திலும் அதன் சாதனமான சந்நியாசத்திலும் அதிகாரம் ஏற்படுகிறது, அப்படிப்பட்ட விவிதிஷை மனிதனுக்கு திருஷ்ட, அதிருஷ்ட விஷயங்களில் திட வைராக்யம் இல்லாமல் உண்டாகாததினால், ஈஸ்வர அர்ப்பண புத்தியினாலே சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட கர்மாக்களை அனுஷ்டிப்பதினால், பாபம் நீங்குவதின் மூலமாக சித்த சுத்தி அடைந்து அதன் மூலமாக வைராக்யத்திற்கு காரணமாகிறது என்று விளக்கப்பட்டது. "தர்மத்தினாலே பாபத்தைத் தொலைக்கிறான்" "யோகிகள் சித்த சுத்தியின் பொருட்டு நிஷ்காம கர்மம் செய்கின்றார்கள்" என்று சுருதி ஸ்மிருதி முதலியவைகளால் தர்மம் பாபத்தை விலக்கும் என்பது தெரிகிறது.

பாபத்தால் கலக்கப்படாத மனம் உள்ளவனுக்குத்தான் வஸ்துவை ஆராய்ந்து பார்க்கும் சாமர்த்தியம் ஏற்படுவதால், பாபம் நீங்கிய மனிதனுக்கு வஸ்துக்களை ஆராய்ந்து பார்ப்பதால் உண்டாகிற சரீரம் முதல் பிரம்மா வரையிலுள்ள அழியக் கூடிய போக்ய வஸ்துக்களில் வைராக்யம் நன்கு பொருந்துமானதால், கர்மாவில் அதிகாரம் உள்ள மனிதன் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட கர்மாக்களை அனுஷ்டித்து மனதை சுத்தமாக்கி விஷயங்களிலிருந்து வைராக்யம் அடைந்து கர்மாக்களை தியாகம் செய்து, ஆத்மவிசாரம் என்ற ஒன்றிலேயே ஈடுபட்டு,

ஆத்மஸ்வரூபத்தை சிரவணம் (விசாரம்) செய்து, மனனம் (யுத்திகளைக் கொண்டு சிந்தனம்) செய்து, நிதித்யாசனம் (வேறு ஒன்றையும் நினைக்காமல் ஆத்ம ஸ்வரூபம் ஒன்றையே த்யானம்) செய்து, உள்ளங்கை நெல்லிக்கனிப்போல் சாக்ஷாத் காரம் செய்து, அக்ஞானத்தை தொலைத்து நித்தியானந்தத்தை அடைய முடியும்.

மிகவும் அறிவற்ற தன்மை உள்ள பசு, பக்ஷி முதலான பிராணிகளால் (நித்தியானந்தத்தை) அடைய முடியாது. விஷய ஸுகத்தை அனுபவிப்பதிலேயே மிகவும் ஈடுபட்டதால், வைராக்யம் ஏற்படாத கர்மாவில் அதிகாரம் இல்லாத தேவர் களாலும் (நித்தியானந்தத்தை) அடைய முடியாது. மனிதர்களுக்கு மட்டுமே "எப்படி சப்தாதிகளுக்கு ஸுக காரணத்துவம் ஏற்படும்?" "கர்மாவில் அதிகாரம் உள்ளதால் மனித ஜன்மமானது சிறப்புடையதாகிறது" என்பது "மனிதப் பிறப்பானது துர்லபம்" "மனித பிறவியைஅடைந்தும் மேலான புண்ணியம் என்ற மூல்யத்தினால்" முதலிய பிரமாணங்களினால் அறியப்படுகிறது. அதிலும் தாழ்ந்த பிறவியை அடைந்தவர்கள் தன்னை விட உயர்ந்த பிறவியை அடைந்தவர்களிடமும் தெய்வத்திடமும் பக்தி கொள்வதால் மேலும் மேலும் உயர்ந்த பிறவியை அடைவதின் மூலம் முன் சொல்லப்பட்ட எல்லாவித ஞான சாதன சாமக்கிரியை அடைந்து ஞானத்தை அடைய முடியும்.

இவ்வாறு தேஹம் எடுத்தலே துக்கத்திற்கு காரணம். அந்த தேஹம் எடுப்பதற்கு கர்மமானது காரணமாகிறது. ராக, துவேஷங்கள் கர்மத்திற்கு காரணம். நன்மை, தீமை முதலிய அத்யாசங்கள் ராக துவேஷங்களுக்குக் காரணம். அந்த ராக, துவேஷங்களுக்கு த்வைத ஞானம் (இரண்டாவதின் தோற்றம்) ஏற்படுவது தான் காரணம். (அந்த த்வைத ஞானம்) அத்விதீய ஆத்மதத்துவத்தை அறியாததினால் உண்டாகிறது. அந்த மூலா க்ஞானமானது ஆத்ம ஞானத்தினால் நாசம் ஆகும் பொழுது துக்கமானது முற்றிலும் நீங்குகிறது (அத்யந்த நிவிருத்தியாகிறது) ஆத்ம ஸ்வரூப ஞானம், துக்கம் அடியோடு விலகுவதற்குக் காரணமாகிறது. அப்பேறப்பட்ட ஞானம் உண்டாவதற்கு இந்த லோகமும், பிரம்ம லோகமும் தான் இடம். "எங்கு வித்தையினால் (ஞானத்தினால்) கர்மங்களானது அற்றுப்போகிறதோ, அப்பொழுது மேலானதை அடைகிறார்கள். வித்வான்களும்,

தபஸ்விகளும், தக்ஷிணமார்க்கத்தை அடைய மாட்டார்கள்" என்று சுருதியில் கூறப்பட்டுள்ளது.

சிறந்த கர்மா, உபாசனை இவைகளால் அடையக் கூடிய பிரம்மலோகம் சாமான்யமாக அடைய முடியாத படியால், மனுஷ்ய லோகத்தில் தான் ஞானத்தை சம்பாதிக்க வேண்டும். "இவ்வுலகில் அறிந்தானே ஆனால் பிறகு சத்யம் (பலன்) இருக்கிறது. இவ்வுலகில் அறியாவிட்டால் பெரிய நாசம்" என்றும் "(பூலோகத்தில்) கண்ணாடியில் போல் மனதில் ஆத்மா தெரியும். சொப்பனத்தில் போல பித்ரு லோகத்தில் தெரியும். ஜலத்தில் தெரிவது போல் கந்தர்வ லோகத்தில் தெரியும். பிரம்ம லோகத்தில் நிழலும், வெய்யிலும் போல் நன்கு தெரியும்" என்று ஸ்வர்க்க லோகமும் கந்தர்வ லோகமும் பித்ரு லோகமும் ஞானம் ஏற்படும் இடம் என்பதை மறுத்துக்கூறுகிறது. "மனுஷ்ய சரீரம் போனபின் பசு முதலானவைகளின் தேஹத்தை அடைந்தால் தன்னுடைய சரீரத்தையே அறியாத நிலையில் உண்மை தத்துவத்தைப் பற்றி எப்படி அறிவான?"

"இந்த மனித சரீரம் இருக்கும் பொழுதே எவர்களுக்கு பரமார்த்த ஞானம் ஏற்படவில்லையோ, அவர்களுக்கு இந்த தேஹத்தை விட்ட பிறகு அந்த பிரம்மம் வெகு தூரத்தில் உள்ளதாக ஆகிறது" என்று அங்கங்கே பிரமாணம் உள்ளது.

நித்யானந்தம் அடைவது வெகு தூரத்தில் இருக்கட்டும். பிராந்தியினால் ஏற்படும் விஷயானந்தத்தை அடைவது கூட தர்மம் (புண்ணியம்) இல்லாமல் ஏற்படாது. "அவனுக்கு ஸுகத்தை கொடுக்கிற எல்லாப் பொருள்கள் இருந்தாலும் அனுப விப்பதற்கு புண்ணியம் இல்லை" என்பது உலகில் பிரசித்தமாக இருக்கிறது அல்லவா? ஆகையால் சாஸ்திரத்தில் அறிவிக்கப்பட்ட கர்மாவினால் உண்டாகும் புண்ணியம் (பலனைக்கொடுக்க) தயாராக இருக்கும் பொழுதுதான் லௌகிக ஸுகமும் கிடைக் கிறது என்பதை அறிய முடிகிறது. ஆகையால் தான் தன் புத்தியினாலும், முயற்சியினாலும் கூடத் தான் விரும்பியதை அடைய முடிவதில்லை. துக்கத்தையும் நீக்க முடியவில்லை.

ஆகையினால் தான் சாஸ்திரமும் கூட (வேதமும்) காமம் உடையவர்களுக்கு நன்மை செய்வதில் உள்ள விருப்பத்தினால்,

உலக ஆசைகளாகிய புத்திர, பசு முதலான அல்ப பலன்களுக்கு சாதனங்களை விதிக்கிறது. அவ்வித பலனை மனிதன் தானாகவே சம்பாதிக்க முடியுமானால் எதற்காக அதன் உபாயத்தை வேதம் அறிவிக்கிறது? “நேராகவோ, அனுமானத்தாலேயோ, எந்த உபாயம் அறியப்படவில்லையோ, அதை வேதத்தினால் அறிகிறார்கள். ஆகையினாலே வேதமானது அறிந்து கொள்ளப்பட வேண்டியதாய் இருக்கிறது” என்பது வேதத்தினுடைய லக்ஷணம்.

ஆகையினால் தர்மம் அன்றி ஸுகத்தை ஒருகாலும் அடைய முடியாது என்று லௌகிகத்தினாலும் (உலக நடை முறையினாலும்) சாஸ்திரத்தினாலும் அறிந்ததினால் எல்லோரும் சாஸ்திரத்தை சரணம் அடைந்து, அதில் கூறப்பட்ட கர்மானுஷ்டானங்களை விதிமுறைப்படி செய்து தாங்கள் விரும்பிய ஸுகத்தை அடையமுடியும். சாஸ்திரத்தினால் நிஷேதிக்கப்பட்ட (விலக்கப்பட்ட) கர்மாக்களை அனுஷ்டிக்காமல் துக்கத்தை நீக்க வேண்டும்.



## புருஷார்த்த நிர்ணயம்

### சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவாபிநவ ந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள்

புருஷார்த்தத்தை கொடுப்பதில் ஸாமர்த்தியம் உள்ளவரும் இந்திரன் முதலான தேவர்களால் பூஜிக்கத் தக்கவரும், கிருஷ்ண பிங்களவர்ணமுள்ள புருஷனை, புருஷார்த்தத்தை அடைவதற்காக நான் வணங்குகிறேன்.

புருஷார்த்தம் என்பது யாது? தனக்கு அனுகூலமான புத்திரன், நண்பன், மனைவி முதலியவர்கள் அநித்யம் என்று பிரத்யக்ஷமாக நம்மால் காணப்படுகிறது. ஆகையால் அவைகள் புருஷார்த்தங்கள் அல்ல. "உலகில் இம்மூன்றையும் புண்ணியம் செய்தவர்கள் அடைகிறார்கள்" என்று அதுவும் புண்ணியத்தால் ஏற்படுவதாகத் தெரிவதால் அழிவற்றது என்று எண்ணக்கூடாது. நீர்க்குமிழி, அலை, நுரை, தாமரை இவைகள் தண்ணீரிலேயே உண்டானாலும் அவைகளின் நிலையான தன்மை ஸமமாக இல்லை. ஆகையால் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் இவை நான்கும்தான் புருஷார்த்தங்கள். அவற்றில் தர்மம் என்றால் சீக்கிரம் அழியக்கூடிய, வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மாக்களுக்கு பின்னால் வேறொரு காலத்தில் ஏற்படக்கூடிய பலனுக்குக் காரணமாயிருக்கும் தன்மை வேறு விதத்தில் பொருந்தாததால் அதற்காக கல்பிக்கப்படுகிற அதிருஷ்டம் (அபூர்வம்) என்னும் பதார்த்தமாகும். அப்படியே ஹவிஸினால் யாகம் செய்வது, கங்காஸ்நானம், புஷ்பம், பால் முதலியன சமர்ப்பித்துச் செய்யும் சிவ பூஜை ஆகிய செயல்கள் பலன் கொடுப்பதற்கு முன்பே அழிவது என்பது எல்லோரும் அறிந்ததே. இந்த கர்மங்களுக்கு ஏற்ற பலன் ஏற்படுவதற்கு முந்தின க்ஷணத்தில் இந்த கர்மாவோ அல்லது அதன் வியாபாரமான அதிருஷ்டமோ இருந்தால் பலனை கொடுக்கும் என்று ஒப்புக்கொள்வதால் முன்னால் செய்த கர்மாக்களுக்கு பின் காலத்தில் பலன் ஏற்படுவது பொருந்தக்கூடியதே.

அர்த்தம் என்றால் முன் சொல்லப்பட்ட தர்மத்திற்கு (அதிருஷ்டத்திற்கு) அனுகூலமான யாகம் முதலான கர்மாக்களை செய்வதற்கு ஸாதனமான தனதான்யம் முதலானவை. காமம்

என்றால் முன் சொல்லப்பட்ட தர்மம் உண்டாவதற்குக் காரண மான கர்மங்களில் பிரவிருத்திக்கச் செய்யும் ஆசை "எனக்கு தர்மம் உண்டாக வேண்டும்". நிஷித்த கர்மாக்களை செய்யத் தூண்டும் ஆசை காமம் அல்ல. ஏனெனில் அது புருஷார்த்தம் அல்ல. மற்றோஅது மனிதனுடைய துக்கத்திற்கு ஹேதுவாகிறது. மேலும் பகவத்கீதையில் பகவான் இப்படிக் கூறியுள்ளார்.

"பரத சிரேஷ்டனே! நான் பிராணிகளிடம் தர்மத்திற்கு விரோதமில்லாத காமமாக இருக்கிறேன்".

மோக்ஷம் என்றால் தத்வ ஞானத்தினால் மட்டும் அடையக் கூடியது. அந்த ஸ்வரூபம் மேலே வர்ணிக்கப்படுகிறது. இந்த நான்கு புருஷார்த்தங்களுள் எது சிறந்தது என்று ஆராயப் படுகிறது. நான்கும் புருஷார்த்தங்களாக இருப்பதினாலேயே ஸமம் தான் என்று தீர்மானிக்க முடியாது.

மனிதர்களிடத்தில் மனிதத் தன்மையானது ஸமமாக இருந்தாலும் அவர்களுள் வேறுபாடு காணப்படுகிறது. எவ்வாறெனில் சிலர் யஜமானர்களாகவும், சிலர் வேலைக்காரர்களாகவும், சிலர் துக்கிகளாகவும், சிலர் சுகிகளாகவும் காணப்படுகிறார்கள். அவ்வாறு நான்கு புருஷார்த்தங்களுள்ளும் (தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம்) வேறுபாடு காணப்படுகிறது. இவைகளுள் எது சிறந்தது என்பதை ஆராய வேண்டும். அவைகளில் அர்த்தத்தையும், காமத்தையும் சிறந்ததாகக் கூறமுடியாது. "அவ்விரண்டும் தர்மத்திற்கு காரணமானதால் தர்மத்தை உண்டு பண்ணுவதிலேயே நாசமடைவதால் அவைகள் நேரடியாக புருஷார்த்தமாகாது".

அதனாலேயே ஸ்வர்க்கத்திற்கு ஸாதனமான தர்மமும், பிரதானமாக இல்லாததால் சிறந்த புருஷார்த்தம் அல்ல. அப்படியே ஸ்ருதியும் "ஸ்வர்க்கத்தில் ஆசை உள்ளவன் ஜ்யோதிஷ்டோம யாகத்தைச் செய்ய வேண்டும்". என்று தர்மத்திற்கு ஸ்வர்க்காதிகளின் ஸாதனத்தன்மையைக் கூறுகிறது. இந்த சுருதி, தர்மத்தை (அபூர்வத்தை) ஸ்வர்க்கத்திற்குக் காரணமாக சொல்லவில்லை. ஜ்யோதிஷ்டோமம் முதலான யாகத்தைத் தான் சொர்க்கத்திற்குச் சாதனமாக சொல்கிறது என்று

சொல்லக்கூடாது. யாகக்ரியை உடனடியாக அழிவதால் தர்மத்தின் மூலமாக ஸ்வர்க்க ஸாதனமாவதால், தர்மம் தான் ஸ்வர்க்கத்திற்குக் காரணம். தர்மம் இருந்தால் தான் ஸ்வர்க்கம் முதலிய பலன்கள் ஏற்படும். எனவே தர்மத்தைச் (புண்ணியத்தை) ஸாதனமாக ஒப்புக்கொள்ள வேண்டும். இந்த தர்மம், அர்த்தம், காமம் மூன்றும் உண்மையில் புருஷார்த்தங்கள் அல்ல. புருஷார்த்தம் என்றால் வாஸ்தவத்தில் நித்ய ஸுகமாயும், துக்க மற்றதாயும் இருப்பது. அப்படியே உலக அனுபவமானது "எனக்கு இஷ்டமான ஸுகம் தான் வேண்டும். அநிஷ்டமான துக்கம் வேண்டாம்" என்று உள்ளது. அப்படியே தர்ம, அர்த்த, காமம் இந்த மூன்றிலும் ஸுகமோ, துக்க அபாவமோ கிடையாது. அப்படியானால் இவைகளையும் புருஷார்த்த வகைகளிலே சேர்த்திருப்பது எப்படி எனில், புருஷார்த்தங்களான ஸுகம்,துக்க மின்மை இவைகளுக்கு ஸாதனமாக இருப்பதால் இவைகளையும் புருஷார்த்தம் என்று சொல்கிறார்கள்.

எவ்வாறெனில் கலப்பை வாழ்க்கையாக இல்லா விட்டாலும், வாழ்க்கைக்கு சாதனமாக இருப்பதால் "கலப்பை ஜீவனம்" (லாங்கலம் ஜீவனம்) என்று சொல்வது போல, இவைகள் மூன்றும் புருஷார்த்தத்திற்கு ஸாதனமாக இருப்ப தினாலே இவைகளில் புருஷார்த்த பதமானது உபயோகிக்கப் படுகிறது. மேலும் இவைகள் அநித்யமாக இருப்பதால் பரம புருஷார்த்தன்மை கிடையது. அப்படியே அர்த்தமும், காமமும் அநித்யம் என்பது நமக்கு பிரத்யக்ஷமாகவே தெரிகிறது.

தர்மமானது நம் இந்திரியங்களுக்குப் புலப்படாத படியால் ச்ருதியினாலும், ஸ்மிருதியாலும் அநித்யம் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அப்படியே ச்ருதியும் "எப்படி இங்கு கர்மத்தினால் அடையப்பட்ட போகமானது நாசமடைகிறதோ, அதே மாதிரி புண்ணியத்தால் அடையப்பட்ட பரலோகபோகமும் நஷ்டமா கிறது" என்றும், ஸ்மிருதியிலும் "புண்ணியம் அழிந்தவுடன் மனுஷ்ய லோகத்திற்கு வருகிறார்கள்" என்றும் உள்ளது. அப்படி யானால் எது பரம புருஷார்த்தம் என்றால், மோக்ஷம் தான் என்று அறிந்து கொள்ள வேண்டும். அபபடியே "பிரம்மத்தை அறிந்தவன் பரத்தை அடைகிறான்" முதலிய ச்ருதி வாக்யங் களால் ஸுகஸ்வரூபத்தையும், "ஆத்மாவை அறிந்தவன்

துக்கத்தைக் கடக்கிறான்" முதலிய ச்ருதி வாக்யங்களால் துக்க நிவிருத்தி ரூபத்தையும் தெரிவிப்பதினாலே மோக்ஷம் தானாகவே புருஷார்த்தமாகிறது. மேலும் "அவன் (மோக்ஷமடைந்தவன்) மறுபடியும் திரும்பி வருவதில்லை" "அவர்களுக்கு மறுபடியும் திரும்பி வருவது என்பது கிடையாது" "இந்த அர்ச்சிராதி வழியாகப் போய் சேருபவர்கள் இந்த மனுஷ்யலோகத்திற்கு திரும்பி வருவதில்லை" என்பது முதலான ச்ருதிகளால் மோக்ஷம் நித்யமென்று தெரிகிறது.

"ஹே அர்ஜுனா! பிரம்ம லோகம் வரை (எந்த லோகம் சென்றாலும்) ஜனங்கள் திரும்பி வருகிறார்கள். மேலான மோக்ஷஸித்தியை அடைந்தவர்கள் என்னை (பிரம்மத்தை) அடைந்து துக்கத்திற்கு இருப்பிடமாயும், அநித்யமாயும் உள்ள மறு பிறவியை அடைய மாட்டார்கள்.

"இந்த ஆத்மஞானத்தை அடைந்து என் ஸ்வரூபத்தை அடைந்தவர்கள் ஸ்ருஷ்டி காலத்தில் பிறப்பதில்லை. பிரளயகாலத்தில் துன்புறுவதில்லை" "எதை அடைந்து திரும்பி வருவதில்லையோ அது என்னுடைய மேலான (ஸ்வரூபம்) ஸ்தானம்" என்பது முதலான ஸ்மிருதிகளாலும் தெரிகிறது.

மேலும் அநித்யத்தைக் காட்டிலும் வேறுபட்ட தன்மை இருப்பதாலும் மோக்ஷம் நித்யம். உலகத்தில் உத்பாத்யம் (உண்டாக்கப்படும் பொருள்) ஆப்யம் (அடையப்படும் பொருள்) ஸம்ஸ்கார்யம் (சுத்தப்படும் பொருள்) விகார்யம் (மாறுபடுத்தப்படும் பொருள்) ஆகிய நான்கும் அநித்யமாக காணப்படுகின்றன.

இந்த மோக்ஷமோ உண்டாக்கத்தக்கதாக இல்லை. மோக்ஷமானது நித்யம் என்பது மோக்ஷவாதிகளால் நிச்சயம் செய்யப்பட்டது. ஆத்ம ஸ்வரூபமாக எப்பொழுதும் அடையப் பட்டிருப்பதால் புதிதாக அடையப்பட வேண்டியதில்லை. மோக்ஷமானது நித்யசுத்தமாயும், நிரதிசயமாயும் இருப்பதால் அதை சுத்தப்படுத்தத் தேவையில்லை. மோக்ஷமானது கூடஸ்த பிரம்மஸ்வரூபமாக இருப்பதால் அதற்கு மாறுபாடு ஏற்படாது. ஆதலால் நித்யமாக இருப்பதாலும், தானாகவே

(புருஷர்கள் விரும்பும்) புருஷார்த்தமாக இருப்பதாலும் மோக்ஷம் தான் மேலான சிறந்த புருஷார்த்தம்.

"சாதுர்மாஸ்ய யாகம் செய்தவனுடைய புண்ணியம் அழிவற்றது" "(ஸோமயாகம் செய்து) ஸோமரஸத்தை பானம் செய்தோம், மரணமற்றவர்களாக ஆகிவிட்டோம்" என்பது முதலான ச்ருதிகளால் கர்மாக்களின் பலனும் நித்யம் என்று கூறப்படுவதால் மோக்ஷம் ஒன்று தான் நித்யம் என்று எப்படிக் கூற முடியும் என்று சொல்லக்கூடாது.

"எது செய்யப்பட்டதோ அது அநித்யம்" என்ற யுக்தியுடன் சேர்ந்த, "எப்படி இவ்வுலகில் கர்மாவினால் செய்யப்பட்ட வஸ்து அழிந்து போகிறதோ'' என்ற சுருதியுடன் விரோதம் ஏற்படுவதால் இந்த சுருதியிலுள்ள அழிவற்றது, மரணமற்றது என்ற பதங்கள் எல்லா பிராணிகளும் அழிந்து போகக்கூடிய பிரளய காலம் வரை நிலையாக இருக்கக்கூடிய ஸ்தானத்தைக் குறிப்பதாகச் சொல்ல வேண்டும். அப்படியே ஸ்மிருதியிலும் "எல்லாப்பிராணிகளும் அழியக்கூடிய பிரளய காலம் வரை நிலையாக இருக்கக்கூடிய ஸ்தானம் அமிருதம் என்று சொல்லப்படுகிறது" ச்ருதிக்கும், ஸ்மிருதிக்கும் விரோதம் ஏற்படும் பொழுது ச்ருதி ஸம்மதமான ஸ்மிருதியை எடுத்துக்கொள்ள வேண்டும். ச்ருதிகளுக்குள் பரஸ்பரம் விரோதம் ஏற்பட்டால் யுக்திக்குப் பொருத்தமான ச்ருதியை அனுஸரித்து மற்ற ச்ருதியை அறிந்து கொள்ள வேண்டும். ஆகையினால் மோக்ஷம் தான் நித்யமானது என்று தீர்மானமாகிறது.

மோக்ஷம் என்றால் ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம், கைவல்யம் என்று ஐந்து விதமாக உள்ளது. அதில் அந்தந்த உபாஸிக்கப்படுகிற தேவதைகளின் வாஸஸ்தானமான லோகத்தை அடைவது ஸாலோக்யமாகும். உபாஸ்யமான தேவதையின் ஸமீபத்தில் இருப்பது ஸாமீப்ய முக்தியாகும். உபாஸ்யமான தேவதைக்கு ஸமானமான தேஹத்தை அடைதல் ஸாரூப்ய முக்தியாகும். ஸகுண தேவதாஸ்வரூபத்தை அபேதமாக உபாஸனை செய்தவர்கள், அந்த உபாஸனா தேவதையுடன் தாதாத்மிய பாவம் அடைவது (அந்த தேவதையாகவே ஆவது) ஸாயுஜ்ய முக்தியாகும்.

சச்சிதானந்த, நித்ய, சுத்த, புத்த, முக்த, ஸ்வபாவ, ப்ரத்ய கபின்ன, (தன்னைத்தவிர வேறாக இல்லாத) கூடஸ்தப்ரம்ம (மாறுதலற்ற), ஸ்வரூபமாகவே இருப்பது கைவல்ய முக்தியாகும். இதுதான் அவித்யா நிவிருத்தி பதத்தால் சொல்லப்படுகிறது. "அவித்யையின் நாசம் மோக்ஷம், அந்த அவித்யை பந்தம் என்று சொல்லப்பட்டிருக்கிறது" என்றும், "அறியப்பட்ட நிலையிலுள்ள ஆத்மா தான் அவித்யா நிவிருத்தி'' என்றும், மேலும் "ஆகையினால் அவித்யையின் நாசம் மீதமில்லாமல் துக்கம் விலகி அழிவற்ற ஆனந்தானுபவம் ஏற்படுவதாலும் வேற்றுமை இல்லாததாலும் உயர்ந்த புருஷார்த்தமாக எண்ணப் பட்டிருக்கிறது'' என்றும் சொல்லப்பட்டு இருக்கிறது. இந்த கைவல்ய ரூபமான முக்திதான் மிகச்சிறந்தது, முக்கியமானது. அப்படியே ஸூதஸம்ஹிதையில் ஸ்வஸ்வரூபமாக இருப்பது என்று முக்தியைச் சொல்ல ஆரம்பித்து "எல்லா பொருள்களுக்கு முள்ள ஆறு விதமான (பிறப்பு, இருப்பு, வளர்ச்சி, மாறுதல், குறைவு, அழிவு விகாரங்களற்றதும், நல்லது, கெட்டது இல்லாததும், எல்லா இரட்டைகளும் அற்றதும், (குளிர்ச்சி, சூடு, பகல், இரவு) உண்மையான அறிவுரூபமானதும், எப்பொழுதும் ஸுக ஸ்வரூபமானதுமான பிரம்மரூபமாக மட்டும் இருப்பது தான் முக்தி என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இதைத்தள்ளவும் முடியாது. எடுத்துக்கொள்ளவும் முடியாது. எல்லா ஸம்பந்தமும் (தொடர்பும்) அற்றது. இது பார்க்கப்பட்டது மல்ல, கேட்கப்பட்டதுமல்ல. ஹே விஷ்ணோ ரசிக்கத்தக்கதுமல்ல, ஊஹிக்கப்பட்டதுமல்ல, எல்லா மறைவுகளுமற்றது, அறியத்தக்கது மல்ல, ஆசிரயமற்றது, சொல்லப்படுகிறதுமல்ல, சொல்கிற சப்தமுமற்றது. குறிப்பிடுகிற லக்ஷணமுமில்லை, குறிப்பிடப் படுவதுமில்லை. எல்லாப் பிராணிகளுக்கும் நேரான ஆத்மஸ்வரூபமாயிருப்பது, தானாகவே ப்ரகாசமுள்ளது. வாஸ்தவத்தில் எப்பொழுதும் எவ்வித இடையூறுமற்றது. எப்பொழுதும் பரமார்த்த ஸ்வரூபமாக உள்ளது. விசாரிக்காத நிலையில் தன் மாயையால் மறைக்கப்பட்டிருப்பது. இது தான் மேலான முக்தி என்று வேதத்தின் கருத்தை அறிந்தவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. மற்ற எல்லாமுக்திகளும் தாழ்ந்தவை களாக சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படியானால் ஸாலோக்யம் முதலான மற்றவைகளை முக்தி என்ற சொல்லால் குறிப்பிடுவது எப்படி என்று

கேட்கக்கூடாது. அவற்றை அடைந்தவர்கள் (பிறவியெடுக்க) திரும்பி வராததாலும் க்ரமமாக பின்னால் முக்கியமான முக்தியை அடைவதாலும் அவைகளையும் லக்ஷணையால் முக்தி பதத்தால் சொல்கிறார்கள்.

“ப்ரதிஸஞ்சரமென்று கூறப்படும் மஹாபிரளயம் வந்ததும் அந்த மஹாத்மாக்கள் எல்லோரும் பிரம்மாவோடு கூட பரமபதமான பிரம்மஸ்வரூபத்தில் பிரவேசித்து ஒன்றாகி விடுகிறார்கள்” என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த கூடஸ்த பிரம்ம ஸ்வரூபமாகவே உள்ள முக்தி ஸ்வதஸ்ஸித்தமாக உள்ளதால் அதன் பொருட்டு முமுக்ஷுக் களுக்கு குருஸமீபத்தில் இருந்து விசாரம் பண்ணுவதில் பிரயோஜனம் இல்லை என்று சொல்லக் கூடாது.

ஏனெனில் அவர்களுக்கு ஸ்வதஸ்ஸித்தமாக இருந்தாலும் மறந்த கண்ட சாமீகர நியாயம் (கழுத்தில் உள்ள மாலையை மறந் திருந்து, உணர்வதினால் பெறுவது) போலே அதை (முக்தி) அடையும் பொருட்டு முமுக்ஷுகளுக்கு விசாரம் முதலியவைகளில் பிரவிருத்தியானது பொருந்தும். மறந்த கண்டசாமீகர நியாயம் விளக்கப்படுகிறது. ஒரு புருஷன் தன் கழுத்தில் உள்ள ஆபரணத் தை மறந்து “ஐயோ! என்னுடைய கழுத்தில் இருந்த ஆபரணத்தை எங்கு வைத்துவிட்டேன். யாரால் அபகரிக்கப் பட்டது” என்று இங்கும் அங்கும் சுற்றி எங்கும் அடையப்படாமல் மிகவும் வருந் தினான். அங்கு வேறொருவன் வந்து “உன்னுடைய கழுத்தில் தான் ஆபரணம் உள்ளது. எதனால் நீங்கள் மிகவும் சோகத்தை அடைந்தீர்” என்று சொன்னான். அவன் அந்த வாக்யத்தைக் கேட்டபின் தன் கழுத்தில் தான் ஆபரணம் உள்ளது என்று அறிந்து, அடையாததை அடைந்தது போல் ஸந்தோஷம் அடைந் தான். இந்த நியாயத்தினாலே ஸ்வதஸ்ஸித்தமாக இருந்தாலும் இந்த முக்கியமான முக்தி ஆத்மஸ்வரூபமாக அறியாமை யினாலே அடையாதது போல இருக்கும்பொழுது தன்னை அடைவதின் பொருட்டு காரணத்தை அபேக்ஷிக்கிறது (எதிர் பார்க்கிறது) என்று சொல்லப்பட்டது. அதற்காக முமுக்ஷுக் கள் (விசாரம் செய்வதில்) ஈடுபடுவது பொருத்தம் தான். ஞானம் ஒன்றே சாதனம்.

"மோக்ஷத்தை அடைவதற்கு ஞானத்தைத் தவிர வேறே மார்க்கமில்லை"

"ஆத்மாவை அறிந்தவன் துக்கத்தைத் தாண்டுகிறான்"

"செய்யப்படும் ஸாதனத்தால் செய்யப்படாத நித்யமான மோக்ஷம் கிடைக்காது"

"அதை அறிவதற்காக அவன் குருவைத் தான் தேடிச்செல்ல வேண்டும்"

"பிரம்மத்தை அறிந்தவன் மேலான முக்தியை அடைகிறான்"

"பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமாகவே ஆகிறான்"

"எவன் ஒருவன் அந்த மேலான பிரம்மத்தை அறிகிறானோ, அவன் பிரம்மமாகவே ஆகிறான்"

என்பது முதலான ச்ருதிகளாலும், "பலபல பிறவிகளுக்குப் பிறகு முடிவில் ஞானம் பெற்றவன் என்னை அடைகிறான்".

"பிறகு வாஸ்தவமான என் ஸ்வரூபத்தை அறிந்து, அதன் பிறகு அதில் நுழைகிறான்" (ஒன்றாக கலந்து விடுகிறான்) இது முதலான ஸ்மிருதிகளாலும். அந்த ஞானம் எத்தகையது என்று (அறிய) விரும்பினால் அபரோக்ஷானுபூதி என்ற நூலில் சங்கர பகவத்பாதர்களால் சொல்லப்பட்டிருக்கிறது.

"நான் ஸமமானதும் சாந்தமானதும் சச்சிதாநந்த ரூபமானதுமான பிரம்மம். வாஸ்தவமாக இல்லாததான தேஹம் நானல்ல என்றஅறிவு ஞானமென்று வித்வான்களால் சொல்லப்படுகிறது".

"மாறுதலற்றதும், வடிவமற்றதும், குற்றமற்றதும், குறைவற்றதுமான பிரம்மம் நான். வாஸ்தவமாக இல்லாததான தேஹம் நானல்ல என்ற அறிவு ஞானமென்று வித்வான்களால் சொல்லப்படுகிறது.

"தோஷமற்றதும், தோற்றமற்றதும், பலவிதமாக இல்லாததும் எங்கும் நிறைந்ததுமான பிரம்மம் நான்.

வாஸ்தவமாக இல்லாததான தேஹம் நானல்ல என்ற அறிவு ஞானமென்று வித்வான்களால் சொல்லப்படுகிறது. "குணங்களற்றதும், செய்கைகளற்றதும், நித்யமானதும், எப்பொழுதும் விடுபட்டதும், நழுவாததுமான பிரம்மம் நான் வாஸ்தவமாக இல்லாத தேஹம் நானல்ல என்ற அறிவு வித்வான்களால் ஞானமென்று சொல்லப்படுகிறது".

"அழுக்கற்றதும், சலிக்காததும், முடிவற்றதும், சுத்தமானதும், மூப்பற்றதும், மரணமற்றதுமான பிரம்மம் நான். வாஸ்தவமாக இல்லாத தேஹம். நானல்ல என்ற அறிவு வித்வான்களால் ஞானமென்று சொல்லப்படுகிறது".

"நீ அதுவாக இருக்கிறாய்", "நான் பிரம்மமாக இருக்கிறேன்", "இந்த ஆத்மா பிரம்மம்", "பிரக்ஞான ஸ்வரூபம் பிரம்மம்" என்ற மஹாவாக்யங்களால் உண்டாகிற அகண்டாகார விருத்தி என்று அந்த ஞானத்திற்கு மற்றொரு பெயர். அந்த ஞானத்தை அடைவதற்கு உபாயம் ச்ருதியில், "ஆத்மாவை நேரில் காணவேண்டும் (அதற்கு உபாயமாக) சிரவணம், மனனம், நிதித்யாஸனம் செய்ய வேண்டும்" என்று, "மனதை அடக்கி வெளிப்புலன்களை அடக்கி காரியம் செய்வதை ஒதுக்கி (அல்லது ஸந்யாஸம் மேற்கொண்டு) பொறுமையுள்ளவனாக மனதை நிலைநிறுத்தி, சிரத்தையைக் கைக்கொண்டு (சுத்தமான) மனதிலேயே ஆத்மாவைப் பார்க்க வேண்டும்" என்பது முதலான வாக்யங்களால் பறைசாற்றப்படுகிறது.

பத்ம புராணத்திலுள்ள சிவ கீதையிலும் "ஹே ஹரனே! பகவானைப் பற்றிய சுத்தமான ஞானம் மனிதனுக்கு எப்படி உண்டாகிறது? தங்களுக்கு என்னிடம் அனுக்ரஹம் இருக்குமேயானால் அந்த ஞானம் அடையும் விஷயத்தில் உபாயத்தை சொல்ல வேண்டும்" என்று ஸ்ரீராமனால் கேட்கப்பட்ட பக்வான் சொல்கிறார்:-

"பிரம்மாவின் ஸ்தானம் வரை எல்லா வஸ்துக்களிலும் ஆசையைத் துறந்து பிள்ளை, நண்பன் எல்லாவற்றிலும் பற்றற்ற நிலையை அடைந்து, மோக்ஷத்தை வர்ணிக்கும் சாஸ்திரங்களில் மிகுந்த சிரத்தை (நம்பிக்கை) உடையவனாய் உபநிஷத்துக்களின் தாத்பர்யத்தை அறிந்து கொள்வதில்

விருப்பத்துடன் கையில் காணிக்கைகளை எடுத்துக்கொண்டு பிரம்மவித்தான குருவிடம் செல்ல வேண்டும்".

"வெகுகாலம் பணிவிடைகள் செய்வதன் மூலம் இந்த குருவை ஸந்தோஷப்படுத்தி, வேறொன்றிலும் மனதைச் செலுத்தாமல் எல்லா உபநிஷத் வாக்யங்களின் பொருளை சிரவணம் செய்ய வேண்டும்".

எல்லா உபநிஷத் வாக்யங்களுக்கும் பிரம்ம ஸ்வரூபத்தில் தாத்பர்யம் என்று தீர்மானமாக தெரிந்து கொள்வது தான் சிரவணமென்று பிரம்மத்தைப் பற்றிப்பேசுகிறவர்கள் எல்லோரும் சொல்கிறார்கள் "உலோகம், மணி முதலான திருஷ்டாந்தங்களாலும், யுக்திகளாலும் ஆலோசிப்பது என்பது தான் வாக்யார்த்தத்தை உணர்ந்து கொள்வதற்கு ஸாதனமான மனனம் என்று சொல்கிறார்கள்'' "மோகமற்றவனாய், சரீராதிகளில் நான் என்ற எண்ணமற்றவனாய், எங்கும் ஸம புத்தியுடன் பற்றற்றவனாய், எப்பொழுதும் புலனடக்கம் முதலியவற்றுடன் கூடியவனாய் த்யான யோகத்தால் எப்பொழுதும் மனதில் ஆத்மாவைக் காண்பது நிதித்யாஸனம் ஆகும். இதன் பிறகு எல்லாகர்மாக்களும் அழிந்து போவதன் மூலம் ஒருவனுக்கு விரைவில் ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது. வேறு ஒருவனுக்கு வெகுகாலத்திற்குப் பிறகு ஏற்படுகிறது". ஆகையால் பிரம்ம ஞானம் ஒன்றினாலேயே ஏற்படக்கூடிய ஸ்வஸ்வரூபத்திலேயே நிலைத்து நிற்பது என்ற மோக்ஷம் தான் சிறந்த புருஷார்த்தம் என்று எல்லாவிதத்திலும் பொருத்தமானது.

"புருஷார்த்த நிர்ணயம் என்ற இந்த கிரந்தம் சிறந்த குருவின் கிருபையால் என்னால் செய்யப்பட்டது. வித்வான்கள் பொறாமையற்றவர்களாய் இந்தக் கிரந்தத்தைப் பார்த்து ஸந்தோஷம் மடைந்து இதைத் தெரிந்து கொள்ள வேண்டும்"



# पञ्चकोशविवेकः ।।

## பஞ்சகோச விவேக பிரகரணம்

### ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகள்

பிரஹ்மத்திற்கு லக்ஷணம் ஸத் என்றும் இரண்டற்றது என்றும் சொல்லப்பட்டது. ஸத் என்று.வேறு எதுவும் கிடையாது என்று சொல்லும் போது ஜகத்தும் ஜீவனும் இருக்கிறதே யென்றால், அந்த ஜகத்திற்கு பிரஹ்மத்தை விட்டு தனியாக ஸத்தை கிடையாதென்பதை முன் அத்யாயத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துக் காட்டினார். இந்த அத்யாயத்தில் ஜீவனும் பிரஹ்மத்தைத்தவிர வேறு இல்லையென்று காட்டுவதற்காக பிரஹ்மத்தை ஜீவனாகத் தோற்றுவிக்கும் ஐந்து கோசங்களின் தன்மையைத் தெரிந்து அவைகளிலிருந்து ஆத்மாவைப் பிரித்து அறிய வேண்டுமென்பதைச் சொல்கிறார். இவ்வத்யாய விஷயத்திற்கு முக்கிய பிரமாண வாக்கியமாக தைத்திரீய உபநிஷத்திலுள்ள यो वेद निहितं गुहायां परमे व्योमन् (புத்தி குஹைக்குள் உள்ள உத்தமமான ஆகாசத்தில வைக்கப் பட்டிருப்பதை எவன் அறிகிறானோ) என்ற வாக்கியத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்:-

**गुहाहितं ब्रह्म यत् तत् पञ्चकोशविवेकत : ।**
**बोद्धुं शक्यं तत : कोशपञ्चकं प्रविविच्यते ।। १ ।।**

எந்த பிரஹ்மம் குஹைக்குள் இருக்கிறதோ, அது ஐந்து கோசங்களை பிரித்தறிவதனால் அறிவதற்கு ஸாத்யமா யிருக்கிறது. ஆகையால் கோசங்கள் ஐந்தும் விவேசனம் செய்யப்படுகிறது. (பிரித்துக்காட்டப்படுகிறது)

ஒரு குஹைக்குள் அடியில் பதிந்து கிடக்கும் நிதியை எடுக்க வேண்டுமானால், அதை மறைத்துக்கொண்டிருக்கும் புதர்கள், மண், கல் முதலியவைகளை எப்படி அப்புறப்படுத்தியாக வேண்டியிருக்கிறதோ, அதேபோல் நம்முடைய புத்தியாகிற குஹையில் வெகு ஆழத்தில் ஆத்ம தத்வம் புதைந்து கிடக்கிறது. அதை மறைத்துக் கொண்டிருக்கும் பதார்த்தங்களை விலக்கிப் பார்க்க வேண்டும். அப்பதார்த்தங்கள் எவை என்பதை விளக்குகிறார்: (1)

देहादभ्यन्तरः प्राणः, प्राणादभ्यन्तरं मनः

ततः कर्ता, ततो भोक्ता, गुहा सेयं परंपरा ।। २ ।।

*தேஹத்திற்கு உள்ளே பிராணன், பிராணனைவிட உள்ளே மனஸ், அதைவிட (மனஸைவிட உள்ளே) கர்த்தா, அதைவிட (கர்த்தாவைவிட உள்ளே) போக்தா இந்த வரிசை தான் அந்த (உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கும்) குஹை.*

*இங்கே பிராணன் என்பது பிராணமய கோசத்தையும், மனஸ் என்பது மனோமய கோசத்தையும், கர்த்தா என்பது விக்ஞானமய கோசத்தையும், போக்தா என்பது ஆனந்தமய கோசத்தையும் குறிக்கின்றது. தேஹம் அன்னமய கோசம். இவைகளெல்லாம் ஸ்ருஷ்டிக்ரமத்தில் பஞ்சபூதங்களிலிருந்து எப்படி ஏற்படுகின்றனவென்பதும் அவைகளுடைய செயல்கள் எவையென்பதும் முதல் அத்யாயத்திலேயே சொல்லியிருக்கிற படியால் இங்கே சொல்லவில்லை. (2)*

*இக்கோசங்கள் ஏன் ஆத்மா வல்லவென்று மாத்திரம் இங்கே காட்டுகிறார்:*

पितृभुक्तान्नजादीर्याज्जातोन्नेनैव वर्धते ।

देहः, सोऽन्नमयो नात्मा प्राक् चोर्ध्वं तदभावतः ।। ३ ।।

*பெற்றோர் புஜித்த அன்னத்தினால் ஏற்பட்ட வீர்யத்தி லிருந்து பிறந்து, அன்னத்தினாலேயே தேஹம் வளர்கிறது. அன்னமயமாகியஅது (பிறப்புக்கு) முன்னாலும் (இறப்புக்கு) பின்னாலும் இல்லாததினால் ஆத்மாவல்ல. (3)*

*ஆத்மா மாத்திரம் முன்னாலும் பின்னாலுமிருக்கிறதென்று எப்படி அறிகிறது என்றால்:*

पूर्वजन्मन्यसन् एतज्जन्म संपादयेत् कथम् ।

भाविजन्मन्यसन् कर्म भुञ्जीतेह संचितम् ।। ४ ।।

*முன் ஜன்மத்தில் இல்லாதவன் இந்த ஜன்மாவை எப்படி அடைய முடியும்? பின் ஜன்மத்தில் இல்லாதவன் இப்பொழுது சேர்த்து வைக்கும் கர்மாவை அனுபவிக்கவும் முடியாது.*

இப்பொழுது அனுபவிக்கும் ஸுகதுக்கங்களுக்கு நியாயம் சொல்வதற்கேயில்லாமல் போய்விடும். அப்படியே இப்பொழுது செய்யும் பாப புண்யங்களுக்கு பலனேயில்லாமலும் போய் விடும். உலகத்தில் எவ்வித வியவஸ்தையுமில்லையென்று ஏற்பட்டுவிடும். ஜகத்தை நிர்வஹிக்கும் பகவானிடம் பலவித தோஷங்களை ஏற்படுத்துவதாகவுமாகும். ஆகையால் முன்பின் ஜன்மாக்களை ஒப்புக்கொண்டே தீர வேண்டும். ஆத்மா அந்த முன்பின் ஜன்மாக்களில் இருப்பதாலும், இந்த சரீரம் முன்பின் ஜன்மாக்களில் இருப்பதில்லையானதினாலும் இந்த சரீரத்தை ஆத்மாவென்று எண்ண முடியாது. (4)

**पूर्णो देहे बलं यच्छन् अक्षाणां यः प्रवर्तकः ।**
**वायुः प्राणमयो नासावात्मा चैतन्यवर्जनात् ।। ५ ।।**

சரீரத்தில் பூராவும் வியாபித்துக்கொண்டு, பலம் கொடுத்துக் கொண்டு, இந்திரியங்களை பிரவிருத்திக்கும்படி செய்து கொண்டு, வாயு இருக்கிறதே அது பிராணமயன். சைதன்யமில்லாததினால்அதுவும் ஆத்மா வல்ல.

ஆத்மா ஸுகதுக்கங்களை உணர்கிறது. அவ்வித உணர்ச்சி பிராணனுக்கு இல்லாததினால் அது ஆத்மாவாகாது. (5)

**अहंतां ममतां देहे गेहादौ च करोति यः ।**
**कामाद्यवस्थया भ्रान्तो नासावात्मा मनोमयः ।। ६ ।।**

நான் என்றும் என்னுடையது என்றும் தேஹத்திலும் வீடு முதலியதிலும் எண்ணுகிறது எதுவோ, ஆசை முதலான நிலைகளால் மயக்கம் அடைகிறது (அலைவது) எதுவோ அந்த மனோமய கோசமும் ஆத்மா வல்ல.

நான் என்னுடையது என்ற எண்ணமேயில்லாத நல்ல தூக்கத்தில் ஆத்மா இருக்கிறது, மனோமயம் லயித்து விடுகிறது. மேலும் காமம் க்ரோதம் முதலியவைகளால் மாறுபட்ட பல நிலைகளையடைகிறான் மனோமயன். ஆத்மா ஒரே நிலையில் இருப்பவன். ஆகையால் மநோமயனும் ஆத்மாவல்ல. (6)

लीना सुप्तौ वपुर्बोधे व्याप्नुयादानखाग्रगा ।
चिच्छायोपेतधीर्नात्मा विज्ञानमयशब्दभाक् ।। ७।।

தூக்கத்தில் லயமாகி விழிப்பில் நக நுனிவரையில் இருந்து கொண்டு சரீரத்தை வியாபித்துள்ள, சைதன்யத்தின் பிரதி பிம்பத்தோடு கூடிய, விக்ஞானமயம் என்ற வார்த்தையால் சொல்லப்படும் புத்தி ஆத்மாவல்ல.

சைதன்ய வியாப்தியில்லையானால் அறியும் சக்தி கிடையாது. அறிவு, தூங்கும் போது லயம் என்கிற இரண்டு அம்சமும் மனோமயத்திற்கும் விக்ஞானமயத்திற்கும் பொது. அவ்விரண்டையும் ஒன்றாகவே சேர்த்து அந்தக்கரணம் (உள்கருவி) என்றும் சொல்வதுண்டு. (7)

ஆனாலும் அவைகளுக்குள் விக்ஞானமயத்தை ஏவுவதாகவும், மனோமயத்தை ஏவப்படுவதாகவும், பாவிக்கப் படுவதால் வேறுபடுகின்றன. தவிரவும் மனோமயம் தோன்றின படியெல்லாம் வேலை செய்வதைத் தடுத்து ஆளுவது விக்ஞான மயமாயிருப்பதாலும் வித்யாஸமுண்டு. இந்தக் காரணத்தினால் மனோமயத்தைவிட விக்ஞானமயம் உள்ளேயிருப்பதாகச் சொல்லப்படுகிறது:

कर्तृत्वकरणत्वाभ्यां विक्रियेतान्तरिन्द्रियम् ।
विज्ञानमनसी अन्तर्बहिश्चैते परस्परम् ।। ८ ।।

உள் இந்திரியமானது கர்த்தா (செய்வது) என்றும், கரணம் (கருவி) என்றும் மாறுபடுகிறது. (அவ்விதம் மாறுபட்டுள்ள) இந்த விக்ஞானமய கோசமும் மனோமய கோசமும் அவைகளுக்குள் உள், வெளி என்று ஆகின்றன. (8)

काचिदन्तर्मुखा वृत्तिरानन्दप्रतिबिम्बभाक् ।
पुण्यभोगे, भोगशान्तौ निद्रारूपेण लीयते ।। ९ ।।

புண்ணியத்தை (புண்ணியத்தின் பலனாகிய ஸுகத்தை) அனுபவிக்கும் ஸமயம் ஆனந்தத்தின் பிரதிபிம்பத்தின் ஸம்பந்தத்

*தையடைந்து உள்நோக்கி ஏற்படும் விருத்தி, அவ்வனுபவம் அடங்கின போது தூக்கமாக லயத்தையடைந்துவிடுகிறது.* **(9)**

कादाचित्कत्वतोऽनात्मा स्यादानन्दमयोऽप्ययम् ।

बिम्बभूतो य आनन्दः आत्माऽसौ सर्वदा स्थितेः ।। १० ।।

*சில ஸமயங்களில் மாத்திரமிருக்கும் காரணத்தினால் இந்த ஆனந்தமயமும் கூட ஆத்மாவல்லாதது தான். பிம்பமாயிருக்கும் எந்த ஆனந்த முண்டோ அது எப்பொழுது மிருப்பதால் அதுதான் ஆத்மாவாகும்.* *(10)*

*இந்த விதமாய் ஐந்து கோசங்களையும் ஆத்மாவல்ல வென்று காட்டிவிட்டால்:*

ननु देहमुपक्रम्य निद्रानन्दान्तवस्तुषु ।

माभूदात्मत्वं, अन्यस्तु न कश्चिदनुभूयते ।। ११ ।।

*தேஹத்தில் ஆரம்பித்து நித்திரையிலுள்ள ஆனந்தம் வரையிலுள்ள பதார்த்தங்களில் ஆத்மாவாயிருக்கும் தன்மை இருக்க வேண்டாம். ஆனால் (இவைகளைத்தவிர) வேறு எவ்வித பதார்த்தமும் அனுபவிக்கப்படவில்லையே (இருப்பதாகத் தெரியவில்லையே)* *(11)*

बाढं निद्रादयः सर्वेऽनुभूयन्ते न चेतरः ।

तथऽप्येतेऽनुभूयन्ते येन तं को निवारयेत् ।। १२ ।।

*வாஸ்தவம் நித்திரை முதலானதெல்லாம் அனுபவிக்கப் படுகிறது மற்றொன்று அனுபவிக்கப்படவில்லை தான். அப்படியானாலும், எவரால் இவை அனுபவிக்கப்படுகிறதோ அவரை (அனுபவிக்கிறவரை) யார் தடுக்க முடியும் (இல்லையென்று சொல்லமுடியும்?)* *(12)*

स्वयमेवानुभूतित्वाद् विद्यते नानुभाव्यता ।

ज्ञातृज्ञानान्तराभावाद् अज्ञेयो, न त्वसत्तया ।। १३ ।।

தானே அனுபவ ஸ்வரூபமாயிருப்பதால் அனுபவிக்கப் படும் தன்மை அதற்குக்கிடையாது. அதை அறிவதற்கு அறிபவன் என்றும் அறிவு என்றும் வேறு கிடையாததினால் அறியப்பட வில்லையே தவிர, இல்லாததினால் அறியப்படவில்லை யென்பதல்ல.

உப்பு சேர்ந்தால் மற்ற பதார்த்தங்கள் உப்புக்கரிக்கும். உப்பே உப்புக்கரிப்பதற்கு வேறு உப்பு சேர்க்க அவசியமில்லை. அதற்கு ஸ்வபாவமே உப்புக்கரிப்பது. அவ்விதமே ஆத்மா அறிவு ஸ்வபாவமாகவேயிருப்பதால் அதை அறியவோ அறியப் படுத்தவோ வேறு எதுவும் கிடையாது. ஆகையால் அது அறியப்படும் வஸ்துவாகாது. (13)

माधुर्यादिस्वभावानां अन्यत्र स्वगुणार्पिणाम् ।
स्वस्मिंस्तदर्पणापेक्षा नो, न चास्त्यन्यदर्पकम् ।। १४ ।।

தித்திப்பு முதலிய ஸ்வபாவங்களுடையதாய், வேறு பதார்த் தங்களில் தன் குணத்தைக் கொடுக்க கூடியதாயுள்ள பதார்த்தங்களுக்கு தன்னிடத்திலேயே அக்குணத்தைக் கொடுக்க வேண்டிய தேவை கிடையாது அவ்விதம் கொடுக்கக்கூடிய வேறு பதார்த்தமும் கிடையாது. (14)

अर्पकान्तरराहित्येऽप्यस्त्येषां तत्स्वभावता ।
माभूत् तथाऽनुभाव्यत्वं बोधात्मा तु न हीयते ।। १५ ।।

கொடுப்பதற்கு வேறு இல்லாமல் போனாலும் இவை களிடத்தில் அந்த ஸ்வபாவத்துடனிருக்கும் தன்மை இருக்கவே யிருக்கிறது. அவ்விதமே (ஆத்மாவிற்கு) அனுபவிக்கப்படும் தன்மையிருக்க வேண்டாம். அறிவாயிருக்கும் தன்மை குறைவு படாது. (15)

स्वयंज्योतिर्भवत्येष पुरोऽस्माद्भासतेऽखिलात् ।
तमेव भान्तमन्वेति तद्भासा भास्यते जगत् ।। १६ ।।

இந்த ஆத்மா ஸ்வயம் பிரகாசமாயிருக்கிறது. இந்த எல்லா பதார்த்தங்களுக்கும் முன்னமேயே பிரகாசிக்கிறது.

பிரகாசிக்கின்ற அதை யனுஸரித்துத்தான் ஜகத்பிரகாசிக்கிறது. அதனுடைய பிரகாசத்தினால் தான் ஜகத் பிரகாசப்படுத்தப் படுகிறது. *(16)*

येनेदं जानते सर्वं तत् केनान्येन जानताम् ।
विज्ञातारं केन विद्यात् शक्तं वेद्ये तु साधनम् ।। १७ ।।

எதனால் இது எல்லாவற்றையும் (ஜனங்கள்) அறிகிறார்களோ, அதை வேறு எதைக்கொண்டு அறிவார்கள்? அறிகிறவனை எதனால் அறியமுடியும்? அறியத்தகுந்த விஷயத்தில் தானே கருவிக்கு (அறியப்படுத்த) சக்தியிருக்கும்?

எவ்வளவு கூர்மையான கத்தியாயிருந்தாலும் அதற்கு அகப்படக்கூடிய வெல்லக்கட்டியை இரண்டு துண்டாக ஆக்க முடியுமே தவிர, அதிலுள்ள தித்திப்பை பாதி தித்திப்பாகச் செய்து கொடுக்க முடியாது. நல்ல கருங்கல்லை வெட்டப் பார்த்தால் கத்தி மழுங்குமே தவிர கல் வெட்டப்படமாட்டாது. ஆத்மா அறிவே, அறிவிற்கு விஷயமில்லை யென்றிருக்கும் போது, அதை அறிவிக்க எதனாலேயும் முடியாது. அது, தானே ஸ்வயம் பிரகாசமாயிருப்பதால், வேறு அறிவின் அபேக்ஷையும் கிடையாது. அதை அறிவிப்பதற்காக வேறு ஏதேனும் பிரமாணங்கள் பிரவிருத்தித்தால், அப்பிரமாணங்கள் சக்தியற்று மழுங்கிப்போகுமே தவிர, ஆத்மாவை அறிவிக்க முடியாது.

स वेत्ति वेद्यं तत्सर्वं नान्यस्तस्यास्ति वेदिता ।
विदिताविदिताभ्यां तत् पृथक् बोधस्वरूपकम् ।। १८ ।।

அது அறியக்கூடிய எல்லாவற்றையும் அறிகிறது. அதை அறிவது வேறுஎதுவும் கிடையாது அறிவு ஸ்வரூபமாயிருக்கிற அது அறியப்பட்டதிலிருந்தும் அறியப்படாததிலிருந்தும் வேறுபட்டது.

வேறு எதனாலேயும் அறியக்கூடிய தில்லையானதனால், அது 'அறியப்பட்டது' இல்லை. ஸ்வயம் பிரகாசமாகவேயிருந்து வருவதால் 'அறியப்படாததும்' இல்லை. தவிரவும், அறியப்பட்டது, அறியப்படாதது என்ற இரண்டு வியவஹாரங்களும் அறியக்

கூடிய பதார்த்தங்களுக்குத்தான் பொருந்தும் அறிவாகவே யிருக்கிற பதார்த்தத்தில் இவ்விரு வியவஹாரங்களுக்கும் இடமேயில்லை. (18)

இந்தவிதமாக பல உபநிஷத்துக்களிலுள்ள வாக்கியங் களையே சுலோக ரூபமாக அமைத்து ஸ்ரீமத் ஆசார்யார் ஆத்ம தத்வத்தை விளக்கிக்காட்டியிருக்கிறார். அப்படியும் 'ஆத்மா ஸ்வயம்பிரகாசமா? எனக்குத் தெரியவில்லையே?' என்று சொல்கிறவர்களும் உலகத்தில் இருப்பதால் அவர்களிடம் அனுதாபப்படுகிறார்:

बोधेऽप्यनुभवो यस्य न कथञ्चन जायते ।
तं कथं बोधयेत् शास्त्रं लोष्टं नरसमाकृतिम् ।। १९ ।।

(தன்) அறிவிலேயே எவனுக்கு கொஞ்சமேனும் அனுபவமேற்படவில்லையோ, அந்த, மனிதன் மாதிரி ரூபம் தரித்திருக்கும் மண்கட்டியை சாஸ்திரம் தான் எப்படி அறியும்படி செய்ய முடியும்? (19)

जिह्वा मेऽस्ति न वेत्युक्तिः लज्जायै केवलं यथा ।
न बुध्यते मया बोधो बोद्धव्य इति तादृशी ।। २० ।।

'எனக்கு நாக்கு இருக்கிறதா? இல்லையா?' என்று (நாக்கினாலேயே) சொல்வது எப்படி லஜ்ஜையின் பொருட்டேயாகுமோ, அவ்விதமேதான் 'அறிவு என்னால் அறியப்படவில்லை. (இனி) அறியப்பட வேண்டியது' என்ற வார்த்தையும். (20)

இவ்வளவு ஸுலபமாக ஆத்ம தத்வமிருக்குமேயானால் உலகத்தில் எல்லாருக்கும் ஏன் ஆத்ம ஸாக்ஷாத்கார மேற்படவில்லை என்று கேட்டால் - அறியப்படும் வெளி பதார்த்தங்களிலேயே அறிவைச்செலுத்திச் செலுத்தி வந்திருப்பதால், உள்ளேயுள்ள அறிவை மறந்துவிடுகிறார்கள். வெளி பதார்த்தங்களில் செல்லாமல் செய்து விட்டால், தானாகவே சுத்தமான அறிவு துலங்கும். அதுவே பிரஹ்மம் எனப்படுகிறது.

यस्मिन् यस्मिन् अस्ति लोके बोधः, तत्तदुपेक्षणे ।
यद्बोधमात्रं तद्ब्रह्मेत्येवं धीर्ब्रह्मनिश्चयः ।। २१ ।।

உலகத்தில் எது எதில் (எதுஎது விஷயமாக) அறிவு ஏற்படு கிறதோ, அது அதை (அந்தந்த விஷயங்களை) கவனிக்காமல் எது அறிவாகமாத்திரம் இருக்கிறதோ, அதுவே பிரஹ்மம் என்று இவ்வாறு ஏற்படும் புத்தி பிரஹ்மத்தை தீர்மானமாக அறிவதாகும்.

பல பதார்த்தங்களை கண்ணால் பார்த்துக் கொண்டிருக் கையில்அவைகள் தெளிவாய்த் தெரிந்ததேயானால் அவைகளை மறந்து நம் கண் தெளிவாயிருக்கிறதென்று தீர்மானிக்க முடியும். பல கிரந்தங்களைப் பார்த்து அவைகளின் தாத்பர்யம் நன்கு அறியப்பட்டதேயானால், நம் புத்தி தெளிவாயிருக்கிறதென்று அறிந்து கொள்ள முடியும். இவ்வித இரண்டாவது அறிவு ஏற்படும் போது பார்த்தது, அறிந்தது மாத்திரம் ஞாபகத்தில் வருமேயொழிய பார்க்கப்பட்ட பதார்த்தங்கள், அறியப்பட்ட கிரந்தங்கள் முன் நிற்காது. அப்படி உலகத்தில் எந்த பதார்த்தத்தை அனுபவித்தாலும் அப்பதார்த்தத்தை மறந்து அனுபவத்தை மாத்திரம் தீர்மானித்துக் கொண்டோமேயானால் அதுவே ஆத்மதத்வம், அதுவே பிரஹ்மம் என்கிறார். அப்படியானால் பிரஹ்ம ஸாக்ஷாத்காரம் வெகு ஸுலபமாகத் தோன்றுகிறதே? வெளிப்பதார்த்தங்களை விலக்கிப்பார்த்தால் பிரஹ்மம் பிரகாசிக்குமே? என்றால் வாஸ்தவம். நம் முன்னால் ஒரு தச்சன் ஏதோ மரத்தை இழைத்துக் கொண்டிருக்கிறானென்று வைத்துக் கொள்வோம். தச்சனுடைய ஸ்வரூபம் தெரியவேண்டுமானால் அவனால் இழைக்கப்படும் மரத்தை மாத்திரம் விட்டுப்பார்த்தால் போதாது. அதை மாத்திரம் விட்டுப்பார்த்தால் இழைப்புளியுடன் இருக்கும் தன்மை, அதைக்கொண்டு இழைக்கும் தன்மை, இவை எல்லாம் சேர்ந்ததே அவன் ஸ்வரூபம் என்று தான் தெரியவரும். அதனரல் அவன் உபயோகிக்கும் இழைப்புளியையும், அவன் அதைக்கொண்டு செய்யும் இழைப்பையும் மறந்தால்தான், அவனுடைய ஸ்வரூபம் நமக்குத் தெரிந்ததாக ஆகும். அவ்விதமே ஆத்மா உலக மத்தியிலிருந்து கொண்டு வெளியுலகத்தில் வியவஹாரம் செய்யும்போது கருவி போலிருக்கிற ஐந்து

கோசங்கள் மூலமாக பல்வித கார்யங்கள் செய்து வருகிறபடியால், அவ்வாத்மாவின் ஸ்வரூபம் நன்கு தெரியவேண்டுமானால் அந்த கோசங்களோ அவைகளைக் கொண்டு செய்யப்படும் காரியங்களோ ஆத்மாவின் ஸ்வரூபத்தில் சேர்ந்தவையல்ல என்ற அறிவு ஏற்பட வேண்டும். இதற்காகவே ஐந்து கோசங்களையும் விசாரித்து அவை ஆத்மாவல்ல வென்று தெரிந்து விலக்க வேண்டியிருக்கிறது. (21)

पञ्चकोशपरित्यागे साक्षिबोधावशेषतः ।
स्वस्वरूपं स एव स्यात्, शून्यत्वं तस्य दुर्घटम् ।। २२ ।।

ஐந்து கோசங்களையும் விலக்கும்போது ஸாக்ஷியா யிருக்கும் அறிவு மிஞ்சுவதால், அதுவே தன் ஸ்வரூபம். அதற்கு சூன்யத்தன்மை சொல்வது ஸாத்தியமில்லை.

अस्ति तावत् स्वयं नाम विवादाविषयत्वतः ।
स्वस्मिन्नपि विवादश्चेत् प्रतिवाद्यत्र को भवेत् ।। २३ ।।

'தான்' என்பது விவாதத்திற்கு விஷயமேயில்லாததினால், அது இருக்கவேயிருக்கிறது என்பது ப்ரஸித்தம். தன் விஷயத்திலேயே (நான் இருக்கிறேனா இல்லையா என்று) விவாதமிருக்குமானால், இங்கே பிரதிவாதி யார்?

பிரதிவாதி 'நான்' என்று சொன்னால், 'நீதான் இருக்கிறாயா, இல்லையாயென்று உனக்கு தீர்மானமில்லையே, எப்படி பிரதிவாதியாக இருப்பாய்?' - என்று தாத்பர்யம். (23)

स्वासत्वं तु न कस्मैचिद् रोचते विभ्रमं विना ।
अत एव श्रुतिर्बाधं ब्रूते चासत्ववादिनः ।। २४ ।।

தன்னுடைய இல்லாமையோ யாருக்கும் ருசிக்கிறதில்லை, பிராந்தியில்லாமல் போனால். அதினால் தான் வேதம் (தைத்திரீய உபநிஷத்) இல்லாமையை சொல்லுபவனுக்கே இல்லாமையைச் சொல்கிறது. (24)

அவ்வுபநிஷத் வாக்கியத்தையே குறிப்பிடுகிறார்:

असद् ब्रह्मेति चेद्वेद स्वयमेव भवेदसत् ।

பிரஹ்மம் இல்லாதது என்று அறிவானேயானால், தானும் கூட இல்லாமலே ஆகிவிடுவான்.

'தான்' என்கிற ஆத்மவஸ்துவும் பிரஹ்மமும் ஒன்றாகவே யிருப்பதால், பிரஹ்மத்தை மறுப்பவன் தன்னையே மறுத்த வனாகிறான். அதனால் தன்னை மறுப்பது எப்படி ஸாத்திய மில்லையோ, அப்படியே தன் ஸ்வரூபமாயிருக்கும் பிரஹ்மத்தை மறுக்க முடியாது என்று தாத்பர்யம்.

अतोऽस्य मा भूद्वेद्यत्वं स्वसत्वं त्वभ्युपेयताम् ।। २५ ।।

ஆகையால் இதற்கு (ஆத்மாவிற்கு) அறியப்படும் தன்மை இருக்க வேண்டாம். தன்னுடைய இருக்கும் தன்மையையோ ஒப்புக்கொள்ள வேண்டும். (25)

இருக்கிறதென்று ஒப்புக்கொண்டாலும் அது எப்படி யிருக்கிறது என்று சொல்ல வேண்டாமா?

कीदृक् तर्हीति चेत् पृच्छेत् ईदृत्ता नास्ति तत्र हि ।
यदनीदृगतादृक् च तत्स्वरूपं विनिश्चिनु ।। २६ ।।

'அப்படியானால் அது எதைப்போல?' என்று கேட்டால், அவ்விஷயத்தில் 'இதைப்போல' என்றே கிடையாது. 'எது இதைப்போலவுமில்லை, அதைப்போலவுமில்லையோ அதுதான் அதன் ஸ்வரூபம்' என்று தீர்மானித்துக்கொள். (26)

अक्षाणां विषयस्त्वीदृक्, परोक्षस्तादृगुच्यते ।
विषयी नाक्षविषयः, स्वत्वान्नास्य परोक्षता ।। २७ ।।

இந்திரியங்களுக்கு விஷயமாயுள்ளது 'இது போல' இந்திரியங்களுக்கு அப்பால் இருப்பது 'அதுபோல' என்று சொல்லப்படுகிறது. விஷயத்தை அறியும் ஆத்மாவோ இந்திரியங்களுக்கு விஷயமாவதில்லை தானாகவேயிருப்பதால் அதற்கு அப்பாலிருக்கும் தன்மை (அறியப்படாமலிக்கும் தன்மை)யும் இல்லை. (27)

अवेद्योऽप्यपरोक्षोऽतः स्वप्रकाशो भवत्ययम् ।

அறியக்கூடியதாக இல்லையானாலும் (இது) அறியப் படாதது இல்லை. அதனால் இது ஸ்வயம் பிரகாசமாயிருக்கிறது.

வேறு கருவிகளைக்கொண்டு அறியக்கூடியதில்லை. அவ்விதம் அறிவதற்கு அவசியமேயில்லாமல், தானாகவே பிரகாசிக்கும் வஸ்து ஆத்மா. இவ்விதம் சொல்லிவிட்டு, அதே உபநிஷத்தில் பிரஹ்மத்திற்கு சொல்லியிருக்கும் லக்ஷணத்தைத் தெளிவுபடுத்துகிறார்:

सत्यं ज्ञानमनन्तं चेत्यस्तीह ब्रह्मलक्षणम् ।। २८ ।।

ஸத்யம், ஞானம், அனந்தம் என்று இங்கே (உபநிஷத வாக்கியத்தில்) பிரஹ்மத்தின் லக்ஷணம் காண்கிறது. (28)

'ஸத்யம்' என்ற பதத்தின் தாத்பர்யத்தை ஐந்து சுலோகங்களால் விளக்குகிறார்:

सत्यत्वं बाधराहित्यं, जगद्बाधैकसाक्षिणः ।
बाधः किंसाक्षिको ब्रूहि न त्वसाक्षिक इष्यते ।। २९ ।।

ஸத்யத்தன்மையென்பது, இல்லாமல் போகும் தன்மை யற்றது (என்று அர்த்தம்). ஜகத் இல்லாமல் போவதற்கு ஒரே ஸாக்ஷியாயிருப்பவருக்கு இல்லாமை யுண்டென்றால் அது (ஸாக்ஷியின் இல்லாமை) எதை ஸாக்ஷியாக வைத்துக்கொண்டு

ஏற்படும்? சொல்லு. ஸாக்ஷியில்லாமலே இல்லாமை ஒப்புக் கொள்ளத்தக்கதல்ல.

ஒரு அறையில் ஒரு பதார்த்தம் இருக்கிறது என்று சொல்வதற்கு அதைப்பார்த்தவன் எப்படி வேண்டுமோ, அதே மாதிரி அப்பதார்த்தம் இல்லையென்று சொல்லுவதற்கும், இல்லாமையைப் பார்த்தவன் ஒருவன் இருந்தேயாக வேண்டும். இரண்டாவது பதார்த்தமாகிய ஜகத் பூராவும் பிரளய காலத் திலோ, மோக்ஷ நிலையிலோ, லயமாகியோ, இல்லையென்றோ போகும் ஸமயத்தில், அதையும் ஸாக்ஷியாகப் பார்த்துக்கொண்டு தனித்து பிரஹ்மம் மாத்திரம் மிஞ்சி நிற்கிறது வேறு யாரும் கிடையாது. அந்த பிரஹ்மத்திற்கும் இல்லாமையுண்டென்றால் அதை அறிவதற்கு ஜகத்துமில்லை, வேறு பிரஹ்மமுமில்லை. அப்படியிருக்க பிரஹ்மத்திற்கு இல்லாமையுண்டு என்று யாரா லேயும் சொல்ல முடியாது. அதனால் அதற்கு ஒருநாளும் இல்லாமை கிடையாது. இல்லாமை கிடையாததினால் அதை 'ஸத்யம்' என்கிறார்கள். (29)

अपनीतेषु मूर्तेषु ह्यमूर्तं शिष्यते वियत् ।
शक्येषु बाधितेष्वन्ते शिष्यते यत् तदेव तत् ।। ३० ।।

மூர்த்தம் (ரூபம்) உள்ளதெல்லாம் போய்விட்ட பிறகு மூர்த்தமல்லாத ஆகாசம் மிஞ்சுகிறது. (ஆகாசமுள்பட) பாதிக்கக் கூடியது எல்லாம் பாதிக்கப்பட்டுவிட்டால், முடிவில் எதுமிஞ்சு கிறதோ அதுதான் அது (பிரஹ்மம்).

सर्वबाधे न किंचिच्चेत् यन्न किंचित् तदेव तत् ।
भाषा एवात्र भिद्यन्ते निर्बाधं तावदस्ति हि ।। ३१ ।।

எல்லாமே பாதிக்கப்படும் போது ஒன்றுமேயில்லையே? என்று கேட்டால், ஒன்றுமே இல்லை என்பது எதுவோ, அதுதான் அது( பிரஹ்மம்). இவ்விஷயத்தில் வார்த்தைகள் தான் வேறு படுகின்றன. பாதிக்கப்படாமல் ஏதோ ஒன்று இருக்கிறதல்லவா?

அது சூன்யமாகாதா? என்றால், அந்த சூன்யமென்று நீ சொல்கிறவஸ்து பாதிக்கப்படாமல் இருக்கிற வஸ்து என்று

ஏற்படுகிறது. அவ்வஸ்துவைத்தான் உபநிஷத் வெறும் சூன்ய மல்ல, வாஸ்தவமாக பாதிக்கப்படாமல் எப்பொழுதும் இருக்கிற 'ஸத்' வஸ்து என்கிறது. (31)

ஸகல பதார்த்தங்களும் பாதிக்கப்பட்டாலும் அது இருப்பதனால் தான், அதையறிவதற்கு மற்ற பதார்த்தங்களை பாதிக்க வேண்டுமென்று வேதம் சொல்கிறது என்பதை எடுத்துக்காட்டுகிறார்:

अत एव श्रुतिर्बाध्यं बाधित्वा शेषयत्यदः ।
स एष नेति नेत्यात्मेत्यतद्व्यावृत्तिरूपतः ।। ३२ ।।

அதனால் தான் வேதமானது பாதிக்க கூடியதையெல்லாம் பாதித்து விட்டு, இதை (பிரஹ்மத்தை) மிச்சப்படுத்துகிறது 'அந்த இந்த ஆத்மா இது அல்ல', இது அல்ல என்று அது வல்லாததையெல்லாம் விலக்குவது மூலமாய் (பிருஹதாரண்யகம் iv 4-22) (32)

அந்த வேத வாக்யத்திற்கு ஸ்ரீமத் ஆசார்யாரே வியாக்யானம் செய்கிறார்:

इदंरूपं तु यद् यावत् तत् त्यक्तुं शक्यतेऽखिलम् ।
अशक्यो ह्यनिदंरूपः स आत्मा बाधवर्जितः ।। ३३ ।।

'இது' என்ற ஸ்வரூபத்துடன் எதெல்லாம் எவ்வளவெல்லாம் இருக்கிறதோ, அவைகளையெல்லாம் தள்ளிவிட முடியும். 'இது' வல்லாத ஸ்வரூபத்துடன் கூடியது தள்ள முடியாதது. பாதமற்று இருக்கும் அதுதான் ஆத்மா. (33)

सिद्धं ब्रह्मणि सत्यत्वं, ज्ञानत्वं तु पुरेरितम् ।
स्वयमेवानुभूतित्वात् इत्यादिवचनैः स्फुटम् ।। ३४ ।।

(இவ்விதமாக) பிரஹ்மத்தினிடதத்தில் ஸத்யத் தன்மை ஸாதிக்கப்பட்டது முன்னமேயே 'தானே அனுபவரூபமாயிருப்பதால்' (சுலோகம் 13) முதலான வாக்கியங்களால் ஞானத்தன்மையோ தெளிவாகச்சொல்லப்பட்டுவிட்டது. (34)

தைத்திரீய உபநிஷத்தில் கண்ட மூன்றாவது விசேஷணமான 'அனந்தம்' என்பதை மேல் இரண்டு சுலோகங்களில் விளக்குகிறார்:

न व्यापित्वात् देशतोऽन्तो, नित्यत्वात् नापि कालतः ।
न वस्तुतोऽपि सार्वात्म्यात्, आनन्त्यं ब्रह्मणि त्रिधा ।। ३५ ।।

வியாபகமாயிருப்பதால் (எங்குமிருப்பதனால்) இடம் விஷயமாக எல்லை கிடையாது நித்யமாயிருப்பதால் (எப்பொழுதுமிருப்பதனால்) காலம் விஷயமாக எல்லை கிடையாது. எல்லா வஸ்துக்களின் ஸ்வரூபமாகவேயிருக்கும் தன்மையினால் வஸ்து விஷயமான எல்லையும் கிடையாது. ஆக மூன்று விதமாயும் பிரஹ்மத்தினிடத்தில் அனந்தமாயிருக்கும் தன்மை (எல்லையற்றதாகிய தன்மை) ஸித்திக்கிறது. (35)

देशकालान्यवस्तूनां कल्पितत्वाच्च मायया ।
न देशादिकृतोऽन्तोऽस्ति, ब्रह्मानन्त्यं स्फुटं ततः ।। ३६ ।।

(தவிரவும்) தேசம் காலம் வேறு வஸ்து என்பது எல்லாமே மாயையால் கல்பிக்கப்பட்டவைகளேயாதலாலும், தேசம் முதலியவைகளால் எல்லை கிடையாது. ஆகையால் பிரஹ்மத்தினுடைய அனந்தத் தன்மை தெளிவாய் ஏற்பட்டுவிட்டது.

வாஸ்தவமில்லாத பதார்த்தம் உண்மைப் பொருளுக்கு எல்லையாக இருக்க முடியாது என்று தாத்பர்யம். (36)

இதுவரை ஜடமான ஜகத்தினால் பிரஹ்மம் வரையறுக்கப் படாதது என்று காட்டப்பட்டது. ஆனாலும் சேதனமாயிருக்கும் ஈசுவரனும் ஜீவர்களும் இருக்கையில் அவைகளால் வரையறுக் கப்படலாமே என்று தோன்றக்கூடியதால், அவைகளும் பிரஹ்மத்தைத்தவிரவேறில்லையென்று காட்ட வேண்டியிருக்கிறது:

सत्यं ज्ञानमनन्तं यदब्रह्म तदूस्तु तस्य तत् ।
ईश्वरत्वं च जीवत्वमुपाधिद्वयकल्पितम् ।। ३७ ।।

ஸத்யமாய் ஞானமாய் அனந்தமாய் எந்த பிரஹ்மம் இருக்கிறதோ அதுவே வஸ்து (வாஸ்தவமாயிருப்பது) அதற்கு அந்த ஈசுவரனாயிருக்கும் தன்மையும் ஜீவனாயிருக்கும் தன்மையும் இரண்டு உபாதிகளால் கல்பிக்கப்பட்டவை.

அவைகள் கல்பிக்கப்பட்டவையானதனால் வாஸ்தவமில்லை. வாஸ்தவமில்லாததனாலும், பிரஹ்மத்திலேயே கல்பிக்கப்பட்டவைகளானதனாலும், அவைகளால் பிரஹ்மத்தின் எல்லையற்றிருக்கும் தன்மை கெடாது. (37)

शक्तिरस्त्यैश्वरी काचित् सर्ववस्तुनियामिका ।
आनन्दमयमारभ्य गूढा सर्वेषु वस्तुषु ।। ३८ ।।

எல்லா வஸ்துக்களையும் நியமனம் செய்வதாய் ஒரு சக்தி ஈசுவரனிடமிருக்கிறது. அது ஆனந்தமயம் (காரண சரீரம்) முதல் (கார்யமான) எல்லா வஸ்துக்களிலும் ஒளிந்து கொண்டு (உள்ளடங்கி, இருப்பதாகத் தெரியாமல்) இருக்கிறது. (38)

அவ்வித சக்தியை ஏன் ஒப்புக் கொள்ள வேண்டும் என்றால்:

वस्तुधर्मा नियम्येरन् शक्त्या नैव यदा तदा।
अन्योन्यधर्मसांकर्यात् विप्लवेत जगत् खलु ।। ३९ ।।

அந்தந்த வஸ்துக்களின் ஸ்வபாவ குணங்கள் ஒரு சக்தியினால் நியமனம் செய்யப்படாமலேயிருந்தால், அப்பொழுது வஸ்துக்க[illegible] கலந்[illegible] குணங்கள் [illegible]

[illegible] வெளி பதார்த்தங்களில் செல்லாமல் செய்து [illegible] தானாகவே சுத்தமான அறிவு துலங்கும். அதுவே பிரஹ்மம் எனப்படுகிறது.

சைதன்யத்தினுடைய பிரதி பிம்பம் உள் புகுந்து இருப்ப தினால் அந்த சக்தி சைதன்யமுள்ளது போல பிரகாசிக்கிறது.

கண்ணாடி ஜடமாய் வேறு எதையும் பிரகாசப்படுத்த யோக்கியதையற்றிருந்த போதிலும், ஸூர்ய வெளிச்சத்தில் காட்டினால் ஸூர்யனுடைய பிரதி பிம்பத்தை தனக்குள் வாங்கிக் கொண்டு தானும் பிரகாசிக்கிறது, மற்ற பதார்த்தங்களையும் பிரகாசப்படுத்துகிறது. அவ்விதமே ஸத்வகுணமுள்ள மாயை பிரஹ்மத்தின் பிரதி பிம்பத்தை வாங்கிக்கொண்டு, தானும் சைதன்யமுள்ளது போல் பிரகாசிக்கிறது, மற்றவைகளையும் பிரகாசப்படுத்துகிறது. (40-1)

तच्छक्त्युपाधिसंयोगात् ब्रह्मैवेश्वरतां व्रजेत् ।
कोशोपाधिविवक्षांयां याति ब्रह्मैव जीवताम् ।। ४० ।।

அந்த சக்தியாகிற உபாதியின் சேர்க்கையால் பிரஹ்மமே ஈசுவரத்தன்மையை அடைகிறது. பஞ்ச கோசங்களை உபாதி யாகச் சொல்ல நினைத்தால், பிரஹ்மமே ஜீவத்தன்மையை அடைகிறது. (40-2 41-1)

அவ்விதம் ஒரே வஸ்து உபாதிகளினால் பலவிதமாக பெயர்களையடைந்து தனித்தனி வியவஹாரங்களைச் செய்ய முடியுமா என்றால், உலக அனுபவத்திலேயே இவ்விதம் உண்டு என்பதைக் காட்டுகிறார்:

पिता पितामहश्चैकः पुत्रपौत्रौ यथा प्रति ।। ४१ ।।
पुत्रादेरविवक्षायां न पिता न पितामहः ।
तदून्नेशो नापि जीवः शक्तिकोशाविवक्षणे ।। ४२ ।।

ஒருவனே புத்திரனையும் பௌத்திரனையும் உத்தேசித்து பிதாவாகவும் பிதாமஹராகவும் ஆகிறான், புத்திரன் முதலானவர்களை உத்தேசிக்காத விஷயத்தில் அவன் பிதாவுமில்லை, பிதாமஹருமில்லை, என்பது எப்படியோ, அப்படியே மாயா சக்தி, பஞ்சகோசங்கள், இவைகளை உத்தேசிக்காமலிருந்தால் (பிரஹ்மம்) ஈசுவரனுமல்ல, ஜீவனுமல்ல. (41-2, 42)

ஸத்யமாய் ஞானமாய் அனந்தமாய் எந்த பிரஹ்மம் இருக்கிறதோ அதுவே வஸ்து (வாஸ்தவமாயிருப்பது) அதற்கு அந்த ஈசுவரனாயிருக்கும் தன்மையும் ஜீவனாயிருக்கும் தன்மையும் இரண்டு உபாதிகளால் கல்பிக்கப்பட்டவை.

அவைகள் கல்பிக்கப்பட்டவையானதனால் வாஸ்தவமில்லை. வாஸ்தவமில்லாததனாலும், பிரஹ்மத்திலேயே கல்பிக்கப்பட்டவைகளானதனாலும், அவைகளால் பிரஹ்மத்தின் எல்லையற்றிருக்கும் தன்மை கெடாது. (37)

शक्तिरस्त्यैश्वरी काचित् सर्ववस्तुनियामिका ।
आनन्दमयमारभ्य गूढा सर्वेषु वस्तुषु ।। ३८ ।।

எல்லா வஸ்துக்களையும் நியமனம் செய்வதாய் ஒரு சக்தி ஈசுவரனிடமிருக்கிறது. அது ஆனந்தமயம் (காரண சரீரம்) முதல் (கார்யமான) எல்லா வஸ்துக்களிலும் ஒளிந்து கொண்டு (உள்ளடங்கி, இருப்பதாகத் தெரியாமல்) இருக்கிறது. (38)

அவ்வித சக்தியை ஏன் ஒப்புக் கொள்ள வேண்டும் என்றால்:

वस्तुधर्मा नियम्येरन् शक्त्या नैव यदा तदा।
अन्योन्यधर्मसांकर्यात् विप्लवेत जगत् खलु ।। ३९ ।।

அந்தந்த வஸ்துக்களின் ஸ்வபாவ குணங்கள் ஒரு சக்தியினால் நியமனம் செய்யப்படாமலேயிருந்தால், அப்பொழுது வஸ்துக்களுக்கு ஒன்றோடொன்று குணங்கள் கலந்து போய் ஜகத்தே தடுமாறுமல்லவா?

இந்த மாயா சக்தியும் ஜடந்தானே? அது எப்படி வஸ்துக்களை நியமனம் செய்ய முடியும்? என்றால்:

चिच्छायावेशत: शक्ति: चेतनेव विभाति सा।

சைதன்யத்தினுடைய பிரதி பிம்பம் உள் புகுந்து இருப்ப தினால் அந்த சக்தி சைதன்யமுள்ளது போல பிரகாசிக்கிறது.

கண்ணாடி ஜடமாய் வேறு எதையும் பிரகாசப்படுத்த யோக்கியதையற்றிருந்த போதிலும், ஸூர்ய வெளிச்சத்தில் காட்டினால் ஸூர்யனுடைய பிரதி பிம்பத்தை தனக்குள் வாங்கிக் கொண்டு தானும் பிரகாசிக்கிறது, மற்ற பதார்த்தங்களையும் பிரகாசப்படுத்துகிறது. அவ்விதமே ஸத்வகுணமுள்ள மாயை பிரஹ்மத்தின் பிரதி பிம்பத்தை வாங்கிக்கொண்டு, தானும் சைதன்யமுள்ளது போல் பிரகாசிக்கிறது, மற்றவைகளையும் பிரகாசப்படுத்துகிறது. *(40-1)*

तच्छक्त्युपाधिसंयोगात् ब्रह्मैवेश्वरतां व्रजेत् ।

कोशोपाधिविवक्षांयां याति ब्रह्मैव जीवताम् ।। ४० ।।

அந்த சக்தியாகிற உபாதியின் சேர்க்கையால் பிரஹ்மமே ஈசுவரத்தன்மையை அடைகிறது. பஞ்ச கோசங்களை உபாதி யாகச் சொல்ல நினைத்தால், பிரஹ்மமே ஜீவத்தன்மையை அடைகிறது. *(40-2 41-1)*

அவ்விதம் ஒரே வஸ்து உபாதிகளினால் பலவிதமாக பெயர்களையடைந்து தனித்தனி வியவஹாரங்களைச் செய்ய முடியுமா என்றால், உலக அனுபவத்திலேயே இவ்விதம் உண்டு என்பதைக் காட்டுகிறார்:

पिता पितामहश्चैकः पुत्रपौत्रौ यथा प्रति ।। ४१ ।।

पुत्रादेरविवक्षायां न पिता न पितामहः ।

तदून्नेशो नापि जीवः शक्तिकोशाविवक्षणे ।। ४२ ।।

ஒருவனே புத்திரனையும் பௌத்திரனையும் உத்தேசித்து பிதாவாகவும் பிதாமஹராகவும் ஆகிறான், புத்திரன் முதலானவர்களை உத்தேசிக்காத விஷயத்தில் அவன் பிதாவுமில்லை, பிதாமஹருமில்லை, என்பது எப்படியோ, அப்படியே மாயா சக்தி, பஞ்சகோசங்கள், இவைகளை உத்தேசிக்காமலிருந்தால் (பிரஹ்மம்) ஈசுவரனுமல்ல, ஜீவனுமல்ல. *(41-2, 42)*

य एवं ब्रह्म वेदैष ब्रह्मैव भवति स्वयम्।
ब्रह्मणो नास्ति जन्मातः पुनरेष न जायते ।। ४३ ।।

இவ்விதமாக பிரஹ்மத்தை எவன் அறிகிறானோ, அவன் தானே பிரஹ்மமாகவே ஆகிவிடுகிறான். பிரஹ்மத்திற்கோ பிறவி கிடையாது. (ஆகையால்) இவனும் மறுபடி பிறப்பது கிடையாது. *(43)*



# பஞ்சீகரண வார்த்திகம்

ஸ்ரீஸுரேஸ்வராச்சார்யாள்

(நிஷ்பிரபஞ்சமான பிரம்மத்தை சுலபமாக அறிய முடியாத தால் 'அத்யாரோபாபவாதாப்யாம் நிஷ்ப்ரபஞ்சம் ப்ரபஞ்சயேத்' என்ற முறைப்படி ஸிருஷ்டியின் மூலம் பிரம்மத்தில் பிரபஞ்சத்தை அத்யாரோபம் செய்து ஸபிரபஞ்சமாக்கி பிறகு அதை விலக்குவது என்ற அபவாதம் மூலம் நிஷ்பிரபஞ்சமாகக் காட்டி அதில் ஓங்காரம் மூலம் ஸமாதி ஏற்படும் முறையைக் காட்டுவதற்காக ஸ்ரீசங்கரபகவத்பாதாசார்யாள் பஞ்சீகரணம் என்னும் கிரந்தத்தை எழுதினார். அதற்கு அவருடைய சிஷ்யரான ஸ்ரீஸுரேஸ்வராசார்யாள் பஞ்சீகரணவார்த்திகம் என்னும் வியாக்யானம் எழுதியுள்ளார். அது இங்கு தமிழில் மொழி பெயர்க்கப்படுகிறது.)

ஓங்காரம் எல்லா வேதங்களிலும் தொடர்ந்து இருப்பதால் வேதங்களின் ஸாரம், பிரஹ்மதத்வத்தை பிரகாசிக்கச் செய்வது. இந்த ஓங்காரத்தால் முமுக்ஷுக்களுக்கு சித்தஸமாதானம் ஏற்படுவது காட்டப்படுகிறது.

நாம் காணும் இந்த பிரபஞ்சம் உண்டாவதற்கு முன் பரபிரம்மம் ஒன்றே இருந்தது. அது எப்பொழுதும் கட்டுப் படாதது. மாறுதலடையாதது. அது தன் சக்தியான மாயையின் சம்பந்தத்தால் நாமரூபங்கள் வெளிப்படாத அவ்யாகிருதபீஜ நிலையையடைந்தது. இது மாயையால் ஏற்பட்டதால் உண்மையில் பிரஹ்மத்திற்கு காரணத்தன்மை கிடையாது. அந்த பிரஹ்மத்தி லிருந்து முதலில் ஸூக்ஷ்ம பூதங்கள் உண்டாயின.

முதலில் சப்தமொன்றையே ஸ்வரூபமாகக் கொண்ட ஆகாசமும் பிறகு வரிசையாக ஸ்பர்சத்தை மட்டும் ஸ்வரூபமாகக் கொண்ட வாயு, ரூபத்தை மட்டும் ஸ்வரூபமாகக் கொண்ட தேஜஸ், ரஸத்தை மட்டும் ஸ்வரூபமாகக்கொண்ட ஜலம், கந்தத்தை மட்டும் ஸ்வரூபமாகக் கொண்ட பிருதிவி இவை உண்டாயின. இவைகளுக்கு தன்மாத்திரைகள் என்று பெயர். இந்நிலையில் பஞ்ச பூதங்களில் குணம் தவிர வேறு காரியம்

ஒன்றும் கிடையாது. ஆகாசத்தில் சப்தம் என்னும் ஒரு குணம் தான். வாயுவில் அதன் குணமான ஸ்பர்சமும் ஆகாசத்தின் குணமான சப்தமும் சேர்ந்து இரண்டு குணங்கள். தேஜஸ்ஸில் அதன் குணமான ரூபமும் முந்தினபூதங்களின் குணங்களான சப்தஸ்பர்சங்களும் சேர்ந்து மூன்று குணங்கள். ஜலத்தில் அதன் குணமான ரஸமும் முந்தின பூதங்களின் குணங்களான சப்தம், ஸ்பர்சம், ரூபம் இவை சேர்ந்து நான்கு குணங்கள். பிருதிவியில் அதன் குணமான கந்தமும் முந்தின பூதங்களின் குணங்களான சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம் இவை சேர்ந்து ஐந்து குணங்கள். எல்லாவியஷ்டி ஸூக்ஷ்ம சரீரங்களிலும் வியாபித்துள்ள பௌதிகமான ஹிரண்ய கர்ப்பருக்கு உபாதியாக உள்ள ஸமஷ்டி லிங்க சரீரம் இந்த பூதங்களிலிருந்து உண்டானது.

மாயை ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணவடிவமானதால் அதிலிருந்து உண்டான ஐந்து பூதங்களும் முக்குணங்களுள்ளவை. இந்த ஐந்து பூதங்களின் ஸாத்விகாம்சங்களிலிருந்து தனித்தனியாக வரிசையாக காது, த்வகிந்திரியம், கண், நாக்கு, மூக்கு என்னும் ஐந்து இந்திரியங்கள் உண்டாகின்றன. ஆகாச பூதத்தின் ஸாத்விகாம்சத்திலிருந்து காது என்னும் இந்திரியம், வாயுவின்ஸாத்விகாம்சத்திலிருந்து த்வகிந்திரியம், இம்மாதிரி மற்றதையும் அறிந்து கொள்ள வேண்டும்.

ஐந்து பூதங்களின் ஸாத்விகாம்சங்களும் சேர்ந்து அந்தக் கரணத்திற்கு காரணமாகிறது. ஸாத்விகாம்சத்திலிருந்து உண்டானதால் இந்த இந்திரியங்களால் ஞானம் உண்டாகிறது. இவைகளுக்கு ஞானேந்திரியங்கள் என்று பெயர். காது முதலான இந்திரியங்களால் அதனதன் காரணமான பூதத்தின் குணத்தை மட்டும் தான் அறிய முடியும். அந்தக்கரணத்தில் எல்லா பூதங்களின் அம்சங்களும் சேர்ந்திருப்பதால் அதனால் எல்லா பூதங்களின் குணங்களையும் அறிய முடியும்.

ஐந்து பூதங்களின் ராஜஸமான அம்சங்களிலிருந்து தனித்தனியாக வரிசையாக வாக், பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்கள் உண்டாகின்றன. ஐந்து பூதங்களின் ராஜஸஅம்சங்களும் சேர்ந்து பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்று ஐந்து விருத்திகளுடன் கூடிய பிராணன் உண்டாகிறது. கீழே சொல்லப்பட்ட ஐந்து

ஞானேந்திரியங்கள்,ஐந்து கர்மேந்திரியங்கள் ஐந்து பிராண விருத்திகள், மனம், புத்தி, இந்த 17ம் சேர்ந்து லிங்கசரீரம், ஸூக்ஷ்ம சரீரம் எனப்படும். ஒரே அந்தக்கரணத்தை ஸம்சயம், நிச்சயம் என்னும் இரண்டு கார்யங்களைக் கொண்டு இரண்டாகப் பிரித்திருக்கிறது ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீரகாரணமான பூதங்களி லிருந்தே வியஷ்டி ஸூக்ஷ்ம சரீரங்களும் உண்டாகின்றன.

பிறகு அதே ஸூக்ஷ்ம பூதங்கள் பஞ்சீகரணம் செய்யப் பட்டு ஸ்தூலமான பின் அந்த ஸ்தூலபூதங்களிலிருந்து ஸமஷ்டி வியஷ்டி ஸ்தூலசரீரங்கள் உண்டாகின்றன. இனி பஞ்சீகரண முறையைக்கூறுகிறார். பிருதிவி முதலான ஐந்து பூதங்களில் ஒவ்வொன்றையும் இரண்டாகப் பிரிக்க வேண்டும். அவ்விரண்டில் ஒரு பாகத்தைநான்காகப் பிரித்து அந்த நான்கு பாகங்களையும் மற்ற நான்கு பூதங்களில் சேர்க்க வேண்டும்.

இவ்வாறு செய்தால் ஒவ்வொரு பூதத்திலும் அதன் பாகம் அரைப்பங்கும் மற்ற நான்கு பூதங்களின் நான்கு அரைக்கால் பாகங்களும் சேர்ந்து பூர்ணமாகும். இவ்விதம் செய்வதன் மூலம் ஒவ்வொரு பூதத்திலும் ஐந்து பூதங்களின் அம்சங்களும் சேர்வதால் இதை பஞ்சீகரணமென்று சொல்கிறார்கள். ஆகாசம் என்னும் பூதத்தில் அதன் பாகம் அரை பங்கும் மற்ற பூதங்கள் ஒவ்வொன்றின் பாகம் அரைக்கால் பங்கும் உள்ளது. இது போல வாயு முதலான மற்ற பூதங்களிலும் பார்த்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு பூதத்திலும் எல்லா பூதங்களின் அம்சம் இருந்த போதிலும் அரைப்பங்கு உள்ள பூதத்தின் பெயரைக்கொண்டு தான் வியவஹாரம். பஞ்சீக்ருத பூதங்களிலிருந்து ஸமஷ்டி வியஷ்டி ஸ்தூலசரீரம் உண்டாகிறது. உண்மையில் ஆத்மாவுக்கு சரீரமில்லாவிட்டாலும், பிராந்தியால் இது சரீரமாகத் தோன்று கிறது. தேவதைகளின் அனுக்ரஹத்தோடு கூடிய இந்திரியங் களால் சப்தம் முதலான விஷயங்களின் ஞானம் ஏற்படுகிறது. இது ஜாகரிதம் என்று சொல்லப்படுகிறது. ஒரே பிரஹ்மம் அதிதைவதம் (தேவதைகளிடம் உள்ளது) அத்யாத்மம் (சரீரத்திலுள்ளது) அதிபூதம் (பூதங்களிலுள்ளது) என்று மூன்று விதமாக பிரிந்திருப்பதாக பிராந்தியால் தோன்றுகிறது. இது வாஸ்தவமல்ல. சரீரத்திலுள்ள இந்திரியங்கள், அவைகளின் விஷயங்கள், இந்திரியங்களைத் தூண்டுகிற தேவதைகள் இவற்றை தனித்தனியாகக் காட்டுகிறார்:-

சரீரத்திலிருக்கிற காது என்னும் இந்திரியம் அத்யாத்மம், கேட்கப்படுகிற சப்தம் அதிபூதம் தேவதைகளில் திக்தேவதை அதிதைவதம். த்வகிந்திரியம் அத்யாத்மம், ஸ்பர்சம் என்னும் விஷயம் அதிபூதம் வாயு தேவதை அதிதைவதம்.

கண் அத்யாத்மம், பார்க்கத்தக்க ரூபம் அதிபூதம். சூரியன் அதிதைவதம். நாக்கு அத்யாத்மம், ருசித்து அறியப்படுகிற ரஸம் அதிபூதம், வருணன் அதிதைவதம்.

க்ராணேந்திரியம் (மூக்கு) அத்யாத்மம், முகரக்கூடிய வாஸனை அதிபூதம், பிருதிவீதேவதை அதிதைவதம்.

சரீரத்திலுள்ள வாகிந்திரியம் அத்யாத்மம் சொல்லத்தக்க தான சப்தம் அதிபூதம், அக்னி அதிதைவதம்.

கைகள் அத்யாத்மம், கைகளால் எடுக்கும் பொருள் அதிபூதம், இந்திரன் அதிதைவதம்.

கால்கள் அத்யாத்மம், செல்ல வேண்டியது அதிபூதம், விஷ்ணு அதிதைவதம்.

பாயு என்னும் இந்திரியம் அத்யாத்மம், வெளியில் விடுவது அதிபூதம். மிருத்யுதேவதை அதிதைவதம்.

உபஸ்தம் என்னும் இந்திரியம் அத்யாத்மம், ஸ்திரீ முதலானவர்களால் ஏற்படும் ஆநந்தத்திற்கு காரணம் அதிபூதம், பிரஜாபதிதேவதை அதிதைவதம்.

மனம் அத்யாத்மம், நினைக்கத்தக்கது அதிபூதம், சந்திரன் அதிந்தவதம். புத்தி அத்யாத்மம், நிச்சயிக்கத்தக்கது அதிபூதம், பிருஹஸ்பதி அதிதைவதம்.

அஹங்காரம் அத்யாத்மம், அஹங்கரிக்கத்தக்கது அதிபூதம். ருத்ரன் அதிதைவதம்.

சித்தம் அத்யாத்மம், நினைக்கத்தக்கது அதிபூதம், க்ஷேத்ரக்ஞன் அதிதைவதம், க்ஷேத்ரக்ஞன் என்பது ஸாக்ஷியைக் குறிக்கும்.

தமஸ் அத்யாத்மம், அதன் காரியம் அதிபூதம் ஈசுவரன் அதிதைவதம். ஈசுவரன் என்பது மாயாபிரவர்தகனான ஜகத்காரணவஸ்துவைக் குறிக்கும் ஸங்கல்பம் செய்வது மனம், நிச்சயிப்பது புத்தி, அபிமானம் அஹங்காரம். நினைப்பது சித்தம்.

அதனதன் தேவதைகளின் அநுக்ரஹத்தோடுகூடிய வெளி இந்திரியங்கள் அந்தக்கரணம் இவைகளால் அதனதன் விஷயத்தை அறிவது ஜாகரிதம் என்று சொல்லப்படுகிறது. இந்த ஜாகராவஸ்தை, கரணங்களுக்கு ஆச்ரயமான சரீரம் இவ்விரண்டிலும் அபிமானமுள்ளவன் விசுவன் என்று சொல்லப்படுகிறான். வியஷ்டிஸ்தூல சரீராபிமானியான விசுவனை ஸமஷ்டிஸ்தூலசரீராபிமானியான விராட் ஆக பார்க்க வேண்டும். விசுவனுக்கும் விராட்டுக்கும் உள்ள பேதம் நீங்குவதற்காக வியஷ்டியான ஸ்தூல சரீரத்தில் அபிமானத்தைத் துறந்து தனியாக விசுவனைப் பார்க்காமல் இலை, காய், கனி, கிளை என்று பலவித வேற்றுமைகள் இருந்தாலும் அதை கவனிக்காமல் ஒரே மரமாகப்பார்ப்பது போல விராடாகவே பார்க்க வேண்டும்.

காது, த்வக், கண், நாக்கு, மூக்கு என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்து. வாக்கு, கை, கால், பாயு, உபஸ்தம் என்னும் கர்மேந்திரியங்கள் ஐந்து. மனம், புத்தி, அஹங்காரம், சித்தம் அந்தக்கரணத்தின் பிரிவுகள் நான்கு.

பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்னும் பிராணனின் விருத்திகள் ஐந்து.

ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவி என்னும் ஸூக்ஷ்ம பூதங்கள் ஐந்து.

அவித்யை, காமம், கர்மா என்னும் மூன்று.

இவற்றில் ஒவ்வொரு பஞ்சகமும் ஒவ்வொரு புரம் என்று நான்குபுரங்கள் அந்தக்கரணவிருத்திகள் நான்கு ஒரு புரம். அவித்யை, காமம், கர்மா மூன்று புரங்கள் ஆக எட்டு புரங்கள். இவைகள் ஜீவனுக்கு போக ஸாதனமானதாலும் இவைகளை உபாதியாகக்கொண்டு ஜீவன் இருப்பதாலும் இவை

ஜீவனுடைய புரங்களாகக் கூறப்படுகின்றன. இவை பிரத்ய காத்மாவுக்கு ஸூக்ஷ்ம சரீரம், இதுமாயையால் ஏற்பட்டது.

காது முதலான கரணங்கள் ஒய்ந்து அடங்கியபின் ஜாகரத்தில் ஏற்பட்ட அநுபவத்திலிருந்து உண்டான ஸம்ஸ்காரத்தால் உண்டாகிற அந்தக்கரணவிருத்தியோடு கூடி அறியத்தக்கதாகவும் அறிகிறதாகவும் விளங்குவது ஸ்வப்னம் எனப்படும். ஸூக்ஷ்மசரீரம் ஸ்வப்பனம் இரண்டிலும் அபிமான முள்ளவன் தைஜஸன். வாஸனை என்னும் தேஜஸில் அபிமானி யாயிருப்பதால் இவன் தைஜஸன் எனப்படுகிறான். முன் போல வியஷ்டி ஸூக்ஷ்மசரீரத்தில் அபிமானத்தை விட்டுவிட்டு வியஷ்டி ஸூக்ஷ்ம சரீராபிமானியான தைஜஸனை ஸமஷ்டிஸூக்ஷ் மசரீர அபிமானியான ஹிரண்யகர்ப்பனாக பார்க்க வேண்டும். ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என்னும் இரண்டு சரீரங்களுக்கும் காரணமான சைதன்ய பிரதிபிம்பத்துடன் கூடிய அக்ஞானம் அவ்யக்தம் என்றும் அவ்யாக்ருதம் என்றும் சொல்லப்படுகிறது.

இந்த அக்ஞானம் ஸத்துமல்ல. அஸத்துமல்ல. முக்காலத்திலும் பாதமடையாமல் ஸத்யமாக நித்யமாக இருக்கும் பொருள் ஸத் எனப்படும். அக்ஞானம் அதிஷ்டான ஞானத்தால் பாதமடைவதால் மித்யையான அக்ஞானம் ஸத்தல்ல. அது அஸத்தாக இருந்தால் அதைப்பற்றிய அறிவு யாருக்கும் ஏற்படாது. 'நான் அறியாதவனாக இருக்கிறேன்' என்று அக்ஞானத்தின் அறிவு எற்படுவதால் அக்ஞானம் அஸத்துமல்ல. ஒன்றுக் கொன்று விரோதமுள்ளதால் ஸதஸத்தாகவும் இருக்க முடியாது. அக்ஞானம் ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதானால் இரண்டு வஸ்துக்களிருப்பதால் அத்வைதம் ஸித்திக்காது. இரண்டும் ஒன்றாகவே இருக்குமானால் அக்ஞானம் பாத மடையும் போது ஆத்மாவுக்கும் பாதமேற்படும். ஒன்றுக் கொன்று விரோதமானதால் ஒரேஸமயத்தில் பேதம் அபேதம் இரண்டும் சேர்ந்திருக்க முடியாது.

அக்ஞானம் அவயவத்துடன் கூடியது சொல்ல என்று முடியாது.

அப்படியிருக்குமானால் அவயவமான காரணத்தில் சேர்ந்திருக்கும். அப்பொழுது அக்ஞானத்திற்கு உற்பத்தி ஏற்பட்டு அது அநாதி என்பது பொருந்தாமல் போய்விடும். அதன் அம்சங்களான பிருதிவி முதலானவை இருக்கும்பொழுது நிரவயவம் என்றும் சொல்ல முடியாது. ஒன்றுக்கொன்று விரோதமானதால் ஒரே வஸ்து அவயவமுள்ளதாகவும் அவயவமற்றதாகவும் இருக்க முடியாது. இவ்வாறு அக்ஞானத்தை எந்தவிதமாகவும் விளக்கிச் சொல்ல முடியாவிட்டாலும் அது பொய்யானதால் ஆத்ம ஞானத்தால் நாசமடையக்கூடியது என்று அக்ஞானத்தைப் பற்றிச்சொல்லலாம்.

ஜாகரத்திலும் ஸ்வப்னத்திலும் காணப்படுகிற ஸ்தூல ஸூக்ஷ்மபதார்த்த விஷயகமான ஞானமொன்றுமில்லாமல் ஆலம் விதையில் ஆலமரம் போல் புத்தியானது காரணமான அக்ஞானஸ்வரூபமாக இருப்பது ஸுஷுப்தி எனப்படும். காரண சரீரமான அக்ஞானம் ஸுஷுப்தி இரண்டிலும் அபிமான முள்ளவன் பிராஜ்ஞன் என்று சொல்லப்படுகிறான். முன் போலவே வியஷ்டிகாரணசரீரத்தில் அபிமானத்தை விலக்கி விட்டு வியஷ்டி காரணசரீராபிமானியான ப்ராஜ்ஞனை ஸமஷ்டிகாரணமான மாயையுடன் சேர்ந்த ஈசுவரனாக நினைக்க வேண்டும்.

சித்ஸ்வரூபமான ஒரே தத்வம் விசுவன், தைஜஸன், ப்ராஜ்ஞன், விராட், ஸூத்ராத்மா (ஹிரண்யகர்பர்), அக்ஷரம் (ஈசுவரன்) என்று வெவ்வேறு வஸ்துக்கள் போல் தோன்று கிறது. உபாதிகளால் தான் வேற்றுமையே தவிர சைதன்ய ஸ்வரூபத்தில் வேற்றுமையில்லை. உபாதிகள் பொய்யானதால் அவைகளால் தோன்றும் வேற்றுமையும் பொய்தான் உண்மையல்ல. அதனால் அத்வைதஸித்தாந்தத்திற்கு விரோத மில்லை.

வியஷ்டியான விசுவன், தைஜஸன், பிராஜ்ஞன் இம்மூன்றையும் ஸமஷ்டியான விராட், ஹிரண்யகர்ப்பன், ஈசுவரனாகப் பார்க்க வேண்டும். வியஷ்டிக்கும், ஸமஷ்டிக்கும் வேற்றுமை தெரியக்கூடாது.

இனி ஓங்காரம் மூலம் பிரஹ்மத்தை அறியும் முறையைக் கூறுகிறார்:-

சொல்லும் பொருளும் வெவ்வெறாகத் தெரியாததால் இரண்டும் ஒன்று தான் எல்லாச் சொற்களும் ஓங்காரஸ்வரூப மானதால் அந்த சொற்களின் வாச்யமான விஸ்வன், தைஜஸன், ப்ராஜ்ஞன் முதலான எல்லா பொருளும் அகார-உகார-மகார வடிவமான ஓங்காரமே தான். அதிலும் அகாரமானது ஸ்தூல பிரபஞ்சவாசகமான எல்லா சப்தவடிவமாகவும், உகாரம் ஸூக்ஷ்மப்ரபஞ்சவாசகமான எல்லா சப்தவடிவமாகவும், மகார மானது காரணவாசகமான எல்லா சப்த வடிவமாகவுமுள்ளது. விசுவனை பிரணவத்திலுள்ள அகாரமாகவும், தைஜஸனை உகாரமாகவும் பிராஜ்ஞனை மகாரமாகவும் பார்க்க வேண்டும். இதற்குப் பிறகு ஸ்தூலஸூக்ஷ்மக்ரமமாக எல்லாவற்றையும் சிதாத்மாவில் மறையச்செய்ய வேண்டும். எப்படியெனில் ஸ்தூலவிஸ்வரூபமான அகாரத்தை ஸூக்ஷ்மதைஜஸரூபமான உகாரத்திலும் இதை காரணப்ராஜ்ஞ வடிவமான மகாரத் திலும் மகாரத்தை சிதாத்மாவிலும் லயமடையச் செய்ய வேண்டும். இவ்வாறு ஸர்வபிரபஞ்சமும் லயமடைந்து விடுகிறது. மிஞ்சியுள்ளது சிதாத்மா ஒன்று தான். அந்த சிதாத்மாவே நான். எப்பொழுதும் சுத்தமாயும் அறிவுஸ்வரூபமாயும் விடுபட்டதாயும் எப்பொழுதுமிருப்பதாயும் இரண்டற்றதாயும் பரமாநந்த நிதியும், வாஸுதேவஸ்வரூபமும் (எங்கும் நிறைந்திருப்பதும்) பிரண வார்த்தமுமான பிரஹ்மமே நான் என்று வெகுகாலம் த்யானம் செய்து இதையறிந்து த்யானம் செய்கிறவன், த்யானம் செய்யப் படும் வஸ்து, த்யானம் என்ற மூன்று வித பேதத்தைக் காட்டுகிற சித்தத்தையும் அதன் ஸாக்ஷிஸ்வரூபத்தில் லயமடையும்படி செய்ய வேண்டும். அந்த சித்தத்தை அசையும்படி செய்யக் கூடாது. அதன் காரியத்தை செய்ய முடியாதபடி நாசமடைந்து விடவேண்டும். ஜலம் நிறைந்த அசையாத ஸமுத்ரம் போல பூர்ணமான ஞானஸ்வரூபமாகவே இருக்க வேண்டும்.

இந்நிலையில் 'நான் ஆத்மாவை அறிகிறவன்' என்ற எண்ணம் இருக்காது. இவ்வாறு நிர்விகல்பஸமாதி நிலையை யடைந்த யோகி சிரத்தை பக்தியுடன் கூடியவனாய் இந்திரியங்

களையும் கோபத்தையும் ஜயித்தவனாய் இரண்டற்ற பிரம்மத்தை பார்ப்பான். நாம் காணும் இந்த பிரபஞ்சம் முதலிலும் நடுவிலும் முடிவிலும் துக்கத்தைக் கொடுப்பதால் எல்லாவற்றையும் விலக்கி விட்டு எப்பொழுதும் ஆத்மதத்வத்தில் நிலைத்திருக்க வேண்டும். எவன் எங்கும் நிறைந்து சாந்தமாயும் ஆநந்தஸ்வரூப்மாயும் இரண்டற்றதாயுமுள்ள ஆத்மாவை அறிகிறானோ அவன் அடைய வேண்டிய பொருளோ, அறிய வேண்டிய பொருளோ ஒன்றுமில்லை. எங்கும் நிறைந்த பரமானந்த ஸ்வரூபமான பிரம்மத்தை அறிந்தவனுக்கு எல்லா ஆநந்தங்களும் பிரம்மானந் தத்தில் அடங்கியிருப்பதால் அடைய வேண்டியது ஒன்றுமில்லை. பிரம்மத்தை அறிந்தால் எல்லாம் அறிந்ததாக ஆகும் என்று சுருதியில் சொல்லி இருப்பதால் அவனுக்கு அறிய வேண்டியதும் ஒன்றுமில்லை. இத்தகைய ஞானிக்கு செய்ய வேண்டிய காரியம் ஒன்றும் பாக்கியில்லாததால் இவன் கிருதகிருத்யன், ஜீவன் முக்தன். இவன் எப்பொழுதும் மனதை ஆத்மஸ்வரூபத்திலேயே செலுத்தியவனாய் இந்த உலகைப் பார்க்கமாட்டான்.

ஸமாதியிலிருந்து வெளிவந்து பிக்ஷாடனாதி ஸமயத்தில் வெளியில் இருக்கும் பொருளைப் பார்த்தாலும் எங்கும் சைதன்யம் தொடர்ந்து இருப்பது தெரிவதால் ஆத்மாவைக் காட்டிலும் வேறாக பார்க்கமாட்டான். திசைகளில் மோஹம் போலும், கண்ணில் திமிரம் என்னும் வியாதி உள்ளவனுக்கு ஒரே சந்திரன் இரண்டு சந்திரர்களாக தெரிவது போலும் பொய் என்ற தீர்மானத்துடன் தான் பார்ப்பான்.

ஜீவன் முக்தனுக்கு பிராரப்தகர்மா நாசமடையும் வரை சரீரம் தோன்றிக் கொண்டிருக்கும். நாசமடைந்த பின் சரீரமிருக்காது. அதன் தோற்றமும் இருக்காது. இந்த விஷயத்தை சாந்தோக்ய உபநிஷத் இவ்வாறு கூறுகிறது.

"ஞானமடைந்தவனுக்கு பிராரப்த கர்மாவிலிருந்து விடுபடும் வரை தான் தாமதம். பிராரப்தகர்ம பலனை யனுப வித்து அந்த கர்மா நாசமடைந்ததும் அந்த க்ஷணத்திலேயே சரீரம் நீங்கி விதேஹகைவல்ய மடைகிறான்."

கயிற்றைப்பார்த்து பிராந்தியால் பாம்பாகப் பார்ப் பவனுக்கு இது கயிறு என்ற உண்மை தெரிந்து பிராந்தி நீங்கிய

பின்னும் பாம்பு போல் இருக்கிறது என்ற எண்ணம் வந்தாலும் முன் போல் பயம், கம்பம் (நடுக்கம்) முதலியவை வருவதில்லை. இது போல் ஜீவன் முக்தனுக்கு பிராரப்த காரியமான சரீரம் தோன்றினாலும் அது வெறும் தோற்றம் தான் உண்மை யல்ல என்ற நிச்சயமிருப்பதால் அதனால் துக்க மேற்படாது. ஆகவே ஆத்ம தத்வத்தையறிந்தவன் ஸமாதி ஸமயத்திலும் வ்யுத்தான ஸமயத்திலும் எப்பொழுதும் முக்தன் தான். பிராரப்த கர்ம பலனை அனுபவித்து அது நீங்கியபிறகு அவித்யை என்னும் இருள் அற்றதும் எவ்விதத் தோற்றமுமில்லாததும் ஆநந்தஸ்வரூபமும் தோஷமில்லாததும் சுத்தமானதும் மனதிற்கும் வாக்குக்கு மெட்டாததும் சொல்லாகவும் பொருளாகவுமில்லாததும் தள்ளத் தக்கதாகவோ எடுக்கத்தக்கதாகவோ இல்லாததும் ஞானகன மாகவுமுள்ள வியாபகமான பிரஹ்மமாக ஆகிறான்.

பஞ்சீகரணவார்த்திகமென்னும் இந்த பிரகரணமானது அமானித்வம் முதலான நியமங்களுள்ளவர்களும் ஆத்மதத்வ ஸாக்ஷாத்காரம் பெற்றவர்களுமான குருக்களின் மூலம், குருவிடம் பக்தியால் ஏற்பட்ட அவர்களுடைய அநுக்ரஹத்தால் குருசுச்ரூஷை முதலான முயற்சியுடன் முமுக்ஷுக்களால் அறியத் தக்கது.

ஞானத்தைத் தருகிற இந்த பிரகரணத்தை இவ்வுலகிலும் மேலுலகிலுமுள்ள ஸுகபோகங்களில் ஆசையற்ற வித்வானான யோகி தினமும் காலை, மாலை இரு வேளைகளிலும் முயற்சியுடன்அர்த்தானுஸந்தானத்துடன் படிக்க வேண்டும்.



।। श्रीः ।।

# ।। ब्रह्मानुचिन्तनम् ।।

## ப்ரஹ்மா நுசிந்தனம்

## ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாள்

-------

(ப்ரஹ்மாநுசிந்தனம் என்ற 29 சுலோகங்கள் கொண்ட இச்சிறியபிரகரணத்தில் ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் அடைந்தவன் தன்னை எவ்வாறு எண்ணிக்கொள்வான் என்பதைக்கூறும் முறையில் ஞானியின் அநுபவத்தைக் காட்டுகிருர். அதாவது ஆசார்யாள் தனது ப்ரஹ்மா நுபவத்தை நன்கு வெளியிடுகிருர். தேஹாதிகளேக்காட்டிலும் வேருன ஆத்மாவே ப்ரஹ்மம் என்று கூறி அத்வைதமான அந்த ப்ரஹ்மத்தின் லக்ஷணங்களேயும் குறிப்பிட்டு பிரமாணங்களேயும் காட்டுகிருர். ஞானம் வரப்பெருதவர்களும் கடைத்தேற உபாயங்களேக் கூறுகிருர். அந்த ஞானத்திற்கு ஸாதனமான ஸகுணமூர்த்தி த்யானத்துடன் முடிவடைகிறது. குருவின் உபதேசம் பெற்றபின் ப்ரஹ்மஸ்வரூபத்தைச் சிந்திக்கவேண்டியவிதத்தைக் காட்டுவதாலும் 25வது சுலோகத்தில் इति ब्रह्मानुचिन्तनम् (இதிப்ரஹ்மா நுசிந்தனம்) - என்று காணப்படுவதாலும் இந்நுலுக்கு 'ப்ரஹ்மானுசிந்தனம்' என்ற பெயர் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அர்த்த ஞானத்துடன் இதை பாராயணம் செய்து வந்தாலும் க்ரமமாக சிரேயஸ்ஸை அடையலாம்.)

(அ) ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் அடைந்த தத்வ ஞானி ப்ரஹ்மத்தை ஸ்வஸ்வரூபமாக அநுஸந்தானம் செய்யும் முறையைச் சொல்வதற்காக முதலில் முக்தனின் லக்ஷணத்தைக் கூறுகிருர் : -

अहमेव परं ब्रह्म वासुदेवाख्यमव्ययम् ।
इति स्यात् निश्चितो मुक्तो बद्ध एवान्यथा भवेत् ।। १ ।।

அஹமேவ பரம் ப்ரஹ்ம வாஸுதேவாக்யமவ்யயம் ।
இதி ஸ்யாத் நிச்சிதோ முக்தோऽபத்த ஏவாந்யதா பவேத் ।।

**वासुदेवाख्यं** - வாஸுதேவர் என்று பெயருள்ளதும், **अव्ययं** - அழிவற்றதுமான, **परं ब्रह्म** - பரப்ரஹ்மமானது, **अहमेव** - நான்தான், **इति** - என்று, **निश्चित:**- உறுதியான ஞானமுள்ளவன், **मुक्त:** - முக்தனுக, **स्यात्** - இருப்பான், **अन्यथा** - இந்த ஞானம் இல்லாவிடில், **बद्ध एव** - பத்தனுகவே (ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்டவனுகவே) **भवेत्** - இருப்பான்.

உலகில் யாவரும் சரீரம், இந்திரியம், மனம் முதலியவைகளை தன் ஸ்வரூபமாக எண்ணுகிறுர்கள். சிலசமயம் அவை தன்னுடையவை என்றும் நினைக்கின்றனர். இரண்டு விதத்திலும் அஹங்கார - மமகாரமூலம் சரீராபிமானம் வேறுன்றியிருப்பதால் சரீரத்தையொட்டி ஏற்படும் இன்ப துன்பங்களை மாறி மாறி அனுபவித்துக்கொண்டு ஸம்ஸாரிகளாக, விடுபடாதவர்களாகவே இருக்கின்றனர். சரீராபிமானமிருக்கும் வரை பத்தர் (கட்டுப்பட்டவர்) தான். எப்பொழுது ஆசார்ய உபதேசத்தால் சரீராபிமானம் நீங்கி, நான் சரீராதிகள் அல்ல, இவை என்னுடையதும் அல்ல, நான் ஸச்சிதானந்தமான ப்ரஹ்மம் என்ற ஞானம் ஏற்பட்டு உறுதிப்படுகிறதோ அப்பொழுது ஸம்ஸார பந்தம் நீங்கி விடுகிறது. உலக விஷயங்களால் ஸுகமோ துக்கமோ அவனுக்கு ஏற்படுவதில்லை. அவன்தான் முக்தன்.

இங்கு '**वासुदेवाख्यं अव्ययं** - (வாஸுதேவாக்யம் அவ்யயம்) என்ற இரு பதங்களாலும், ப்ரஹ்மத்தின் ல்க்ஷணம் கூறப்படுகிறது. **वासयतीति वासु: दीव्यतीति देव: वासुश्चासौ देवश्च वासुदेव:** - வாஸு என்ற பதத்திற்கு எல்லாவற்றையும் வஸிக்கும்படி செய்பவர், இருக்கும்படி செய்பவர் என்பது பொருள். அதாவது எல்லாவற்றிற்கும் ஸத்தையைக் கொடுப்பவர். ஸத்தான பொருள் அது ஒன்றே. ஆகவே, **वासु** - (வாஸு) என்ற பதத்தால் ஸத் என்னும் ப்ரஹ்ம

லக்ஷணம் கூறப்பட்டது. देवः - (தேவ) என்பதற்கு பிரகாசம் உள்ளவர் என்று அர்த்தம். அதனுல் 'சித்' என்னும் லக்ஷணம் கூறப்படுகிறது. தான் ப்ரகாசரூபமாக இருந்துகொண்டு எல்லா வற்றையும் பிரகாசப்படுத்துபவர். अव्ययं- (அவ்யயம்) என்ற பதத்தால் 'அநந்தம்' (மூன்றுவித பரிச்சேதமற்றது) என்ற லக்ஷணம் கூறப்படுகிறது. 'सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म' (ஸத்யம், ஞானம், அனந்தம் ப்ரஹ்ம) என்று தைத்திரீய உபநிஷத்தில் கூறப்படும் ப்ரஹ்மம் நான் என்ற ஞானம் ஏற்பட வேண்டும். மேலும், 'वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः' (வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:) (கீதை. 7-19) 'सकल-मिदमहं च वासुदेवः' (ஸகலமிதம் அஹம் ச வாஸுதேவ:) என்று கூறியுள்ளபடி எல்லாம் ப்ரஹ்மம். அது நான்தான் என்ற ஞானம் உறுதிப்படவேண்டும். இதில் ஸந்தேஹமோ, விபரீதமோ கொஞ்சமாவது ஒருபொழுதும் உண்டாகக் கூடாது. அவனே முக்தன். (1)

(அ) முதல் சுலோகத்தில் முக்தனின் லக்ஷணம் கூறும் முறையில் குருமுகமாக ச்ரவணத்தால் ஏற்படும் தத்வ ஞானத்தைக்காட்டி இப்பொழுது மனன முறையைக் காட்டுகிறுர் :-

अहमेव परंब्रह्म निश्चितं चित्त चिन्त्यताम् ।
चिद्रूपत्वादसंगत्वादबाध्यत्त्वाप्रयत्नतः ।। २।।

அஹமேவ பரம் ப்ரஹ்ம நிச்சிதம் சித்த சிந்த்யதாம் ।
சித்ரூபத்வாதஸங்கத்வாதபாத்யத்வாத் ப்ரயத்நத : ।।

चित्त - ஹே மனமே! चिद्रूपत्वात् - ஞான வடிவமாயிருப்பதாலும் असंगत्वात् - ஒன்றிலும் ஒட்டாததாலும் अबाध्यत्वात् - முக்காலும் அழியாமலிருப்பதாலும் अहं - நான் परंब्रह्मैव - பிரஹ்மம் தான் (என்று) निश्चितं - உறுதியாக प्रयत्नतः - முயற்சியுடன் चिन्त्यताम् (உன்ஞல்) ஆலோசிக்கப் படட்டும்.

ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றுதான் என்று ஆசார்யர் உபதேசித்த விஷயத்தில் சிரவணத்தால் ஸந்தேஹம் நீங்கினாலும் வெவ்வேறு லக்ஷணங்களுள்ள இரண்டு பொருள்கள் எப்படி ஒன்றாக இருக்கக்கூடும் என்ற ஆசங்கை (அஸம்பாவனை) மனதில் ஏற்படக்கூடும். இதனால் ஞானம் உறுதிப்படாது. இதற்காக மனனம் செய்யவேண்டும். அதாவது தக்க யுக்திகளைக் கண்டுபிடித்து அவைகள் மூலம் ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றாக இருக்கலாம். விரோதமில்லை என்று தீர்மானிக்கவேண்டும். இதுதான் மனனம் என்பது. அதை இங்கு காட்டுகிறார். ப்ரஹ்மஸ்வரூபம் சித்ரூபம் (ஞான வடிவமானது) அஸங்கம் (ஒன்றுடனும் ஒட்டாதது, ஒரு தர்மமும் இல்லாதது) அபாத்யம் (ஞானத்தால் மறைந்து போகாதது, பொய்யல்ல, உண்மையானது) என்று தெரிய வருகிறது. நான் என்று கூறப்படும் பொருளை நன்கு பரிசோதித்து சரீராதிகளிலிருந்து விலக்கிப் பார்த்தோமானால் அதுவும் இதே லக்ஷணங்கள் உள்ளது என்பது தெரியவரும். ஆகையால் இரண்டும் ஒன்றுதான். இவ்வாறு மனனம் மூலம் மனதில் தோன்றும் ஆக்ஷேபங்களுக்குப் பரிஹாரம் செய்து கொண்டு நானே பரப்ரஹ்மம் என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். சிந்தனம் செய்வது மனதின் கார்ய மாதலால் ப்ரஹ்மத்தைச் சிந்திக்கும்படி மனதிற்கு உபதேசம் செய்கிறார். (2)

(அ) மனனத்தைக் கூறிவிட்டு விபரீதத் தோற்றங்கள் ஏற்படாமல் இருக்க நிதித்யாஸனத்தை உபதேசிக்கிறார் :-

**अहमेव परं ब्रह्म न चाहं ब्रह्मणः पृथक्।**
**इत्येवं समुपासीत ब्राह्मणो ब्रह्मणि स्थितः।। ३।।**

அஹமேவ பரம் ப்ரஹ்ம ந சாஹம் ப்ரஹ்மண : ப்ருதக் ।
இத்யேவம் ஸமுபாஸீத ப்ராஹ்மணோ ப்ரஹ்மணி ஸ்திதः ।।

**अहं** – நான், **परं ब्रह्म एव** – ப்ரப்ரஹமம்தான். **अहं**– நான், **ब्रह्मणः** – ப்ரஹ்மத்தைக் காட்டிலும், **पृथक्**– வேறாக, **न च** –

இல்லே, इति एवं – என்று இவ்வாறு, ब्राह्मण: – பிராஹ்மணன், ब्रह्मणि स्थित: – ப்ரஹ்மஸ்வரூபத்தில் இருந்துகொண்டு, समुपासीत – தியானம் செய்ய வேண்டும்.

குடத்திற்கும் மண்ணுக்கும் பேதம் அபேதம் இரண்டும் உண்டு என்று மற்ற சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது. அம்மாதிரி பேதாபேதம் ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்கும் கிடையாது, அபேதம் மட்டும்தான், கொஞ்சம் கூடபேதம் கிடையாது என்பதைக் காட்டுவதற்குத்தான் முதலில் நான் ப்ரஹ்மம் என்று கூறிவிட்டு அத்துடன் நிற்காமல் நான் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறு அல்ல என்று தனியாகக் கூறுகிருர். அல்லது 'நான் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறு அல்ல' என்பதை 'நான் பரப்ரஹ்மம்' என்பதன் வியாக் யானமாகக் கொள்ளலாம். அபேதம் என்பதற்கே வேற்றுமை யில்லே என்பதுதான் பொருள். ஜீவன் ப்ரஹ்மம் என்று இரண்டு வஸ்துக்கள் இருந்து இரண்டும் ஒன்ருய் விட்டதாக எண்ணக்கூடாது. வஸ்து ஒன்று தான். அக்ஞானத்தால் ப்ரஹ்மம் மறைந்து ஜீவனுத்தோன்றியது. அக்ஞானம் நீங்கியதும் ஜீவஸ்வரூபம் மறைந்து ப்ரஹ்ம ஸ்வரூபம் விளங்குகிறது. வேறு ஒரு பொருளும் மனதில் தோன்ருமல், ப்ரஹ்மஸ்வரூபமே இடைவிடாமல் எப்பொழுதும் மனதில் தோன்றும்படியாக தியானம் செய்யவேண்டும். இடை விடாமல் ஒரே பொருளே நினேப்பதற்குத்தான் தியானம் என்று பெயர். இந்த நிலேயை அடைந்தவனுக்குத்தான் ப்ராஹ் மண்யம் பூர்ணமாகிறது. 'अथ ब्राह्मण:' *(அத ப்ராஹ்மண :)* *(பிரு. 3-5)* என்று உபநிஷத் இவனே பிராஹ்மணன் என்று கூறுகிறது. பிராஹ்மண்யம் பெற்றதின் பயன் இப்பொழுது தான் நிறைவேறுகிறது *(3)*

*(அ) ப்ரஹ்மத்தின் நிலேயைக் கூறுகிருர் :-*

सर्वोपाधिविनिर्मुक्तं चैतन्यं च निरन्तरम्।
तद्ब्रह्माहमिति ज्ञात्वा कथं वर्णाश्रमी भवेत् ।। ४।।

ஸர்வோபாதிவிநிர்முக்தம் சைதந்யம் ச நிரந்தரம் ।
தத் ப்ரஹ்மாஹமிதி ஞாத்வா கதம் வர்ணாச்ரமீ பவேத் ।।

**सर्वोपाधिविनिर्मुक्तं** - எல்லா உபாதிகளிலிருந்தும் விடுபட்டதும், **चैतन्यं** - சைதன்ய ஸ்வரூபமானதும், **निरन्तरं** - இடைவெளியில்லாததுமான, **तत्** - அந்த, **ब्रह्म** - ப்ரஹ்மம், **अहं** - நான், **इति ज्ञात्वा** - என்று அறிந்துவிட்டு, **वर्णाश्रमी** - வர்ணம் உள்ளவனாகவும் ஆச்ரமம் உள்ளவனாகவும், **कथं** - எப்படி, **भवेत्** - இருப்பான்?

பிராஹ்மண்யம் முதலான வர்ணங்களும், ப்ரஹ்ம சர்யம், முதலான ஆச்ரமங்களும் சரீரத்தையொட்டி ஏற்பட்டவை. எவன் அபிமானத்துடன் சரீராதிகளை நான் என்று எண்ணிக்கொள்கிறானோ, அவனைத்தான் பிராஹ்மணன் என்றும் ப்ரஹ்மசாரி என்றும் கூறலாம். சாஸ்திரத்தில் வர்ணங்களுக்கும் ஆச்ரமங்களுக்கும் விதிக்கப் பட்டுள்ள கட்டுப்பாடுகள் எல்லாம் இவர்களுக்கு உண்டு. அதன்படி நடந்தால் புண்யமும், மீறி நடந்தால் பாபமும், துன்பமும் ஏற்படும். எல்லாவித அபிமானத்தையும் துறந்து, சரீரம் முதலான எல்லா உபாதிகளிலிருந்தும் தன்னை வேறுபடுத்தி எங்கும் நிறைந்த சுத்த சைதன்ய ஸ்வரூபமான ப்ரஹ்மமாக பார்ப்பவன் வர்ணியாகவோ ஆச்ரமியாகவோ ஆகமாட்டான். அவனுக்கு முன்கூறிய கட்டுப்பாடுகள் கிடையாது. நற்கருமங்களைச் செய்வதால் நன்மையோ, தீவினைகளைச் செய்வதால் தீமையோ அவனுக்குக் கிடையாது. அவன் எந்தக் காரியங்களைச் செய்தபோதிலும் அத்துடன் ஸம்பந்தமில்லாததால் அவனுடைய ஞான நிலைக்கு ஒரு குறைவும் ஏற்படாது. இதே விஷயத்தை பிருஹதாரண்யக உபநிஷத்தில் கஹோளப்ராஹ்மணத்தில் (3-5) **स ब्राह्मण: केन स्यात् येन स्यात् तेन ईदृश एव** (ஸ ப்ராஹ்மண: கேந ஸ்யாத் யேந ஸ்யாத் தேந ஈத்ருச ஏவ-அந்த ப்ரஹ்ம ஞானி எவ்விதச் செய்கையுடனும் எந்தவித ஆசாரத்துடனு மிருந்தாலும் அவன் ப்ரஹ்மஞானியே) என்று கூறப்

பட்டிருக்கிறது. ஞானியும் பழைய வாஸனையை அனுஸரித்து நல்வழியில்தான் செல்வான் என்று அங்கு பாஷ்யத்தில் கூறப்பட்டிருக்கிறது. (4)

(அ) ஞானியின் ப்ரஹ்மானந்த நிலையை மாற்ற தேவர்களுக்கும் சக்தி கிடையாது என்பதையும் ஞானம் ஏற்படாதவரை இவன் தேவர்களுக்கு அடிமை என்பதையும் இரு சுலோகங்களால் காட்டுகிறார் :-

अहं ब्रह्मास्मि यो वेद स सर्वं भवति त्विदम्।
नाभूत्या ईशते देवास्तेषामात्मा भवेद्धि सः ।। ५ ।।
अन्योऽसावहमन्योऽस्मीत्युपास्ते योऽन्यदेवताम् ।
न स वेद नरो ब्रह्म स देवानां यथा पशुः ।। ६ ।।

அஹம் ப்ரஹ்மாஸ்மி யோ வேத ஸ ஸர்வம் பவதி த்விதம் ।
நாபூத்யா ஈசதே தேவாஸ்தேஷாமாத்மா பவேத்தி ஸ: ।।
அந்யோஸாவஹமந்யோஸ்மீத்யுபாஸ்தே
யோ ந்யதேவதாம் ।
ந ஸ வேத நரோ ப்ரஹ்ம ஸ தேவா நாம் யதா ப சு: ।।

अहं - நான், ब्रह्म - ப்ரஹ்மமாக, अस्मि - இருக்கிறேன் (என்று) यः - எவன், वेद - அறிந்து கொள்கிறானோ सः - அவன், इदं सर्वं - இது எல்லாமாகவும் भवति - ஆகிறான். देवाः - தேவர்கள் अभूत्यै - (அவன்) ஞானபலனை அடையாமலிருக்கும்படி செய்ய न ईशते - திறமையற்றவர்கள். हि - ஏனெனில், सः - அவன், तेषां - அந்த தேவர்களுக்கு, आत्मा - ஆத்மாவாக, भवेत् - ஆய்விடுவான்.

असौ - அந்த தேவர், अन्यः - (என்னைக்காட்டிலும்) வேறானவர், अहं - நான், अन्यः - (அவரைக்காட்டிலும்) வேறாக, अस्मि - இருக்கிறேன், इति - என்று, यः - எவன், अन्यदेवताम्- தன்னைக்காட்டிலும் வேறான தேவதையை, उपास्ते - ஆராதிக்கிறானோ, स नरः - அந்த மனிதன், ब्रह्म - பிரஹ்மத்தை, न वेद - அறியமாட்டான். सः - அவன், देवानां - தேவர்களுக்கு, यथा पशुः - பசுபோல இருப்பான்.

பிருஹதாரண்யகம் முதல் அத்யாயம் 4வது பிராஹ்மணத்திலுள்ள மந்திரத்தின் கருத்து இந்த இரு சுலோகங்களில் காட்டப்படுகிறது. அதாவது : ஒவ்வொரு மனிதனும் தேவர்களுக்குக் கடன்பட்டே பிறக்கிருன். இந்தக்கடனை, தேவர்களைக் குறித்து யாகம் செய்வதாலும், பூஜை செய்வதாலும் தீர்க்கவேண்டும். யாகத்தில் தேவர்களைக் குறித்து ஹவிஸ்ஸைக் கொடுப்பதாலும், அவர்களைப் பூஜிப்பதாலும் அவர்களுக்கு போகத்தையும் திருப்தியையும் உண்டு பண்ணுகிருன். இது மனிதனின் கடமை. ஸந்தோஷம் அடைந்த அவர்கள் இவனுக்கு போகத்தை அருளுகின்றனர். தேவர்களுக்கு பிரீதி ஏற்படும்படி நடந்து கொள்ளாவிட்டால் கோபம் அடைந்து இடைஞ்சல் செய்வார்கள். ஆரம்பித்த காரியம் நிறைவேருது. செய்த காரியத்தின் பலனும் கிட்டாது. ஆகவே மனிதன் தேவர்கள் விஷயத்தில் பசுவின் நிலையைத தான் அடைகிருன். பசுவானது தன்னை வளர்க்கும் யஜமானனுக்கு பாலைக்கொடுத்து போகத்தை உண்டு பண்ணுகிறது. அவனும் ஸந்தோஷம் கொண்டு அதற்கு உணவும், மற்றும் சௌக்ர்யங்களும் செய்து கொடுக்கிருன். அதிலும் ஒரே யாகத்தில் பல தேவதைகளுக்கு ஹவிஸ்ஸைக் கொடுப்பதால் ஒவ்வொரு மனிதனும் அநேக தேவதைகளுடைய பசுவாக ஆகின்ருன். ப்ரஹ்மஞானம் பெருமல் அக்ஞானத்தால் தன்னை வேருகவும் தேவதையை வேருகவும் எண்ணிக்கொண்டிருக்கும்வரை இந்தப் பசுவின் நிலை மனிதனுக்கு நீங்காது.

இவர்களில் எவனுவது ஒருவன் ஸர்வஸங்க பரித்யாகம் செய்து ஸந்யாஸாச்ரம ஸ்வீகாரம் செய்து கொண்டு ஞான மார்க்கத்தில் செல்வானே ஆகில் பின்னுல் அவன் யாகம் செய்யப்போவதில்லை. அவனிடமிருந்து தேவர்களுக்கு போகம் கிடைக்காது. இது தேவர்களுக்குப் பிடித்தமானது அல்ல. இதற்கு இடம் கொடுக்கமாட்டார்கள். எத்தனையோ இடையூறுகளைச் செய்வார்கள். நூற்றுக்கணக்கான பசுக்களை

உடைய ஒரு மனிதன் தன்னைவிட்டு ஒரு பசு கூட பிரிந்து செல்வதை விரும்பமாட்டான். அப்படியிருக்க பல தேவர் களுக்கு போகத்தைக்கொடுத்துக் கொண்டிருக்கும் மனிதன் தங்களைவிட்டுப் பிரிந்து செல்வதை அவர்கள பொறுத்துக் கொண்டிருப்பார்களா? எத்தனையோ இடையூறுகள் செய்து போகவொட்டாமல் தடுப்பார்க்ள்.

ஆனாலும் இந்த நிலையில் ப்ரஹ்மஞானம் இல்லாததால் பேதபுத்தி இருக்கும். ஸுகதுக்கங்கள் மாறி மாறி வரும். சாச்வதமான ஆனந்தம் இருக்காது. இதுவும் பந்தநிலை தான். எப்படியும் இதை விட்டு மேலே செல்ல வேண்டும். ஆகையால் சிரத்தைடனும பக்தியுடனும் தேவர்களை ஆராதித்து அவர்களுக்கு பிரீதியை உண்டுபண்ணி அவர் களிடமே ஞானம் கிடைக்க அநுக்ரஹிக்கும்படி பிரார்த்திக்க வேண்டும். வேறு பலனைக் கேட்கக்கூடாது. அவர்களும் பிரீதி யுடன், இடையூறு செய்யாமல் உதவி புரிவார்கள். ஞானம் கிடைக்கும் வரை தேவதைகளின் அநுக்ரஹத்தை பிரார்த்திக்க வேண்டும். சிரத்தையுடனும் தேவதானுக்ரஹத்துடனும் தீவிரமான முயற்சிசெய்து ஞானவழியில் சென்று குருவின் அநுக்ரஹத்தால் ஞானத்தை அடைந்து விட்டால் அதன்பின் இவனை தேவர்கள் ஒன்றும் செய்ய முடியாது. இடையூறும் செய்ய முடியாது. ஞானத்தின் பலனை உடனே அடைந்தே தீருவான். யாரும் தடுக்க முடியாது. கர்மாக்களைச் செய்த உடன் பலன் கிடைப்பதில்லை. பின்னால்தான் கிடைக்கும். அங்கு தேவர்கள் விக்நம் செய்யக்கூடும். ஸூர்ய வெளிச்சத்தில் கண்ணைத் திறந்து பார்த்தவுடன் எதிரிலுள்ள பொருள் உடனே விளங்குவதுபோல ஞானம் வந்தவுடனேயே அக்ஞானம் விலகி ப்ரஹ்மாத்மபாவம் ஏற்பட்டுவிடுகிறபடியால் இங்கு விக்நம் செய்வதற்கு இடமில்லை. மேலும் தேவர்களையும் தன் ஸ்வரூபமாகப் பார்க்கும் ஞானியிடம் அவர்கள் ஒன்றும் செய்யமாட்டார்கள். (5-6)

(அ) ஞானியின் அநுபவத்தைக் காட்டுகிறுர் :-

अहमात्मा न चान्योऽस्मि ब्रह्मैवाहं न शोकभाक् ।
सच्चिदानन्दरूपोऽहं नित्यमुक्तस्वभाववान् ।। ७ ।।

அஹமாத்மா ந சாந்யோஸ்மி ப்ரஹ்மைவாஹம்
ந சோகபாக் ।
ஸச்சிதானந்தரூபோஹம் நித்யமுக்தஸ்வபாவவான் ।।

अहं - நான், आत्मा - பிரத்யகாத்மவஸ்து, अन्य: - வேருக; न चास्मि - இல்லை. अहं - நான், ब्रह्मैव- பிரஹ்மமே, न शोकभाक् - சோகத்தை அடைபவனல்ல. अहं - நான், सच्चिदानन्दरूप: - ஸச்சிதானந்தஸ்வரூபி, नित्यमुक्तस्वभाववान् - எப்பொழுதும் விடுபட்ட ஸ்வரூபமுள்ளவன்.

சரீராதிகளை நான் என்று எண்ணும்வரை தான் இஷ்டமான பொருள் தன்னை விட்டுப் பிரியும்பொழுது சோகம் ஏற்படுகிறது. எல்லாமாக விளங்கும் ஸச்சிதானந்த ப்ரஹ்மம் நான் என்ற ஞானம் ஏற்பட்டுவிட்டால் தன்னைத் தவிற வேறு பொருளே இல்லாததால் சோகத்திற்கு இடமில்லை. மேலும் ஸம்ஸார பந்தம் எல்லாம் உண்மையில் அஸங்கமான ஆத்மாவிற்குக் கிடையாது. அது மனத்திற்குத் தான். மனத்துடன் ஒன்ருகச் சேர்ந்திருப்பதால் அக்ஞானத் தால் ஆத்மாவிற்கும் பந்தமிருப்பதாக எண்ணி ஞானம் வந்தவுடன் பந்தம் நீங்கி முக்தி ஏற்பட்டதாக நினைக்கிறுன். அக்ஞானத்தால் இவன் நினைப்பதைத் தவிற உண்மையில் ஆத்மாவில் பந்தமோ, மோக்ஷமோ ஒன்றும் கிடையாது. அது நித்ய முக்தவஸ்து. (7)

(அ) ஞானிக்கு புண்யபாப ஸம்பந்தம் கிடையாது என்று கூறுகிறுர் :-

आत्मानं सततं ब्रह्म संभांव्य विहरन्ति ये ।
न तेषां दुष्कृतं किंचिद्दुष्कृतोत्था न चापद: ।। ८ ।।
आत्मानं सततं ब्रह्म संभाव्य विहरेत्सुखम् ।। ९ ।।

ஆத்மாநம் ஸததம் ப்ரஹ்ம ஸம்பாவ்ய விஹரந்தி யே ।
ந தேஷாம் துஷ்க்ருதம் கிஞ்சித் துஷ்க்ருதோத்தா ந சாபத: ।
ஆத்மாநம் ஸததம் ப்ரஹ்ம ஸம்பாவ்ய விஹரேத் ஸுகம் ।

सततं - எப்பொழுதும், आत्मानं - தன்னை, ब्रह्म - ப்ரஹ்மமாக, संभाव्य - எண்ணி, ये- எவர்கள், विहरन्ति- ஸஞ்சரிக்கின்றனரோ, तेषां - அவர்களுக்கு, दुष्कृतं - பாபம், किंचित् - கொஞ்சமும், न - கிடையாது, दुष्कृतोत्था: - பாபங்களிலிருந்து உண்டாகும், आपद: च - துன்பங்களும், न - கிடையாது.

(ஆகையால்) आत्मानं- தன்னை, सततं- எப்பொழுதும், ब्रह्म - ப்ரஹ்மஸ்வரூபமாக, संभाव्य - எண்ணி, सुखं - ஆனந்தமாக, विहरेत् - ஸஞ்சரிக்கவேண்டும்.

இந்த சுலோகத்தில் ஜீவன்முக்தனிடம் ஆகாமிகர்மா ஒட்டுவதில்லை என்பதைக் கூறுகிறார். சரீராதிகளில் அபிமானம் கொண்டு 'நான் செய்கிறேன்' என்ற எண்ணத்துடன் செய்பவனுக்குத்தான் அவன் செய்யும் கர்மாக்களால் பாபம் ஏற்பட்டு அதன் மூலம் துன்பம் ஏற்படுகிறது. ஞானம் அடைந்துள்ள ஜீவன்முக்தனுக்கு சரீராபிமானம் இல்லை. ப்ரஹ்மத்தையே தன் ஸ்வரூபமாகப் பார்க்கிறான். சரீரம் செய்யும் காரியத்தில் நான் செய்கிறேன் என்ற எண்ணம் இல்லை. ஆதலால் அவன் உலகில் ஸஞ்சரிக்கும்பொழுது ஏதாவது சாஸ்திர விருத்தமான காரியம் செய்தபோதிலும் அதனால் பாபம் ஏற்படுவதில்லை. பாபபலனான துன்பமும் அவனுக்குக் கிடையாது. இந்த சுலோகத்தில் दुष्कृतं (துஷ்க்ருதம்) என்பதால் புண்யத்தையும் आपद: - (ஆபத:) என்பதால் ஸம்பத்தையும் பொருளாகக்கொள்ள வேண்டும். ப்ரஹ்மானந்தத்தை அநுபவிக்கும் ஞானிக்கு வைஷயிகஸுகமும் துன்பம் தான். அதற்கு ஸாதனமான புண்யமும் பாபமாகத்தான் ஆகும். ஞானம் அடைந்த பிறகு செய்யும் கர்மாக்களால் இன்பமோ துன்பமோ ஒன்றும் ஏற்படுவதில்லை என்று கருத்து. (8-9)

(அ) ப்ரஹ்மத்யானத்தின் பெருமையைக் காட்டுகிறுர் :-

**क्षणं ब्रह्माहमस्मीति यः कुर्यादात्मचिन्तनम् ।**
**तन्महापातकं हन्ति तमः सूर्योदयो यथा ।। १० ।।**

க்ஷணம் ப்ரஹ்மாஹமஸ்மீதி ய: குர்யாதாத்மசிந்தனம் ।
தன் மஹாபாதகம் ஹந்தி தம: ஸூர்யோதயோ யதா ।।

**अहं** – நான், **ब्रह्म अस्मि** – ப்ரஹ்மமாக இருக்கிறேன். **इति** – என்று, **क्षणं** – சிறிது நேரம், **यः** – எவனொருவன், **आत्म चिन्तनं** – ஆத்மத்யானத்தை, **कुर्यात्**– செய்வானேயாகில், **सूर्योदयः** – ஸூர்யனின் உதயம், **यथा तमः** – இருளை நீக்குவது போல், **तत्** – அந்த ப்ரஹ்மத்யானம், **महापातकं** – மஹா பாபத்தை, **हन्ति** – அழித்துவிடுகிறது.

ஏதோ ப்ரதிபந்தக வசத்தால் ஞானம் வராதபோதிலும் சிறிது நேரமாவது உலகத்தையும் தன்னையும் மறந்து முன் சொன்ன விதமாக நான் ப்ரஹ்மஸ்வரூபம் என்று ஆத்ம ஸ்வரூபத்தை தியானம் செய்தால் இடைஞ்சலாக உள்ள மஹாபாபம் விலகிவிடும். பிறகு ஞானமும் ஏற்படும். (10)

(அ) ஜீவப்ரஹ்மைக்யத்தைக் கூறிவிட்டு அத்வைத ஸித்திக்காக பிரபஞ்சஸிருஷ்டி பிரளயங்களைக் கூறுகிறுர்.

अज्ञानादब्रह्मणो जातमाकाशं बुदूबुदोपमम् ।
आकाशाद्वायुरुत्पन्नो वायोस्तेजस्ततः पयः ।। ११ ।।
अद्भ्यश्च पृथिवी जाता ततो व्रीहियवादिकम् ।
पृथिव्यप्सु पयो वह्नौ वह्निर्वायौ नभस्यसौ ।
नभोऽप्यव्याकृते तच्च शुद्धे शुद्धोऽस्म्यहं हरिः ।। १२ ।।

அக்ஞாநுத் ப்ரஹ்மணோ ஜாதமாகாசம் புத்புதோபமம் ।
ஆகாசாத் வாயுருத்பந்நோ வாயோஸ்தேஜஸ்தத: பய: ।।
அத்ப்யச்ச ப்ருதிவீ ஜாதா ததோ வ்ரீஹியவா திகம் ।
ப்ருதிவ்யப்ஸு பயோ வஹ்நௌ வஹ்நிர் வாயௌ நப ஸ்யஸௌ ।
நபோப்யவ்யாக்ருதே தச்ச சுத்தே சுத்தோஸ்ம்யஹம் ஹரி: ।।

ब्रह्मण: - ப்ரஹ்மத்திலிருந்து, अज्ञानात् - மாயையால், बुद्बुदोपमं - நீர்க்குமிழிக்கு ஒப்பான, आकाशं - ஆகாசம், जातं - உண்டானது, आकाशात् - ஆகாசத்திலிருந்து, वायु:- வாயு, .उत्पन्न: - உண்டானது. वायो: - வாயுவிலிருந்து , तेज: - தேஜஸ்ஸு-ம், तत: - அதிலிருந்து, पय: - ஜலமும் (உண்டானது) अद्भ्य: - ஜலத்திலிருந்து, पृथिवी च - பிருதி வியும், जाता - உண்டானது. तत: - அதிலிருந்து, व्रीहियवादिकं - நெல், யவம் முதலானவை (உண்டானது).

पृथिवी - பூமி, अप्सु - ஜலத்திலும், पय: - ஜலம், वह्नौ - தேஜஸ்ஸிலும், वह्नि: - தேஜஸ், वायौ - வாயுவிலும், असौ - அந்த வாயு, नभसि - ஆகாசத்திலும், नभोपि - ஆகாசமும், अव्याकृते - அவ்யாக்ருதம் என்ற மாயையிலும், तच्च - அது வும், शुद्धे - சுத்தமான ப்ரஹ்மத்திலும் (லயம் அடைகிறது) शुद्ध: - (கடைசியில் மிஞ்சிய) சுத்தமான, हरि: - ஹரியாக, अहं - நான், अस्मि -இருக்கிறேன்.

இதுவரையிலும் ஜீவனும் ப்ரஹ்மமும் ஒரே தத்வம் தான் என்பது கூறப்பட்டது. இதனுல் சேதனம் ஒன்றுதான் என்பது தெரியவந்தது. இதனுல் மட்டும் அத்வைத நிலேயோ, அபயமோ, பரமானந்த நிலேயோ பூர்ணமாக ஏற்படாது. ஜடபிரபஞ்சம் நம்மைக்காட்டிலும் வேருக இருக்கும்வரை நமக்கு பயம் விலகாது. அதற்காக பிரபஞ்சத்தின் ஸ்வரூபத்தை விளக்கிக் கூறுகிருர். பரமாத்ம ஸ்வரூபத்தி லிருந்து மாயையால் முதலில் தோன்றியது ஆகாசம். பிறகு வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவி என்ற முறையில் பிரபஞ்சம் உண்டாயிருக்கிறது. கடைசியில் பிருதிவி ஜலத்தில், ஜலம் தேஜஸ்ஸில், தேஜஸ் வாயுவில், வாயு ஆகாசத்தில், ஆகாசம் மாயையில், மாயை சுத்த பிரஹ்மத்தில் என்ற முறையில் லயத்தை அடைகிறது. ஆகவே பிரபஞ்சம் ப்ரஹ்மத்திலிருந்து உத்பத்தியாகி அதிலேயே லயமடைவதால் ப்ரஹ்மம் உபாதான காரணம் ஆகிறது. காரணத்தைக்காட்டிலும் காரியம் வேறு அல்ல, நீரில் தோன்றும் குமிழி நீரிலேயே

உண்டாகி அதிலேயே இருந்து அதிலேயே மறைவதால் அது நீரைக்காட்டிலும் வேறு அல்ல. அதுபோல மாயையால் ப்ரஹ்மத்திலிருந்து தோன்றும் பிரபஞ்சமும் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறு அல்ல. அந்த சுத்த ப்ரஹ்மம் நான் தான். ஆகையால் என்னைத்தவிற இரண்டாவது பொருள் சேதனமோ ஜடமோ ஒன்றும் உண்மையில் இல்லை. நான் அத்வைத வஸ்து. இவ்வித ஞானம் உள்ளவனுக்கு இரண்டாவது பொருள் இல்லாததால் பயம் ஏற்படாது. ப்ரஹ்மானந்த நிலையை அடைகிறான். (11-12)

(அ) விதிமுகமாகவும் நிஷேத முகமாகவும் ப்ரஹ்மாநு ஸந்தானம் செய்யும் முறையை ஐந்து சுலோகங்களால் காட்டுகிறார் :-

अहं विष्णुरहं विष्णुरहं विष्णुरहं हरिः ।
कर्तृभोक्त्रादिकं सर्वं तदविद्योत्थमेव च ।। १३ ।।

அஹம் விஷ்ணுரஹம் விஷ்ணுரஹம் விஷ்ணுரஹம் ஹரி:
கர்த்ருபோக்த்ராதிகம் ஸர்வம் ததவித்யோத்தமேவ ச ।।

अहं - நான், विष्णुः - விஷ்ணு (எங்கும் நிறைந்தவன்) अहं - நான், विष्णुः - விஷ்ணு, अहं - நான், विष्णुः - விஷ்ணு, अहं - நான், हरिः - ஹரி, कर्तृभोक्त्रादिकं सर्वं - செய்கிறவன், அனுபவிக்கிறவன் என்பதெல்லாம், तदविद्योत्थमेव - அவனுடைய அவித்யையால் ஏற்பட்டதே.

விஷ்ணு என்றும் ஹரி என்றும் கூறப்படும் ப்ரஹ்மம் நான் தான் என்பதை மூன்றுதடவை கூறி உறுதிப்படுத்து கிறார். அவித்யையால் தன்னை ப்ரஹ்மஸ்வரூபமாகத் தெரிந்து கொள்ளாமல் கர்த்தாவாகவும் (காரியங்களைச் செய்பவனாகவும்) போக்தாவாகவும் (அதன் பயனை அநுபவிப்பவனாகவும்) அறியாமையால் எண்ணுகின்றனர். இவைகள் எல்லாம் புத்தியைச் சேர்ந்தவை. புத்தியுடன் ஒன்றாகி அதையே நான் என்று எண்ணுவதால் இந்த விபரீத ஞானம்

ஏற்பட்டிருக்கிறது. அக்ஞானம் நீங்கி புத்தியைக் காட்டிலும் வேருக தன்னை அறிந்தவன் கர்த்தாவாகவும் போக்தாவாகவும் எண்ணமாட்டான். அகண்ட ஸச்சிதானந்த ப்ரஹ்மமாகவே நினைப்பான். (13)

अच्युतोऽहमनन्तोऽहं गोविन्दोऽहमहं हरिः ।
आनन्दोऽहमशेषोऽहमजोऽहममृतोऽस्म्यहम् ।। १४ ।।

அச்யுதோஹமநந்தோஹம் கோவிந்தோஹமஹம் ஹரி: ।
ஆநந்தோஹமசேஷோஹமஜோஹமம்ருதோஸ்ம்யஹம் ।।

अहं - நான், अच्युतः - அச்யுதன் (தன் நிலையிலிருந்து வழுவாதவன்) अहं - நான், अनन्तः - அனந்தன் (தேசம், காலம், வஸ்து என்ற மூன்று எல்லைகளும் அற்றவன்) अहं - நான், गोविन्दः - கோவிந்தன், अहं - நான், हरिः - ஹரி, अहं - நான், आनन्दः - ஆனந்தம், अशेषः - எல்லாம், अहं - நான், अहं - நான், अजः - பிறப்பு அற்றவன், अहं - நான், अमृतः - மரணம் இல்லாதவனுக अस्मि - இருக்கிறேன். (14)

नित्योऽहं निर्विकल्पोऽहं निराकारोऽहमव्ययः ।
सच्चिदानन्दरूपोऽहं पञ्चकोशातिगोऽस्म्यहम् ।। १५ ।।

நித்யோஹம் நிர்விகல்போஹம் நிராகாரோஹமவ்யய: ।
ஸச்சிதானந்தரூபோஹம் பஞ்சகோசாதிகோऽஸ்ம்யஹம் ।।

अहं - நான், नित्यः - பிறப்பு இறப்பு அற்றவன் (எப்பொழுதும் இருப்பவன்) अहं - நான், निर्विकल्पः - வேற்றுமை அற்றவன், अहं - நான், निराकारः - உருவமற்றவன், अव्ययः - குறைவு அற்றவன். अहं- நான், सच्चिदानन्दरूपः - ஸத்தாயும் சித்தாயும் ஆனந்தமாகவும் இருப்பவன். अहं - நான், पञ्चकोशातिगः - அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஜ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் ஐந்து கோசங்களுக்கும் அப்பாற்பட்டவனுக, अस्मि - இருக்கிறேன் (15)

अकर्ताऽहमभोक्ताऽहमसंगः परमेश्वरः ।
सदा मत्सन्निधानेन चेष्टते सर्वमिन्द्रियम् ।। १६ ।।

அகர் தாஹமபோக்தாஹமஸங்க: பரமேச்வர: ।
ஸதா மத்ஸந்நிதாநேந சேஷ்டதே ஸர்வமிந்த்ரியம் ।।

**अहं** - நான், **अकर्ता** - (ஒன்றையும்) செய்யாதவன், **अहं** - நான், **अभोक्ता** - அநுபவியாதவன், (நான்) **असंगः** - ஒன்றிலும் ஒட்டாத, **परमेश्वरः** - பரமேசுவரன், **सदा** - எப்பொழுதும் **मत्सन्निधानेन** - நான் அருகில் இருப்பதால், **सर्वं इन्द्रियं** - எல்லா இந்திரியமும், **चेष्टते** - வேலைசெய்கிறது.

ஒரு காரியத்தைச் செய்வதற்கும் அதன் பயனை அநுபவிப்பதற்கும் பிறவஸ்துவுடன் ஸம்பந்தம் இருக்க வேண்டும். ஆத்மா ஒரு வஸ்துவுடனும் ஸம்பந்தப் படாததால் அது கர்த்தாவும் அல்ல, போக்தாவும் அல்ல. ஆனாலும் ஆத்மா இருப்பதால்தான் எல்லாம் அதனதன் வேலையைச் செய்கிறது. காந்தத்தின் அருகில் இரும்பு அசைவதுபோல் ஆத்ம ஸந்நிதியில் இந்திரியங்கள் வேலை செய்கின்றன. ஆத்ம சக்தியால்தான் கண் பார்க்கிறது, காது கேட்கிறது. மற்ற இந்திரியங்களும் அதனதன் வேலைகளைச் செய்கின்றன. இதைக்கொண்டு ஆத்மாவே செய்வதாகத் தவறுதலாக எண்ணிவிடுகிறோம். காந்தம்போல ஆத்மா இருக்கிறது என்பதைத் தவிற இந்திரியங்களின் காரியங்களில் அதற்கு ஒருவித ஸம்பந்தமும் இல்லை. அது அஸங்கம். (16)

आदिमध्यान्तमुक्तोऽहं न बद्धोऽहं कदाचन ।
स्वभावनिर्मलः शुद्धः स एवाहं न संशयः ।। १७ ।।

ஆதிமத்யாந்தமுக்தோஹம் ந பத்தோஹம் கதாசந ।
ஸ்வபாவ நிர்மல: சுத்த: ஸ ஏவாஹம் ந ஸம்சய: ।।

**अहं** - நான், **आदिमध्यान्तमुक्तः** - ஆதி, மத்யம், முடிவு மூன்றும் அற்றவன், **अहं** - நான், **कदाचन** - ஒரு

பொழுதும், न बद्धः - கட்டுப்பட்டவனில்லை. अहं - நான், स्वभावनिर्मलः - இயற்கையிலேயேஅழுக்கு அற்றவனும், शुद्धः - பரிசுத்தனுமான, स एव - அந்த பரமாத்மாவே. न संशयः - ஸந்தேஹமில்லை. *(17)*

*(அ) இதுவரை ப்ரஹ்ம ஸ்வரூபத்தை விளக்கி ஞானி ப்ரஹ்மானுஸந்தானம் செய்யும் முறையையும் காட்டினர். இனி ஞானம் பெருதவனும் அந்த நிலையை அடைவதற்கு உபாயம் கூறுகிருர்:-*

ब्रह्मैवाहं न संसारी मुक्तोऽहमिति भावयेत्।
अशक्नुक्न् भावयितुं वाक्यमेतत्सदाऽभ्यसेत् ।। १८ ।।
यदभ्यासेन तदभावो भवेद्भ्रमरकीटवत् ।
अत्रापहाय सन्देहमभ्यसेत्कृतनिश्चयः।। १९ ।।

*ப்ரஹ்மைவாஹம் ந ஸம்ஸாரீ முக்தோஹமிதி பாவயேத் ।*
*அசக்நுவன் பாவயிதும் வாக்யமேதத் ஸதாப்யஸேத் ।।*
*யதப்யாஸேந தத்பாவோ பவேத் ப்ரமரகீடவத் ।*
*அத்ராபஹாய ஸந்தேஹம் அப்யஸேத் க்ருதநிச்சய: ।।*

*(ஞானம் பெருதவரும்)* अहं - நான், ब्रह्मैव - ப்ரஹ்மமே, न संसारी - ஸம்ஸாரி அல்ல, अहं - நான், मुक्तः - (எல்லா பந்தங்களிலிருந்தும்) விடுபட்டவன், इति - என்று, भावयेत् - த்யானம் செய்யவேண்டும் भावयितुं - த்யானம் செய்யவதற்கு, अशक्नुवन् - ஸாமர்த்தியம் இல்லாதவன், एतत् वाक्यं- இந்த வாக்யத்தை, सदा - எப்பொழுதும், अभ्यसेत् - திருப்பிச் சொல்லவேண்டும்.

यत् - ஏனெனில், अभ्यासेन - அப்யாஸம் செய்வதால், भ्रमरकीटवत्- குளவியால் கொட்டப்பட்ட புழுவுக்குப்போல், तद्भावः - அந்த ப்ரஹ்மபாவம், भवेत् - ஏற்படும். अत्र- இவ்விஷயத்தில், सन्देहं- ஸம்சயத்தை, अपहाय - விட்டு, कृतनिश्चयः - உறுதி செய்துகொண்டு, अभ्यसेत् - அப்யாஸம் செய்யவேண்டும்.

ஆரம்ப தசையில் அர்த்தாநுஸந்தானத்துடன் **'ब्रह्मैवाहं न संसारी मुक्तोहं'** (ப்ரஹ்மைம்வாஹம் ந ஸம்ஸாரீ முக்தோऽஹம்) என்ற வாக்யத்தை எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருக்கவேண்டும். இந்த பிரகரணம் முழுவதையுமே அடிக்கடி சொல்லலாம். பிறகு தன் ஸ்வரூபத்தை சரீரம் முதலியவைகளைக் காட்டிலும் வேருகவும் லௌகிக தர்மங்கள் ஒன்றும் தன்னிடம் இல்லாததாகவும் தான் ஒன்றிலும் ஸம்பந்தப்படாததாகவும் எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்க வேண்டும். இவ்விதம் அப்யாஸம் செய்துகொண்டு வந்தால் நிச்சயம் அதே நிலையை அடையலாம். இதில் சிறிதும் ஐயம் வேண்டாம். அடிக்கடி தன்னைக் கொட்ட வரும் குளவியை எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருப்பதால் ஒரு புழு குளவியாகவே ஆய்விடுவதில்லையா? (18-19)

(அ) இவ்வித அப்யாஸத்தால் ஏற்படும் வேறு சில பலன்களைக் கூறுகிறுர் :-

ध्यानयोगेन मासैकाद्ब्रह्महत्यां व्यपोहति ।
संवत्सरं सदाऽभ्यासात्सिद्ध्यष्टकमवाप्नुयात् ।
यावज्जीवं सदाऽभ्यासाज्जीवन्मुक्तो भवेद्यतिः ।। २० ।।

த்யாநயோகேந மாஸைகாத் ப்ரஹ்மஹத்யாம் வ்யபோஹதி ।
ஸம்வத்ஸரம் ஸதாப்யாஸாத் ஸித்யஷ்டகமவாப்நுயாத் ।।
யாவஜ்ஜீவம் ஸதாப்யாஸாத் ஜீவன்முக்தோ பவேத் யதி: ।।

**मासैकात्** - ஒருமாத காலம், **ध्यानयोगेन** - இம்மாதிரி த்யாநம் செய்வதால், **ब्रह्महत्यां** - ப்ரஹ்மஹத்தி என்ற பாபத்தை **व्यपोहति** - போக்கடிக்கிறுன், **संवत्सरं** - ஒரு வருஷ காலம், **सदा** - எப்பொழுதும், **अभ्यासात्** - அப்யாஸம் செய்வதால், **सिध्यष्टकं** - எட்டு ஸித்திகளையும், **अवाप्नुयात्** - அடைவான், **यावज्जीवं** - உயிருள்ளவரை, **सदा** - எப்பொழுதும், **अभ्यासात्** - அப்யாஸம் செய்வதால், **यतिः** - யதியானவன், **जीवन्मुक्तः** - ஜீவன்முக்தனுக, **भवेत्** - ஆவான்.

சரீராதிகளைக் காட்டிலும் வேறுபட்டதாகவும், ப்ரஹ்ம ஸ்வரூபமாகவும், தியானம் செய்து வந்தால் ஒரு மாதத்தில் அவனிடமுள்ள ப்ரஹ்மஹத்தியோ, அதற்குச் சமமான மற்ற பாபங்களோ விலகிவிடும். பரிசுத்தனாகி விடுவான். மேலும் அப்யாஸம் செய்துவந்தால் அணிமா, மஹிமா, லகிமா, கரிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என்னும் எட்டு ஸித்திகளும் இவனுக்கு ஏற்பட்டுவிடும். அவைகளில் ஆசை கொள்ளாமல் மேலும் அப்யாஸம் செய்து வந்தால் ஞானத்திற்கு இடைஞ்சலாக உள்ள பாபங்களும், காமம் முதலான மனத்தின் தோஷங்களும் விலகி குருவின் உபதேசம் மனத்தில் பதிந்து அநுபவத்திற்கு வரும். நான் ப்ரஹ்மம் என்பதை நேரில் காண்பான். முக்தனாகவே ஆகிவிடுவான். (20)

(அ) 15வது சுலோகத்தில் 'पञ्चकोशातिग:' (பஞ்ச கோசாதிக:) ஐந்து கோசங்களுக்கும் அப்பால்பட்டவன் என்று கூறியுள்ளதை விளக்கும் முறையில் சரீரத்தில் அடங்கியுள்ள பொருள் ஒவ்வொன்றும் ஆத்மாவல்ல என்பதை உபதேசிக்கிறார்:-

नाहं देहो न च प्राणो नेन्द्रियाणि तथैव च ।
न मनोऽहं न वुद्धिश्च नैव चित्तमहंकृतिः ।। २१ ।।
नाहं पृथ्वी न सलिलं न च वह्निस्तथाऽनिलः ।
न चाकाशो न शब्दश्च न च स्पर्शस्तथा रसः ।। २२ ।।
नाहं गन्धो न रूपं च न मायाऽहं न संसृतिः ।
सदा साक्षिस्वरूपत्वाच्छिव एवास्मि केवल : ।। २३ ।।

நாஹம் தேஹோ ந சப்ராணோ நேந்த்ரியாணி ததைவ ச ।
ந மனோஹம் ந புத்திச்ச நைவ சித்தமஹங்க்ருதி: ।।
நாஹம் ப்ருத்வீ ந ஸலிலம் ந ச வஹ்நிஸ்ததாநில: ।
ந சாகாசோ ந சப்தச்ச ந ச ஸ்பர்சஸ்ததா ரஸ: ।।
நாஹம் கந்தோ ந ரூபம் ச ந மாயாஹம் ந ஸம்ஸ்ருதி: ।
ஸதா ஸாக்ஷிஸ்வரூபத்வாத்சிவ ஏவாஸ்மி கேவல : ।।

अहं - நான், न देह: - (ஸ்துல) சரீரமல்ல. न च प्राण: - ப்ராணவாயுவும் அல்ல. तथैव - அப்படியே, नेन्द्रियाणि च - இந்திரியங்களும் அல்ல. अहं - நான், न मन: - மனம் அல்ல. न बुद्धिश्च - புத்தியும் அல்ல. नैव चित्तं अहंकृति: - சித்தமும் அல்ல, அஹங்காரமும் அல்ல. अहं - நான், न पृथ्वी - பிருதிவி என்னும் பூதம் அல்ல. न सलिलं- ஜலம் அல்ல. न च वह्नि: - தேஜஸ்ஸூம் அல்ல, तथा - அவ்விதமே, (न) अनिल: - வாயு அல்ல, न च आकाश: - ஆகாசமும் அல்ல. न शब्दश्च - சப்த மும் அல்ல. न च स्पर्श: - ஸ்பர்சமும்அல்ல, तथा- அவ்வாறே, रस:(न) - ரஸமும் அல்ல, अहं - நான், न गन्ध: - வாசனை அல்ல, न रूपं च - ரூபமுமல்ல, अहं - நான், न माया - மாயை அல்ல. न संसृति: - ஸம்ஸாரம் அல்ல. सदा - எப்பொழுதும் साक्षिस्वरूपत्वात् - ஸாக்ஷி ஸ்வரூபமாயிருப்பதால், केवल: - தனிப்பட்ட, शिव एव - சிவஸ்வரூபமாகவே, अस्मि - இருக்கிறேன்.

இந்த மூன்று சுலோகங்களில், அக்ஞானத்தால் நான் என்று எண்ணிக்கொண்டிருக்கும் பொருள்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியாகக் காட்டி ஆத்மா அல்ல என்று விலக்கி கடைசியில் மிஞ்சுகின்ற பரப்ரஹ்மமே ஆத்மா என்று உபதேசிக்கிறுர் ஸாதாரணமாக எல்லோரும் சரீரத் தையே நான் என்று வியவஹாரம் செய்கிறோம். இந்த சரீரத்தை அன்னமயம், பிராணமயம், மனோமயம் விஞ்ஞான மயம், ஆனந்தமயம், என்று ஐந்து கோசங்களாக பிரித்திருக் கிறார்கள். இதையே ஸ்துல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம், காரண சரீரம் என்று மூன்று விதமாகவும் பிரித்துக் கூறுவதுண்டு. அன்னத்திலிருந்து உண்டாகி அன்னத்தாலேயே வளர்ந்து முடிவில் அழிந்துபோகும் ரக்தம், மாம்ஸம், அஸ்தி, தோல் முதலியவைகள் அடங்கிய ஸ்துல சரீரம் தான் அன்னமய கோசம் எனப்படும். அன்னமயகோசம்தான் ஸ்துல சரீரம் ஆகும். வாக், கை, கால், பாயு, உபஸ்தம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்களும், பிராணன் அபானன், வியானன்,

உதானன், ஸமானன், என்ற ஐந்து பிராணன்களும் சேர்ந்து பிராணமய கோசம் எனப்படும். கண், காது, மூக்கு, நாக்கு, த்வக் என்ற ஐந்து ஞானேந்திரியங்களும் மனமும் சேர்ந்து மனோமயகோசம் எனப்படும். ஞானேந்திரியங்களுடன் கூடிய புத்தி விக்ஞானமய கோசமாகும். இந்த மூன்று கோசங்களும் சேர்ந்து ஸூக்ஷ்ம சரீரம் என்று பெயர். இந்த இரண்டு சரீரங்களிலும் பஞ்ச பூதங்களின் ஸூக்ஷ்மாம்சமும் ஸ்துலாம்சமும் சேர்ந்திருக்கிறது. அவித்யை காரண சரீரம். அதுவே ஆனந்தமயகோசம். ஒரே அந்தக்கரணம், விஷயத்தைப் பற்றின எண்ணம் முதலில் ஸாமான்யமாக ஏற்படும் பொழுது மனம் என்றும், தீர்மானிக்கும்பொழுது புத்தி என்றும் அபிமானம் கொள்ளும் பொழுது அஹங்காரம் என்றும் தன்னுடையதாக நினைக்கும் பொழுது சித்தம் என்றும் பெயர் அடைகிறது. ஐந்து கோசங்களிலும் மூன்று சரீரங்களிலும் உள்ள ஒவ்வொன்றையும், நான் தனியாக இருந்து கொண்டு அறிந்துகொள்கிறேன். என்னால் அவை அறியப் படுகின்றன. இவைகளையும் இவை செய்யும் காரியங்களையும் ஸாக்ஷியாக இருந்து பார்க்கிறேன். அறிபவனைக்காட்டிலும் அறியப்படும் பொருள் வேறாகத் தான் இருக்கமுடியும். ஆகவே இவைகளில் ஒன்றும் நான் அல்ல. நான் இவைகளைக் காட்டிலும் வேறு. உலகில் உள்ள பொருள்கள் எல்லாவற்றையும் நான் அல்ல என்று விலக்கிவிட்டால் கடைசியில் மிஞ்சுவது **'शान्तं शिवमद्वैतं'** *(சாந்தம் சிவம் அத்வைதம்)* என்று மாண்டுக்ய உபநிஷத்தில் காட்டிய பரிசுத்தமான சைதன்யமே. அதுவே நான். **'तदेकोऽवशिष्टः शिवः केवलोहं'** *(ததேகோவசிஷ்ட: சிவ: கேவலோஹம்)* என்று தசச்லோகியில் கூறியமுறை இங்கும் காணப்படுகிறது. *(21-23)*

*(அ) தன்னையே ஜகத்காரண வஸ்துவாக அனுஸந்தானம் செய்கிறார்:-*

**मय्येव सकलं जातं मयि सर्वं प्रतिष्ठितम् ।**
**मयि सर्वं लयं याति तद्ब्रह्मास्म्यहमद्वयम् ।। २४ ।।**

மய்யேவ ஸகலம் ஜாதம் மயி ஸர்வம் ப்ரதிஷ்டிதம் ।
மயி ஸர்வம் லயம் யாதி தத் ப்ரஹ்மாஸ்ம்யஹமத்வயம் ।।

**सकलं** - எல்லாம், **मय्येव** - என்னிடத்திலேயே, **जातं** - உண்டானது. **सर्वं** - எல்லாம், **मयि** - என்னிடம், **प्रतिष्ठितम्** - நிலைத்து நிற்கிறது. **मयि** - என்னிடம், **सर्वं** - எல்லாம், **लयं याति** - மறைந்துபோகிறது. **तत्** - ஆகையால், **अहं** - நான், **अद्वयं** - அத்விதீயமான, **ब्रह्मास्मि** - ப்ரஹ்மமாக இருக்கிறேன்.

முன்னால் ப்ரஹ்மத்திலிருந்து ஆகாசம் முதலான பிரபஞ்சம் முழுவதும் உண்டாவதையும் ப்ரஹ்மத்திலேயே மறைந்துபோவதையும் குறிப்பிட்டார். அந்த ப்ரஹ்மமே நான் என்றும், வேறான சரீராதிகள் நான் அல்ல என்றும் எப்பொழுதும் அநுஸந்தானம் செய்து ப்ரஹ்மாநுபவத்தையடைந்த ஞானி தன்னையே காரண ப்ரஹ்மமாக நினைப்பதால் தன்னிடமிருந்தே பிரபஞ்சம் உண்டாவதாகவும் தன்னிடமே நிலைத்து, முடிவில் தன்னிடமே ஒடுங்குவதாகவும் காண்கிறான்.

ஆகையினால் எல்லாவற்றிற்கும் ஆத்மாவே காரணம், காரணத்தைக்காட்டிலும் கார்யம் வேறு அல்ல என்பதை உலகில் பார்த்திருக்கிறோம். மண்ணிலே தோன்றி மண்ணிலே இருந்து மண்ணிலே மறையும் குடம் மண்ணைக் காட்டிலும் வேறு இல்லை அல்லவா. பெயரும் உருவமும் தான் புதிதாக ஏற்பட்டதே தவிர அதே மண்தான் குடமாக காக்ஷியளிக்கிறது. அதுபோல ஆத்மாவில் தோன்றி, அதிலேயே இருந்து ஆத்மாவிலேயே மறையும் பிரபஞ்சமும் ஆத்மாவைத் தவிர வேறு அல்ல. ஆத்மாதான் ப்ரஹ்மம். வியவஹாரதசையில் எத்தனையோ வேற்றுமைகள் இருந்த போதிலும் அத்வைத ப்ரஹ்மம்தான் உண்மையானது. (24)

(அ) கடைசியாக ப்ரஹ்மஸ்வரூபாநுசிந்தன முறையை சுருக்கிக் காட்டுகிறார்.

सर्वज्ञोऽहमनन्तोऽहं सर्वेशः सर्वशक्तिमान् ।
आनन्दः सत्यबोधोऽहमिति ब्रह्मानुचिन्तनम् ।। २५ ।।

ஸர்வக்ஞோஹமநந்தோஹம் ஸர்வேச: ஸர்வசக்திமான் ।
ஆநந்த: ஸத்யபோதோஹம் இதி ப்ரஹ்மாநுசிந்தனம் ।।

**अहं** – நான், **सर्वज्ञः** – எல்லாம் அறிந்தவன், **अहं** – நான், **अनन्तः** – பரிச்சேதம் (எல்லை) அற்றவன், **सर्वेशः** – எல்லாவற்றையும் அடக்கி ஆள்பவன். **सर्वशक्तिमान्** – எல்லாச் சக்திகளுடன் கூடியவன். **अहं** – நான், **आनन्दः** – ஆனந்தரூபி, **सत्यबोधः** – ஸத்தாகவும் சித்தாகவும் இருப்பவன், **इति** – என்பது, **ब्रह्मानुचिन्तनम्** – ப்ரஹ்மஸ்வரூபத்தை அநு ஸந்தானம் செய்யும் முறை.

ஸகுணமான ஈசுவரனும் நிர்குணமான ப்ரஹ்மமும் நான் தான் என்று கூறுகிறுர். எங்கும் இருந்து எல்லாம் அறிந்து, எல்லாச் சக்திகளுடன் எல்லாவற்றையும் அடக்கி ஆள்பவர் ஈசுவரன். மாயையுடன் சேர்ந்த நிலையில்தான் இவை ஏற்படும். இவர் ஸகுணமூர்த்தி. இவரும் என்னைத் தவிற வேறில்லை. மாயை விலகிவிட்டால் மிஞ்சுவது ஸச்சிதானந்த ப்ரஹ்மம். அதுவும் நான்தான். இவ்வாறு ப்ரஹ்மா நுசிந்தனம் செய்யவேண்டும். எது உண்மை, எது பொய் என்பதை சுட்டிக் காட்டுகிறுர். *(25)*

अयं प्रपञ्चो मिथ्यैव सत्यं ब्रह्माहमव्ययम् ।
अत्र प्रमाणं वेदान्ता गुरवोऽनुभवस्तथा ।। २६ ।।

அயம் ப்ரபஞ்சோ மித்யைவ ஸத்யம் ப்ரஹ்மாஹமவ்யயம் ।
அத்ர ப்ரமாணம் வேதாந்தா குரவோநுப்வஸ்ததா ।।

**अयं** – இந்த, **प्रपंचः** – பிரபஞ்சம், **मिथ्यैव** – பொய்யே, **अहं** – நான், **सत्यं** – உண்மையானதும், **अव्ययं** – அழி வற்றதுமான, **ब्रह्म** – ப்ரஹ்மம். **अत्र**– இந்த விஷயத்தில், **वेदान्ताः** – உபநிஷத்துக்களும், **गुरवः**– ஆசார்யர்களும், **तथा** – அவ்வாறே, **अनुभवः** – அநுபவமும், **प्रमाणम्** – பிரமாணம்.

நாம் காணும் பிரபஞ்சம் முழுவதும் பொய். வாஸ்தவம் அல்ல. பொய் என்பதற்கு அடியோடு பிரபஞ்சம் இல்லை. என்றே, அதனால் ஒரு காரியமும் நடைபெறாது என்றோ பொருள் அல்ல. பிரபஞ்சத்தின் ஸ்வரூபத்தை நன்கு விசாரித்துப் பார்த்தோமானால், ஒருவிதத்திலும், அதாவது இருக்கிறது என்றோ, இல்லை என்றோ விளக்கிக் கூறமுடியாத நிலையில் இருப்பதால் உண்மையாக இல்லை, பொய் என்று தீர்மானிக்கிறோம். பிரபஞ்சம் பொய்யாக இருந்தாலும் அதனால் எல்லா வியவஹாரமும் நடைபெறலாம். உலக வியவஹாரம் நடைபெற பொருள் இருந்தால் போதும். அது உண்மையாக இருக்கவேண்டியதில்லை. கயிற்றில் தோன்றிய பொய்ப்பாம்பு பயத்தை உண்டுபண்ணு வதில்லையா. இது கயிறு என்று தெரிந்ததும் பாம்பு மறைந்து போவதுபோல் ப்ரஹ்மத்தை அறிந்ததும் பிரபஞ்சமும் மறைந்துபோய்விடும். அந்த ப்ரஹ்மம் ஒன்றே உண்மைப்பொருள். அதுவே ஆத்மா.

இந்த விஷயத்தை नेह नानास्ति किंचन' 'एकमेवाद्वितीयं' तत्सत्यं (நேஹ நாநாஸ்தி கிஞ்சந, ஏகமேவாத்விதீயம், தத்ஸத்யம்) முதலான உபநிஷத்துக்கள் நமக்குக் காட்டு கின்றன. இவைகளே பிரமாணம். உபநிஷத்துக்களின் மூலம் ஆத்மானுபவம் பெற்ற ஆசார்யர்களும் பிரமாணம். கடைசியாக அந்த ஆசார்யரின் உபதேசத்தால் அவரவர்களுக்கு ஏற்படும் ஸ்வானுபவமும் இதில் பிரமாணமாகும். ஆசார்யரிடமிருந்து உபநிஷத் மஹாவாக்யார்த்த உபதேசம் பெற்றால் தான் ஸ்வானுபவம் ஏற்படும் என்பதை இங்கு காட்டுகிறார். (26)

(அ) ப்ரஹ்மவித்தான பரமாசார்யாள் முன் சொல்லப் பட்ட பிரமாணங்களில் மூன்றாவதான ஸ்வாநுபவத்தை விவரித்துக் காட்டுகிறார்:-

**ब्रह्मैवाहं न संसारी न चाहं ब्रह्मण: पृथक् ।**
**नाहं देहो न मे देह: केवलोऽहं सनातन: ।। २७ ।।**

ப்ரஹ்மைவாஹம் ந ஸம்ஸாரீ ந சாஹம் ப்ரஹ்மண: ப்ருதக் ।
நாஹம் தேஹோ ந மே தேஹ: கேவலோஹம் ஸநாதன: ।।

**अहं** – நான், **ब्रह्मैव** – ப்ரஹ்மமே, **न संसारी** – ஸம்ஸாரி அல்ல, **अहं** – நான், **ब्रह्मण:** – ப்ரஹ்மத்தைக் காட்டிலும், **न पृथक्** – வேறு அல்ல. **अहं** – நான். **न देह:**– சரீரம் அல்ல. **देह:** – சரீரம், **न मे** – என்னுடையது அல்ல, **अहं** – நான், **सनातन:** – எப்பொழுதும் இருப்பவன், **केवल:** – தனிப் பட்டவன்.

ஆத்மாவுக்கும் ப்ரஹ்மத்திற்கும் கொஞ்சமும் வேற்றுமை கிடையாது. ஆத்மாவே ப்ரஹ்மம். ப்ரஹ்மமே ஆத்மா. அக்ஞானத்தால் இரண்டாகத் தோன்றுகிறதே தவிர உண்மையில் தத்வம் ஒன்றுதான். உலக தர்மங்கள் ஒன்றும் ஆத்மாவுக்குக் கிடையாது. அக்ஞான நிலையில் பாமரன் தேஹமே நான் என்று நினைக்கிறன். கொஞ்சம் படித்து விவேகம் பெற்றவன் தேஹத்தைக் காட்டிலும் வேறுகத் தன்னைத் தெரிந்துகொண்டாலும் இது என் தேஹம் என்று அபிமானம் கொள்கிறன். ஞானி தேஹத்தை நான் என்றே, தன்னுடையது என்றே எண்ணமாட்டான். எப்பொழுதும் மாறுபாடில்லாமல் ஒரேமாதிரியாக இருப்பதும் பிரபஞ் சத்துடன் ஒட்டாமல் தனித்து நிற்பதுமான ப்ரஹ்மத்தையே நான் என்று நினைப்பான். (27)

*(அ)* மூன்றுவது பிரமாணமான அநுபவத்தைக் கூறிவிட்டு முதலாவதான வேதாந்த பிரமாணத்தைக் காட்டுகிறர்:-

**एकमेवाद्वितीयं वै ब्रह्मणो नेह किंचन ।। २८ ।।**

ஏகமேவாத்விதீயம் வை ப்ரஹ்மணோ நேஹ கிஞ்சந ।।

*(ப்ரஹ்மம்)* **एकमेव** – ஒரே பொருள், **अद्वितीयम्** – இரண்டு அற்றது. **इह** – இங்கு **ब्रह्मण:** – ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுக, **किंचन** – ஒன்றும், **न** – இல்லை.

एकमेवाद्वितीयं नेह नानास्ति किंचन (ஏகமேவாத்விதீயம், நேஹ நாநாஸ்தி கிஞ்சன) என்பது உபநிஷத் வாக்யங்கள். தத்வம் ஒன்றுதான், இரண்டற்றது, ப்ரஹ்மத்தை காட்டிலும் வேருக ஒன்றும் இல்லை என்பது இதன் பொருள். உலகில் பொதுவாக ஒவ்வொரு பொருளிலும் மூன்றுவித வேற்றுமைகளைக் காணலாம். மனிதனை எடுத்துக்கொள்வோம். ஒரு மனிதன் மற்ெருரு மனிதனைக் காட்டிலும் வேருனவன். இது ஸஜாதீயபேதம் மனிதன் மரத்தைக்காட்டிலும் வேருனவன் என்பது விஜா தீயபேதம். மனிதன் ஒருவனுஞலும் அவனிடம் கை, கால் முதலான பல வேற்றுமைகள் காணப்படுகின்றன. இது ஸ்வகதபேதம். இம்மூன்று பேதங்களும் எல்லாப் பொருள்களிலும் இருக்கின்றன. ப்ரஹ்மத்தில் இம் மூன்று பேதங்களும் இல்லை என்பதைக் காட்டவே एकं (ஏகம்) एव (ஏவ), अद्वितीयम् (அத்விதீயம்) என்று மூன்று பதங்கள் உபநிஷத்தில் காணப்படுகின்றன. ப்ரஹ்மம் ஒன்று என்பதால் அதுபோன்ற வேறு பொருள் இல்லை, அதாவது ஸஜாதீய பேதம் இல்லை என்று கிடைக்கிறது. இரண்டற்றது என்பதால் விஜாதீய பேதம் இல்லை என்று கிடைக்கிறது. ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேருன இரண்டாவது பொருளே கிடையாது. ஒன்றுதான் என்பதால் ஸ்வகதபேதம் இல்லை. அதாவது உடலில் பல வேற்றுமைகள் இருப்பதுபோல் ப்ரஹ்மஸ்வரூபத்தில் சிறிதும் வேற்றுமை இல்லை. அது அகண்டம் என்று கிடைக்கிறது. மூன்றுவித வேற்றுமைகளும் அற்ற ப்ரஹ்மதத்வம் ஒன்றே உண்மைப்பொருள். அதுவே ஆத்மா என்பது தான் உபநிஷத் ஸித்தாத்தம். (28)

(அ) கடைசியாக ஆத்மானுபவம் ஏற்பட உபதேசம் செய்த ஸத்குருவையும் அநுக்ரஹம் செய்த ஈசுவர ஸ்வரூபத்தையும் அநுஸந்தானம் செய்வதுடன் தியான மார்க்கத்தைக்காட்டி நூலை உபஸம்ஹாரம் செய்கிருர் :-

हृदयकमलमध्ये दीपवद्वेदसारं
प्रणवमयमतर्क्यं योगिभिर्ध्यानगम्यम् ।

हरिगुरुशिवयोगं सर्वभूतस्थमेकं
सकृदपि मनसा वै चिन्तयेद्यः स मुक्तः ।। २९ ।।

ஹ்ருதயகமலமத்யே தீபவத் வேதஸாரம்
ப்ரணவமயமதர்க்யம் யோகிபிர் த்யாநகம்யம் ।
ஹரிகுருசிவயோகம் ஸர்வ பூதஸ்தமேகம்
ஸக்ருதபி மநஸா வை சிந்தயேத் ய: ஸ முக்த: ।।

यः - எவன், हदयकमलमध्ये - தாமரை போன்ற ஹிருதயத்தில், दीपवत् - தீபம்போல் ஒளியுள்ளதும், वेदसारं - உபநிஷத்தின் ஸாரமானதும், प्रणवमयं - ஒங்கார ஸ்வரூபமானதும், अतर्क्यं - புத்தியால் ஊஹிக்கமுடியாததும், योगिभिः - மனத்தை அடக்கிய யோகிகளால், ध्यानगम्यं - தியானத்தால் அறியக் கூடியதும், सर्वभूतस्थं - எல்லா பிராணிகளிடமும் இருப்பதும், एकं - ஒன்ருனதும், हरिगुरुसशिवयोगं - விஷ்ணு, ஆசார்யன், சிவன் இம்மூன்றும் சேர்ந்ததுமான ப்ரஹ்மதத்வத்தை, सकृदपि - ஒரு தடவை யாவது, मनसा - மனத்தால், चिन्तयेत् - தியானம் செய்கிருனே, सः - அவன், मुक्तः - முக்தன்

இந்நூலின் ஆரம்பத்தில் நானே பரப்ரஹ்மம் என்ற உறுதியான ஞானம் பெற்றவன்தான் முக்தன் என்று முக்தனுடைய லக்ஷணத்தைக் கூறி ஞானம் உறுதிப்பட ப்ரஹ்ம ஸ்வரூபத்தை அநுஸந்தானம் செய்யவேண்டிய முறைகளையும் விரிவாகக்காட்டி முடிவில் ஞானத்திற்கு ஸாதனமாக தியான யோகத்தை உபதேசிக்கிருர். எல்லா பிராணிகளிடமும் ஒரே ப்ரஹ்மதத்வம் விளங்குகிறது. அதை நம் புத்தியால் ஊஹித்துத் தெரிந்துகொள்ள முடியாது. மனத்தை அடக்கி இடைவிடாது தியானம் செய்தால்தான் அதை அறிந்து கொள்ளலாம். உபநிஷத்தின் தாத்பர்யம் இது தான். இதை தாமரை உருக்கொண்ட தன் ஹிருதயத்தில் ஜ்யோதி ஸ்வரூபமாக மனதால் இடைவிடாது சிந்திக்க வேண்டும். தன் ஆத்ம ஸ்வரூபமாக தியானம் செய்ய

வேண்டும். தியானம் செய்பவனுக்கு சிவன் வேறு, விஷ்ணு வேறு என்ற வேற்றுமையோ, குரு வேறு, ஈசுவரன் வேறு என்ற வேற்றுமையோ சிறிதும் தோன்றக்கூடாது. சிவனுகவும் விஷ்ணுவாகவும் தோன்றும் தத்வம் ஒன்றே. அதே தத்வம் தான் குருமூர்த்தியாகவும் விளங்குகிறது என்று தியானிக்க வேண்டும். இவ்வாறு சிவன், விஷ்ணு முதலான எல்லா தேவதாமூர்த்திகளும் ஆசார்யமூர்த்தியும் ஒன்று சேர்ந்த ஸகுண ப்ரஹ்ம ஸ்வரூபத்தை இடைவிடாது தியானம் செய்து வந்தால் ஈசுவரானுக்ரஹத்தால் ஸுலபமாக ஞானம் பெற்று முக்தனுவான்.

இங்கு எல்லோருக்கும் உபயோகப்படும்படியான முக்யமான உபதேசத்தை ஆசார்யாள் காட்டியிருக்கிருர். சிவன், விஷ்ணு முதலியவை ஒரே பரப்ரஹ்மத்தின் லீலா மூர்த்திகள். அவர்களுக்குள் ஏற்றத்தாழ்வோ, வேற்றுமையோ சிறிதும் பாராட்டக்கூடாது. அத்துடன் ஈசுவரனேக் காட்டிக் கொடுத்த ஆசார்யரை ஸாமான்ய மனிதனுக எண்ணுமல் அவரையும் ஈசுவரனுகவே நினேக்க வேண்டும். இது முக்யமாக கவனிக்கத் தகுந்தது. *(29)*

❀ ❀ ❀ ❀ ❀

**ஸ்ரீமதி R. லிங்கம்மாள் அவர்களின்**
**நினைவாக இந்நூலை வெளியிட்டவர்கள்**

ஸ்ரீமதி P.A.C.R. சேதுராமம்மாள்

ஸ்ரீ P.R. ராமசுப்பிரமணிய ராஜா

ஸ்ரீமதி R. சுதர்சனம்

ஸ்ரீ P.R. வெங்கட்ராம ராஜா

ஸ்ரீமதி V. நிர்மலா

செல்வி P.R.V. ஸ்ரீசந்தியா

செல்வன் P.R.V. அபிநவ் ராமசுப்பிரமணிய ராஜா

ஸ்ரீ N.K. ராம்குமார் ராஜா

ஸ்ரீமதி R. நளினா ராமலெக்ஷ்மி

செல்வன் N.R. ஹரீஷ் கிருஷ்ணகுமார் ராஜா

ஸ்ரீ S.R. ஸ்ரீராம் ராஜா

ஸ்ரீமதி S. சாரதா தீபா

செல்வன் S.S. ஜெயந்த் ராமச்சந்திர ராஜா

ஸ்ரீமதி N.R.K. சேதுராமம்மாள் குடும்பத்தினர்

ஸ்ரீ S.S. ராமச்சந்திர ராஜா &
ஸ்ரீமதி R. சிட்டம்மாள் குடும்பத்தினர்